



டாக்டர் அழகப்ப செட்டியார் கல்வி அறநிலையச் செயலர்

கலைக்காவலர் திரு. க. வெ. சித. வெ.

# வேங்கடாசலம் செட்டியார் அவர்கள்

# 60 ஆம் ஆண்டு நிறைவு விழா மலர்

டாக்டர் அழகப்ப செட்டியார் கல்வி அறநிலையச் செயலர்

கலைக்காவலர் திரு. க. வெ. சித. வெ.

# வேங்கடாசலம் செட்டியார் அவர்கள்

# 60 ஆம் ஆண்டு நிறைவு விழா மலர்






அழகப்பர் கல்வி நிலையங்களின்

அன்பளிப்பு

காரைக்குடி

## மணிவிழாக் குழு

தமிழ்க்கடல் ராய. சொக்கலிங்கன்
இயக்குநர், தமிழ் ஆராய்ச்சித்துறை, அழகப்பா கல்லூரி

திரு. ப. துரைக்கண்ணு முதலியார்
முதல்வர், அழகப்பா ஆசிரியப் பயிற்சிக் கல்லூரி

திரு. வா. பெ. விசயராகவன்
முதல்வர், அழகப்பா பொறியியற் கல்லூரி

திரு. ம. ரா. சுப்பையா
முதல்வர், அழகப்பா பல்தொழில் கல்லூரி

திரு. மோ. இராப்சன்
முதல்வர், அழகப்பா உடற்கல்விக் கல்லூரி

திரு. டி. வி. எஸ். மணியன்
மேலவர், அழகப்பா கல்வி அறநிலையம்

டாக்டர் வ. சுப. மாணிக்கம் (கூட்டுநர்)
முதல்வர், அழகப்பா கல்லூரி



# உள்ளுறை

பாராட்டுரைகள் :

வாழ்த்துப்பாக்கள் :

பொருட் கட்டுரைகள் :

# நன்றியுரை

வள்ளல் அழகப்பர் நிறுவிய அனைத்துக் கல்வி நிலையங்களின் நன்றிக் காணிக்கையாக அறநிலையச் செயலர், கலைக் காவலர் வேங்கடாசலனார்க்கு இம் மணிவிழா மலரைப் படைக்கின்றோம்.

அழகப்பர் நிலையங்களின் ஆசிரியர்களும், மாணவர்களும், அன்பர்களும் உவந்து அளித்த நன்கொடையால் இம்மலர் உருவாகின்றது.

பாரத நாட்டுப் பல்துறைப் பெருமக்களின் வாழ்த்துரையாலும், பாராட்டுரையாலும், கவிதையாலும், கட்டுரையாலும் இம்மலர் மணம் பெறுகின்றது.

மணிவிழாக்குழு உறுப்பினர்களின் அறிவுத்துணையாலும், அன்பர்களின் அயரா உழைப்பினாலும் அச்சகத்தின் ஒத்துழைப்பாலும் இம் மணி மலர் வனப்புடையதாக விளங்கிக் குறுகிய காலத்தில் வெளிவருகிறது.

பல்வகையாலும் உதவி செய்த எல்லார்க்கும் நன்றி.

அன்பர்களின் வாழ்த்தினால் கலைக்காவலர் வேங்கடாசலனார் பல்லாண்டு பல்லாண்டு நலமாக வாழ்ந்து கல்விக்கும் நாட்டுக்கும் நிலையான தொண்டு செய்வாராக என்று இறைவனை வாழ்த்துகிறோம்.

**வ. சுப. மாணிக்கம்**
கூட்டுநர்,
மணிவிழாக்குழு.

அழகப்பாபுரம்,
1-12-66.

## கலைக்காவலர்
## திரு. க. வெ. சித. வெ. வேங்கடாசலஞ் செட்டியார்
# வாழ்க்கை வரலாறு

டாக்டர் வ. சுப. மாணிக்கம், முதல்வர், அழகப்பா கல்லூரி

திரு க. வெ. சித. வெ. வேங்கடாசலஞ்செட்டியார் தான் பிறந்த ஊருக்கும், நாட்டிற்கும், மொழிக்கும், மக்கட்கும் பலவகையில் தொண்டாற்றி, இன்று (18.10.66) அறுபத்தோராம் ஆண்டு கொண்டாடுகின்றார். இத் தமிழ்ப் பெருமகன் தெய்வப்பற்றும், செயலாண்மையும், எளிய தோற்றமும், அரிய நோக்கமும் ஆன பல பண்புகள் கொண்டவர். இவர்தம் முன்னோர் வரலாற்றை முதலில் அறிவது, இவருடைய வாழ்க்கைக் கூறுகளை விளங்கிக் கொள்வதற்குப் பெருந்துணை செய்யும்.

## 1

ஒருவன் பெற்றுள்ள பல பண்புகளில், சில பண்புகள் பரம்பரைக் குணங்களாக இருக்கும். பெற்றோர்களின் குணச் சாயல்கள் பிள்ளைகளிடம் பற்றி நிற்பது உயிரியல்பு. திரு வே. அவர்கள் இருக்குமிடமெல்லாம், அரியக்குடிப் பெருமாளின் உருவமும் அருகிருக்கும். சிவபூசை செய்யும் போதுகூட, பெருமாள் உருவத்தோடு பிரியாது இருப்பர். இத்தெய்வப் பற்று இவர்க்கு முன்னோரின் சொத்து. இவர் மூதாதையார் இவர்க்கு வழங்கிய செல்வம் இத்தெய்வச் செல்வமாகும்.

இவர் தந்தையார் க. வெ. சித. சிதம்பரஞ்செட்டியார் அரியக்குடிக்கே உரிய குடி ஆனவர். காரைக்குடிக்குக் கிழக்கே ஒரு கல் தொலைவிலுள்ள அரியக்குடி ''தென் திருப்பதி'' என்று பலராலும் பாராட்டப் பெறுவது. அங்கு பெருமாள் கோவிலை நகரத்தார்கள் துணையைத்திரட்டித் தானேமுன்னின்று கட்டி முடித்தார். வெள்ளி ரதம் ஒரு லட்சரூபாய் பெறுமான அளவில் செய்து வழங்கினர். 'ஆளும் பணியும் அடியேனைக் கொண்டான்'' என்று மகிழ்ந்தார். அரியக்குடித் தொண்டராகிய தந்தையார் வாழ்வில் ஒரு தெய்வ நிகழ்ச்சி நடந்தது.

'பருப்பதத்துக் கயல்பொறித்த
பாண்டியர் குலபதிபோல்

திருப்பொலிந்த சேவடியென்
சென்னியின்மேல் பொறித்தார்'

என்று பெரியாழ்வார் கூறியதுபோல, சிதம்பரனார் திருத் தலையில் திருமண் அடையாளம் தோன்றலாயிற்று. இது 1912-இல் நிகழ்ந்தது. இத்தெய்வ அடையாளம் அன்று வெளிப் படையாகப் பலருக்கும் தெரிந்ததொன்று. சிதம்பரஞ்செட்டி யார் சமரச மனப்பான்மையினர். பெருமாள் பற்று மிக்கவ ராக இருந்தாலும் சிவப்பற்றில் பின் வாங்கியவரில்லை. இந்து மதத்தில் அரி, அயன், அரன் என்ற மும்மூர்த்திகளும் பாராட் டப்படும் பெருந்தெய்வங்களாகும். கொங்குநாட்டுக் கொடு முடியில் இம்மூவருக்குமே ஆலயங்கள் அமைத்தார் சிதம்பரனார் என்பதிலிருந்து அவர்தம் சமரச மனப்பான்மை நன்கு விளங்கு கிறது.

சிதம்பரஞ்செட்டியாருக்கு மீனாட்சி ஆச்சி தெய்வானை ஆச்சி என மனைவியர் இருவர் உண்டு. முதல் மனைவியிடத்து மூன்று ஆண் மக்களும் இரு பெண் மக்களும் பிறந்தனர். அரியக்குடிக்குக் கோயிலுக்கு இராச கோபுரம் இல்லாதிருந்ததை எண்ணி மக்கள் கருப்பஞ்செட்டியாரும், கோவிந்தன் செட்டி யாரும் பெரும் பொருட்செலவில் அதனைக்கட்டி, தந்தையின் எண்ணத்தை நிறைவு செய்தனர். ஆடி இங்ஙனம் தந்தையின் அரியக்குடிப்பற்று வழிவழி ஓடி வரலாயிற்று.

இரண்டாவது மனைவியாகிய தெய்வானை ஆச்சியிடத்து இரு ஆண் மக்களும் ஒரு பெண் மகவும் பிறந்தனர். மணி விழாக் கொண்டாடும் வேங்கடாசலனார் மூத்த மகனாவர். வெள்ளைச்சி ஆச்சி என ஒரு சகோதரியும் அரங்கநாதன் என ஒரு தம்பியும் இவருக்குப்பின் பிறந்தாராவர். தாய் தெய் வானை ஆச்சி இன்று எண்பது வயதோடு உடல் நலமாக இருக் கின்றார் என்பது குறிப்பிடத்தக்கது. திரு. வே. தன் தாயி டத்துப் பேரன்புடையவர் என்பது மாத்திரமன்று; தாய் சொல்லைக் கடவாத தனயனுமாவர். தன் பல அலுவல்களுக் கிடையேயும், அடிக்கடி ஊர் வந்து தாயோடு அளவளாவி அவர் நலத்தைப் பேணி வாழ்த்துப் பெறுவது வழக்கம். தாயின் தெய்வப்பற்றும், இல்லறச் சிறப்பும், மகன் நினைவுக்கு இடையறாது வருவதுண்டு.

## 2

திரு. வே. பராபவ ஆண்டு ஐப்பசி ரு-ஆம் தேதி ஞாயிற்றுக் கிழமை (21-10-1906) கேட்டை ஓரையில் பிறந்தார். அப் போது கானாடுகாத்தானில் தொடக்கப் பள்ளியே இருந்தது.

சில ஆண்டுகள் அங்குப் படித்தபின், சில ஆண்டுகள் திருமயம் தொடக்கப் பள்ளியிலும் சென்று படித்து வந்தார். அதன்பின், புதுக்கோட்டை அரசர் கிளேக்கல்லூரியில் ஏழாவது வரை படித்தார். அவ்வளவில் இவர் படிப்பு முடிவெய்திற்று. ஐம்பது ஆண்டுகளுக்குமுன் செட்டி நாட்டுப் பகுதியில் தன் மக்களே இவ்வளவு வகுப்புவரை படிக்கவைப்பதே அரிய முன்னேற்றம் என்று கருதவேண்டும். பொதுவாக, பெருக்கல் வாய்ப்பாடு, ஓரளவு எழுத்துக்கூட்டிப் படிக்கத் தெரிதல், இவ்வளவில் படிப்பை நிறுத்திப் பிள்ளைகளேத் தனவணிகத் தொழிலில் பழக்குவது நகரத்தார் மரபாக இருந்தது. திரு. வே. கூட்டங்களில் ஆங்கிலத்திலோ தமிழிலோ பேசும் போது, அவரைக் கல்லூரிப் பட்டதாரி என்றே கருதுமாறு அவர் சொல்வன்மையும், கருத்து வன்மையும் இருக்கும். ஆனால் அங்ஙனம் கருதுவதற்கு விடுவதில்லே. அவையடக்கம் கூறுவார்போலத் தான், ஏழாவது வரையில்தான் படித்தவன் என்றும், அதிலும் இரண்டுமுறை தவறியவன் என்றும் உண்மையை அவையோர் சிரிக்கவும் வியக்கவும் கூறுவதுண்டு. ஒரு முறை அழகப்பா பயிற்சிக் கல்லூரியில் உயர்நிலேப்பள்ளித் தலைமையாசிரியர்கள் மாநில மாநாடு 2-6-65-இல் நடைபெற்றது. அதனைத் திரு. வே. திறந்துவைத்து கல்விபற்றிய தன் கருத்துக்களே நிதி பற்றிய தன் அனுபவத்திலிருந்து எடுத்துக்கூறினர். கூறுங்கால், தன் படிப்பு சின்னவகுப்பளவிலேயே முற்றுப்பெற்றது என்பதனையும் கூறிக்காட்டினர். அம்மாநாட்டுக்குத் தலைமை தாங்கிய மாநிலக் கல்வி இயக்குநர் நெ. து. சுந்தரவடிவேலு அவர்கள் திரு. வே-யின் கல்விக் கருத்துக்களேக் கூர்ந்து செவிமடுத்தபின் அவையோரைப் பார்த்துக் கூறியதாவது, ''திரு. வே. அவர்களின் மாமனர் அண்ணமலேயரசர் சாதாரணமாகவே படித்தவராக இருந்தாலும் பெரும் பல்கலைக்கழகத்தை நிறுவினர். உயர்நிலேத் தொடக்கப்பள்ளி வகுப்பு முற்றுப்பெருத வேங்கடாசலனர் அழகப்பர் வட்டத்தில் உள்ள தொடக்கப் பள்ளி, மாண்டிசோரிப்பள்ளி, ஆதாரப்பள்ளி, ஆயத்தப்பள்ளி உயர்நிலேப்பள்ளி, கலேக்கல்லூரி, பயிற்சிக்கல்லூரி, பொறியியற் கல்லூரி, பல்தொழிற்கல்லூரி, உடலியற்கல்லூரி இவ்வனைத்தையும், கட்டிக் காத்துக் கல்வி வளர்க்கும் செயலராக விளங்குகிருர். இதனல் நாம் அறிவதென்ன? ஒருவன் படிப்புவேறு: அவன் ஆற்றல்வேறு. வகுப்பில் மதிப்பெண் வ்ாங்கப் பலமுறை ஒருவன் தவறிவிட்டான் என்பதற்காக அவனே ஆற்றலில்லாதவன் என்று கருதக்கூடாது. சிந்திக்கும் திறமே சிறந்த திறன் இவ்வாறு கல்வியக்குநர் திரு. வேயின் மதிநுட்பத்தை மாநாட்டில் வெளிப்படுத்தினர்.

பொறியியற்கல்லூரியில் முருகப்பா கலை மண்டபத் திறப்பு விழா 4-6-66-இல் நிகழ்ந்தபோது, மாநில முதலமைச்சர் திரு. பக்தவச்சலம் மண்டபத்திறப்புக்கு வந்திருந்தார். வரவேற்புரை கூறிய செயலர் வேங்கடாசலனூர், 'இம்மண்டபம் மாண வர்களுக்கு மிகவும் பயன்படவேண்டும். நான் அவ்வளவு படித்தவனில்லை. என்றாலும் இளைஞர்களுக்கு அறவுரைசொல்ல எனக்கு உரிமை உண்டு என்று அவையடக்கமாகக் கூறினர். அதுகேட்ட முதன் மந்திரியார் ''சி.வி. சிடி. வி. படிக்காத போதே இவ்வளவு பெருங்காரியங்கள் செய்கின்றார். படித்திருந்தால் உலகமே தாங்காது என்று அவையோர் கையொலி செய்யப் பாராட்டினர்.

திரு. வே. கேள்வியறிவு மிக்கவர். தான்செல்லும் கூட்டம் இலக்கியமாக இருந்தாலும், இசை, நாடகமாக இருந்தாலும் முழுவதும் இருந்து கேட்கும் விருப்பமுடையவர். அண்ணாமலையரசர் தம் காலத்துப் பெரும்புலவர்களையெல்லாம் மதித்தவர் என்பதும், போசராசன் தன் அவைக்களத்துச் சிறந்த வடமொழிப்புலவர்களை அணைத்து ஆதரித்ததுபோல இவ்வரசரும் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் சிறந்த தமிழ்ப் புலவர்களை அழைத்து வந்து ஆதரித்தவர் என்பதும், அதனால் எல்லாப் புலவர்களாலும் பாடப்பெற்ற புரவலர் என்பதும் நாமறிந்த வரலாறாகும். இவ்வரசரின் இரண்டாவது மருமகன் நம் வேங்கடாசலனூர். மேலும் இம்மருகரின் ஆற்றலைக்கண்டு அரசருக்கு இவர்பால் தனி மதிப்பு. அவ்வரசரிடத்து இம்மருமகரும் பேரன்பும் நன்றியும் உடையவர். தன்னுடைய செயலாற்றலுக்கு மாமனூர் பழக்கமே காரணம் என்று திரு. வே. சொல்லிக்கொள்வார்.

மாமனூரின் திறங்களும் பண்புகளும் இம் மருமகனூரிடம் படிந்திருப்பதைக் காணலாம். மாமனூர் ஆதரித்த புலவர்களோடு இவர் அடிக்கடி பழகுவதுண்டு. அரசரின் மருமகராதலால் புலவர்களும் இவரை மதிப்போடு வரவேற்றுப் பாராட்டுவதுண்டு. திரு. வே. அவர்களிடம் நிலையான ஒரு நீடித்த பண்பை நாம் காண்கின்றோம். அவருக்குப் புலவர்கள் சூழவும், கற்றவர்கள் சூழவும், கலகலவெனப் பேசிக்கொண்டிருக்கும் ஆசை உண்டு. தம் பேச்சுக்கிடையே மகாமகோபாத்தியாய உ.வே. சாமிநாதையர், பண்டிதமணி கதிரேசஞ் செட்டியார், மகாவித்துவான் இராகவையங்கார், சோமசுந்தரபாரதியார், விபுலானந்தர் எனப் பெரும் புலவர்களை நினைவுகொள்வார். இப்புலமைத் தொடர்பு, இளமையில் இருந்ததுபோலவே இம் முதுமையிலும் அவருக்குவாய்த்தது. தமிழ்க்கடல் ராய. சொ. அவர்களின் நட்பையும் உரையாடலையும் இன்று பெற்று மகிழ்கின்றார் திரு. வேங்கடாசலனூர்.

இராய. சொ.வைத் தம் குருநாதன் என்று திரு.வே.கூறிக் கொள்வார். ஆசிரியர் என்ற முறையில், தாம் காரைக்குடி வந்தபோதெல்லாம்., இராய. சொ. வை. அவரில்லத்துத் தாம் சென்று பார்ப்பதுண்டு. பார்த்து, சிலமணிப்பொழுதாவது உடனிருந்து, பலபாடல்களை அவர் சொல்லக்கேட்டு அக்கருத்தினை வாங்கிக்கொள்வதுண்டு. இராய. சொ. வின் நெருங்கிய பழக்கம், மூன்றாண்டுகளாக இவருக்குக் கிடைத்துள்ளது. இப்பேற்றினை, ஒரு தனிப்பேறாகக் கருதி மகிழ்வர். அதனால் சிவமணியாம் இராய. சொ. வின் துணையுடன் 275-இல் 269 சைவத்தலங்களையும் 108-இல் 98 வைணவத்தலங்களையும் காணும் எண்ணமும் கண்டுகைதொழுத சிறப்பும் பெறலாயினர். 28-1-65-இல் தலப் பயணத்தைத் தொடங்கி 367 தலங்களையும் கண்டுதொழுது 19-3-66-இல்முடித்தனர். தம் மணி விழாவுக்குள் இத்தலப்பயணங்களைத் தொடங்கி முடிக்கவேண்டும் என்று ஓர் குறிக்கோள் கொண்டார். புறத்துறையில், பொருட்டுறையில், எண்ணியவற்றைச் சிலர் திறம்பட முடித்துவிடுவர். சமயத்துறையில், தெய்வக்கடமையில் அலட்சியமாகக் காரியங்களைச் செய்வர். ஆனால், வேங்கடாசலனார் திருத்தலப் பயணங்களுக்குத் திட்டமிட்ட முறையே ஒரு தனிவகை. குறித்தநாளில் குறித்த காலத்துக் குறித்ததலத்து இறைவனை இறைஞ்சும்பணி எவ்வகையானும் தடைப்படலாகாது என்ற கருத்தால், அனைத்து வசதிகளும் கொண்ட ஒரு பெரும் கார் வைத்திருந்தார். அந்தக்காரில் ஒரு சிறு அறை. பன்னிருதிருமுறைகளும் நாலாயிரத்திவ்யபிரபந்தமும் அவ்வறையில் இருக்கும். ஓர் தலத்திற்குச் சென்று இறைவனை வழிபட்டதும் அத்தலத்தின் பாசுரங்களை ஆர அமர்ந்து ஓதிமுடிப்பது வழக்கம். இவ்வாறு தேவாரப்பாடல்கள் எண்ணாயிரத்தையும், திவ்விய பிரபந்தம் நாலாயிரத்தையும் ஓதியும் கேட்டும் முடித்துள்ளார் என்றால், அவர் ஞானத்தமிழுக்கு ஒரு தனிச்சிறப்புண்டு. பெரும் சமய அன்பர்களும் தலப் பாசுரங்களைத் தம் வீட்டிலிருந்தே ஓதியிருப்பர். இவரோ, நாயன்மார்களும் ஆழ்வார்களும் எவ்விடத்து எப்பாசுரத்தைப் பாடினார்களோ, அவ்விடத்து அப்பாசுரத்தை இருந்து ஓதினார் என்றால், சமய அன்பர்களுள் இவர் பெற்றபேறு ஒரு தனிப் பேறென்றே கருதவேண்டும். அங்ஙனம் தலப்பயணம் செய்யும்போது தனித்தோ ஓரிருவர் கூடவோ செல்வதில்லை.

''என்னை யுடையவன்வந்து என்னுடனாய் என்னளவில்
என்னையும் தன்னாளாக் கொள்ளுதலால்-என்னை

அறியப்பெற் றேனறிந்த அன்பருக்கே ஆளாய்ச்
செறியப்பெற் றேன்குழுவிற் சென்று''

என்று திருக்களிற்றுப்படியார் சொல்லியபடி, சம அன்பர் பலரையும் கூட அழைத்துக் கொண்டு, தலயாத்திரை செய்தனர். இதனுல், இவர் தெளிந்த சமயப்பற்றுப் புலனுகும். வேங்கடாசலனுர் தமிழகத்தின் இருபெரும் சமயங்களையும் வேற்றுமையெண்ணமின்றி மதிப்பவர். அவ்வவ்விடத்துள்ள இருசமயத் தலங்களையும் ஒருசேரக் கை தொழுதனர். ஒரு சாரார் சைவத்தலங்களுக்கே சென்றதுண்டு. ஒருசாரார் வைணவத் தலங்களுக்கே சென்றதுண்டு. இருதலங்களையும் ஒப்பமதித்துச் செல்வார் நாட்டில் அரியர். அவ்வரியவருள் வேங்கடாசலனுர் ஒருவர். வழிவழி அரியக்குடி அன்பினர் ஆதலின் வைணவத் தலங்களுக்கும் சென்று வணங்குதல் அவருக்கு இயல்பாக எழுந்தது. அவர் தலப்பயணத்துக்கு உறுதுணையாக இருந்த தமிழ்க் கடல் இராய. சொ. அவர்கள் சிவபூசை செய்யும் சிவமணியாயினும் ஆழ்வாரமுதம் உண்டவர். முதல் ஆழ்வார்கள் போலச் சமயத்தில் சமரச மனப்பான்மை கொண்டவர்.

## 4

இவர் மனைவியார் மீனுட்சி ஆச்சி அண்ணுமலையரசரின் இரண்டாவது மகள். இப்பெண்மணி ஆருவது வகுப்புவரை திரு. வே. பயின்ற அதே பள்ளியில் படித்தவர். இயல்பான தெய்வப்பற்றும், அரசகுடிக்கு ஏற்றபெருந்தன்மையும் உடையவர். அக்காலத்துக்குக் குழந்தைப் பருவத்திலேயே மணம் செய்யும் மரபு இருந்தமையின், பதினெரு வயதுடைய வேங்கடாசலனுருக்கும் பத்துவயதுடைய மீனுட்சி ஆச்சிக்கும் திருமணம் 1917-இல் நிகழலாயிற்று. பல்லாண்டுகள்வரை மகப்பேறில்லை. மக்கட்பேறு இல்லறத்திற்கு நன்கலம் என்பர் திருவள்ளுவர். எல்லாவகையாலும் எல்லாப்பேறுகளும் உடைய இப்பெருங் குடியினர்க்கு மக்கட் பேறில்லாதது பெருங்கவலையாக இருந்தது. இனி இப்பேற்றுக்கு என் செய்வது என்று எண்ணியபோது அரியக்குடிப் பெருமாளின் அருளால் குழந்தைச் செல்வம் கிடைத்தால் வைத்துக்கொள்வோம்; கிடைக்காவிட்டால் பிள்ளை கூட்டுவதில்லை; சொத்துக்களைச் சுற்றத்தார் பகிர்ந்து கொள்ளுமாறு விட்டுவிடுவோம் என்று ஓர் எண்ணம் தோன்றலாயிற்று; அரியக்குடியானைத் தம் குடிவழி நிலைக்க அருள்செய்கவென்று தொழுதனர். பெருமாள் நெடுநாள் இவர்களைச் சோதிக்கவில்லை.

1932-இல் முதற்பெண் குழந்தை பிறந்தது. இரண்டாண்டிற்குப்பின் மற்றும் ஓர் பெண்மகவு பிறந்தது; முதல் மகளார்

பெயர் மீனாட்சி. இரண்டாவது மகளார் பெயர் சீதாலட்சுமி. பெண்மகப்பேற்றால் இவர்கட்கு நிறைந்த மகிழ்ச்சி இருந்த தெனினும், குடிவழிக்கு உரிய ஆண்மகவு வேண்டி, அரியக்குடி யானை மீண்டும் அடைந்தனர். ஏழாண்டுகட்குப்பின் 1942-இல் சிதம்பரம் என்னும் ஆண் மகன் பிறந்தான்.

மீனாட்சி ஆச்சி தெய்வப்பற்றுடையவர் என்பது மாத்திர மில்லை. திருத்தலங்கட்குச் சென்று வழிபாடு செய்யும் இயல் பினர். தலப்பயணம் தனக்கு முன்னே தன் மனைவி தொடங்கி விட்டாள் என்றும், அவள் இருந்தபோது அவளோடு உடன் சென்று அப்பயணம் செய்யும்பேறு தனக்குக் கிடைக்கவில்லை என்றும், 1962 செப்டம்பர் 15-இல் அவள் இறந்தபின்னரே திருத்தலப்பயண வேட்கை தனக்கேற்பட்டது என்றும், இத் துறையில் தனக்கு எண்ணம் ஊட்டியது மனைவியே என்றும் வேங்கடாசலனார் திருத்தலப்பயணக்காலத்து மனைவியின்மையை நினைத்து ஒருவாறு வருத்தமும், அவளுக்குப்பின் அவள் எண் ணத்தைச் செயலாக்கியது நினைத்து ஒருவாறு மகிழ்ச்சியும் அடை வர். திருத்தலப்பயண நூலின் பதிப்புரையில் தன் மனைவியின் தெய்வப்பற்றுப்பற்றி வருத்தமும் உணர்ச்சியும் ததும்பும் முறை யில் வேங்கடாசலனார் எழுதியுள்ள பகுதி வருமாறு:

''ஆலயவழிபாடு என்னும் அரியதொரு நற்பழக்கத்தை என் மனைவி நன்கு கடைப்பிடித்தாள். பாடல்பெற்ற தலங்க ளுக்கும், புகழ்பெற்ற பிற தலங்களுக்கும் அடிக்கடி செல்வாள். என்னையும் அந்த நல்ல பழக்கத்தில் ஈடுபடுத்த முயன்றாள். ஆனால் அதற்கான வாய்ப்பும் பேறும் எனக்குக் கிட்டவில்லை. என் மனைவியின் உடல்நிலை திடீரென்று பாதிக்கப்பட்டது. 15-9-62 அன்று அவள் இறைவன் திருவடிநிழலையடைந்தாள். மணி வாசகப்பெருமான் அருளிய திருவாசகமாம் தேனமுதிலிருந்து, 'சிவபுராணம்' ஓதக்கேட்டு, விட்ட வரியை நினைவுபடுத்தி, தன் னைத் தூய்மைப் படுத்திக்கொண்டு, புண்ணிய நிறைவையும் பெற்றாள். அவளது மறைவு எனக்குப் பெரும் அதிர்ச்சியைத் தந்தது. அதிர்ச்சி நீக்கம் விரைவில் கிட்டக்கூடிய வகையைச் சேர்ந்ததா? இல்லையே.''

செட்டிநாட்டுப் பெண்களுக்குச் சேலை வாங்குவதில் பெரும் ஈடுபாடுண்டு. கடைக்காரன் எவ்வளவு ரகங்களை எடுத்துக் காட்டினாலும், எதையும் உடனே வாங்கும் தெளிவு பிறப்ப தில்லை. கடைக்காரனிடமிருந்து வாங்கிக்கொண்டுபோய், பிறரி டம் காட்டித் திரும்பக் கொண்டுவந்து, வேண்டுமென்றால் வாங் குவது வழக்கம். இது செட்டிநாட்டுச் சேலை வணிகர்கட்குத் தெரியும். ஆச்சிமார்கள் எடுத்துக் கொண்டுபோய்க் காட்டி வருமாறு பலரகச் சேலைகளைக் கொடுத்துவிடுவர். வேங்கடாசல

ஞர் ஆச்சியுடன் காசி சென்றிருந்தபோது ஒரு சுவையான நிகழ்ச்சி நடந்தது. காசிப்பட்டுக் கடைகளுக்குச் சென்று மூன்று நாட்கள் ஆயிரக்கணக்கான சேலைகளைப் புரட்டிப்பார்த்தும் ஒன்றுகூட வாங்கவில்லை. உடனே செட்டியார்க்குக் காசியில் அரியக்குடி நினைவு வந்தது. ''அரியக்குடிப் பெருமாளுக்குப் பட்டு வாங்கினுல் எல்லாம் முடிந்துவிடும்'' என்ருர் செட்டியார்; சரியென்று மூன்று பட்டுத்துணிகளைப் பெருமாளுக்கு ஆச்சி எடுத்துவைத்தார்; நல்ல துணிகள் என்று கூறி ஆச்சிக்கு என்று மூன்று பட்டுச் சேலைகளைச் செட்டியாரே எடுத்து வைத்தாராம். அரியக்குடியான் அருளால் அம்மூன்றில் ஒன்று ஆச்சிக்குப் பிடித்ததாம்.

மீனுட்சி ஆச்சி உலகியல் விவகாரங்கள் நன்கு தெரிந்தவர். இவ்வகையில், தன் கணவனுருக்குத் துணையாக இருந்தவர்; வேங்கடாசலனுர் 25-6-1955-இல் அழகப்பா அறநிலையக்குழுவின் செயலாளர் ஆனுர். வள்ளல் அழகப்பர் வேண்டுகோட்படி இப்பொறுப்பை ஏற்ருர். இரண்டாண்டிற்குப் பின் வள்ளலுக்கும் செயலருக்கும் ஒரு காரியமாக மனவேற்றுமை ஏற்பட்டது. உடனே வேங்கடாசலனுர் செயலர் பதவியை ராசினுமா செய்தார். யார் சொல்லியும் திரும்பப் பெற மறுத்துவிட்டார். யார் சொன்னுல் வே. அவர்கள் தட்டமாட்டார் என நெடுநேரம் சிந்தித்துப்பார்த்தார் அழகப்பர். ஒரு வழி தோன்றிற்று. வேங்கடாசலனுர் மனைவி மீனுட்சி ஆச்சியாரைத் தொலைபேசியில் கூப்பிட்டு ''மனவேற்றுமைக்கு நானே காரணம்; நான் செய்தது தான் தவறு; தங்கள் கணவரை அதனை மன்னித்துக் கொள்ளச் சொல்லிச் செயலர் வேலையைத் தொடர்ந்து பார்க்கச் சொல்லுங்கள்; உடனே ராசினுமாவைத் திரும்பப் பெறச் சொல்லுங்கள்'' என்று கேட்டுக்கொண்டார். இதன் பின்னும் நாட்கள் மூன்று கழிந்தன; வேலைகளின் மிகுதியால் கணவரைக்கண்டு பேசும் வாய்ப்பு ஆச்சிக்குக் கிட்டவில்லை. நான்காம் நாள், செட்டியார் வரவை எதிர்பார்த்துக் காத்திருந்து வள்ளலின் வேண்டுகோளை எடுத்துச் சொல்லி, செயலர் பதவியில் மீண்டும் வைத்த பெருமை ஆச்சியைச் சாரும். இங்ஙனம் கணவனுர் மனம்கொள்ளுமாறு காரணங்களை எடுத்துச்சொல்லி, அவர் கருத்தை மாற்றவல்ல திறம் உடையவர் ஆச்சியார். இதன்பின் வள்ளல் அவர்கள், வேங்கடாசலனுரைக் கண்டபோது கண்கலங்கினுர். ''நான் கேட்பதைக்கேட்கிறேன்; நீங்கள் செய்வதைச் செய்யுங்கள். செய்யாவிட்டாலும் பரவாயில்லை; இனி எக்காரணத்துக்காகவும், ராசினுமா செய்யக் கூடாது'' என்று ஓர் அன்பானவேண்டுகோளை வள்ளல் விடுத்தார்.

மனைவியின் நல்லெண்ணமும் வள்ளலின் வேண்டுகோளும் காரணமாக வேங்கடாசலனுர் இன்றும் அறநிலையக்குழுச் செய

லராக விளங்குகிறார் மனைவிமேலும் வள்ளல் மேலும் கொண்ட பற்றுக்காரணமாகத்தான் இப்பதவியில் நீடித்திருக்கிறார். தன் வள்ளல் நண்பன் நிறுவிய கல்விநிலையங்களைக் கலங்காது வாழ வைக்கவேண்டும் என்ற பற்றுத்தவிர, அவர்க்கு இப்பதவியில் வேறொரு பற்றில்லை.

5

வேங்கடாசலனாருக்குச் சிதம்பரம் என்னும் ஒரு மகனார் உண்டு. உயர் நிலைப்பள்ளிவரை பயின்றவர். தணிக்கை வரவு செலவுத்திட்டம் பற்றிய பயிற்சி பெற்றவர். 24 வயதுடைய இவர் வணிகத் தொடர்பாக பன்முறை மேனாடுசென்று வந்துள்ளார். இப்போது இந்தியன் ரேடியேட்டர்சில் ஒரு பெரும் அலுவலராகப் பணிபுரிந்து வருகிறார். எளிமையான குணமும் பலரோடு கலந்து பழகும் பண்பும், பல்துறையிலும் முன்னேறும் நோக்கமும் உடையவர். இவர் வேங்கடாசலனாரின் மைத்துனரும் அரசர் அண்ணாமலையாரின் மகனுமான சிதம்பரம் செட்டியாரின் ஒரே மகள் சீதாலட்சுமியை மணந்துள்ளார். இம்மருமகள் பி.ஏ. பட்டம் பெற்றவர்.

வேங்கடாசலனாரின் முதன் மகள் மீனாட்சி பி.ஏ. வரை படித்தவர். இவர் திரு எம். வி. அருணாசலம் என்பவரின் மனைவியாவர். முதன் மருமகனாகிய திரு அருணாசலம் நிலவியல் பி. சயி (ஆனர்சு) படித்தவர். சென்னை வணிகக்குழுவின் தலைவராகப் பணி செய்தவர். டி.ஐ. சைக்கிள் கம்பெனி, கார்பொரண்டம் யூனிவர்சல் கம்பெனி இவற்றின் நிர்வாக இயக்குநராக விளங்குகிறார். பன்முறை வெளிநாடு சென்று வணிகத்துறையில் பெரும் பயிற்சி பெற்றவர். வெள்ளையன், வள்ளி, வேங்கடாசலம் என்னும் குழந்தைச் செல்வங்கள் இவர்கட்கு உண்டு.

வேங்கடாசலனாரின் இரண்டாவது மகள் சீதாலட்சுமி,, இண்டர்மீடியட்டு கல்லூரிப்படிப்பு வரை படித்தவர். இவர் எம். எம். முத்தையா செட்டியாரின் வாழ்க்கைத்துணைவியாவார். இம்மருமகன் பொருளியல் பி.ஏ. (ஆனர்சு) பட்டம் பெற்றவர். பன்முறை வெளிநாடு சென்று வந்தவர். கார்பொரண்டம் யூனிவர்சல் எனும் கம்பெனியில் ஓர் நிர்வாக இயக்குநர். முருகப்பன், வேங்கடாசலம் என்ற குழந்தைச் செல்வங்கள் இவர்கட்கு உண்டு.

6

முன்னரே வேங்கடாசலனாரின் தமிழ்ப்பற்றினையும், தமிழ்ப் புலவர்களின் தொடர்பையும் கண்டோம். ஆண்டுதோறும் குற்றாலத்தில் 15 நாட்கள் இவர் தங்குவது வழக்கம். குற்றாலம் என்னும்போது டி.கே.சி. அவர்கள் நினைவு யார்க்கும் வரும்.

''எனக்குத் தமிழ்ப்பற்றுண்டாக்கியவர், டி.கே.சி. தான் என்று திரு வே. அடிக்கடி கூறிக்கொள்வார். தன் தமிழ்ப் பற்றுக்கு விளையாட்டாக அவர் ஒரு காரணம் கூறுவதுண்டு: காரைக்குடியில் இந்தியப் பல்தமிழ்க்கழகத்தைத் தொடங்கி வைத்த தொடக்கவுரையில் தமிழின் சிறப்புக்களை எல்லாம் கூறியபின் ''எனக்குத் தமிழ்மேல் ஒரு தனிப்பற்றுண்டு; ஏன் தெரியுமா? நான் ஆங்கிலத்தைத் தமிழில் எழுதிவைத்துக் கொண்டு பேசியவன் என்று தன் தமிழுக்கும் தன் ஆங்கிலத்திற்கும் உள்ள தொடர்பை வெளிப்படுத்தினர். திரு. வே. யின் ஆங்கிலச்சொல்வன்மை தடங்கலற்றது. காரிய வேகத்தில் அவர் ஆங்கில மொழியும் வேகமாக இருக்கும். அதற்குக் காரணம் கொடைக்கானலில் திரு. கே. பி. கோபால மேனன் அவர்களோடு நெருங்கிப் பழகியதாகும். திரு. மேனன் திருவனந்தபுரத்து உயர்நீதிமன்றத்து ஒய்வுபெற்ற நீதிபதி. பேச்சில் பிழையைப் பாராது ஆங்கிலம் பேசிப்பழகு; பழகு; என்று அவர் தூண்டிய நினைவும், அதனல், தாம்பெற்ற ஆங்கிலச் சொல்வன்மையும், வேங்கடாசலனரின் மனத்தைவிட்டு அகலவில்லை. ஒருமுறை அமெரிக்காவிலிருந்து நூல்நிலையச் சார்பாளர்கள் அழகப்பா கல்லூரிக்கு வந்தபோது ஒரு கூட்டம் நடந்தது. அக்கூட்டத்திற்கு தலைமை தாங்கிய வேங்கடாசலனர் சினப்படையெடுப்பின்போது அமெரிக்கா செய்த உதவியைப் பாராட்டினர். அப்போது ''உடுக்கையிழந்தவன் கை போல ஆங்கே இடுக்கண் களைவதாம் நட்பு'' என்ற குறளை ஆங்கிலப்படுத்தும்போது உடுக்கை: அதாவது ஆடை என்பதனை மொழிபெயர்க்கையில் அமெரிக்கருக்குப் புரியுமாறு ''trousers'' என மொழிபெயர்த்தார். இம்மொழிபெயர்ப்பில் விரைந்த நுண்ணறிவு புலனாயிற்று. வேங்கடாசலனர் ஒரு சில நிமிடங்கள் பேசினாலும், பலதடவை சிரித்துக் கைதட்டுவதற்கு உரிய கருத்துக்கள் அமைந்துகிடக்கும். கருத்துகளுக்கு இடையில் நகைச்சுவைபடப்பேசினும், அரிய கருத்தாக அப்பேச்சிருக்கும்.

எதனையும் மனம்விட்டுப் பேசுவது அவர் வழக்கம். தான் ஒருபொருள் பற்றி எண்ணிய கருத்தைப் பலரோடும் உசாவி, சரியா, பிழையா என்று பார்த்துக்கொள்வார். சி.வி.சிடி.வி. எதனையும் விரைவில் தீர்மானிக்கும் ஆற்றலுடையவர். அவர் முடிவு 90 சதவிகிதம் பிழைபடுவதில்லை என்று ராய. சொ. அவர்கள் அடிக்கடி கூறுவர்.

## 7

கல்வித்துறையில் பல்லாண்டு பழக்கம் உடையவராதலாலும், ஐந்துபெரும் கல்லூரிகள், உயர்நிலைப்பள்ளி, தொடக்கப்

பள்ளி, ஆதாரப்பள்ளி, மாண்டிசோரிபள்ளி என்ற கல்வி நிறுவனங்களின் செயலாளராகப் பல்லாண்டு இருந்துவரும் அனுபவத்தாலும், தெளிவான கல்விக் கருத்துக்கள் சில அவர்பால் உண்டு. உயர்நிலைப்பள்ளியில், பொறியியல் பிரிவிருப்பது வீண் செலவு; பல்தொழிற் கல்லூரிக்குச் சென்றால், பொறியியல் தொடக்கமுதலே கற்பிக்கப்படுகின்றது. பொறியியற் கல்லூரிக்குச் செல்வதாயின் ஓராண்டு, புகுமுகவகுப்புப் படிக்கவேண்டியிருத்தலால் உயர்நிலைப்பள்ளியில் படித்த பொறியியல் மறந்து விடுகிறது. ஆதலால், தொடர்பு தராத இப்பகுதி வேண்டுவதில்லை எனத் தம் வானொலிப்பேச்சில் குறிப்பிட்டுள்ளார்.

சென்னை மாநிலக் கல்வியின் 55-ஆவது மாநாடு 1965-இல் அழகப்பா வட்டாரத்து நடந்தது. வரவேற்புத் தலைவரான வேங்கடாசலனார் உரையில், சில கல்விக் குறிப்புக்களைப் புலப்படுத்தினர். தொடக்கப்பள்ளிமுதல் கல்லூரி வரை ஆசிரியர்களுக்குத் தொழிற்பட்டதாரிகள் போல ஒத்த சம்பளம் கொடுக்க வேண்டும் என்பது அவர் கருத்து. பொறியியற் பட்டதாரி ஆறாண்டு கல்லூரியில் படிக்கின்றான். அவன் ஊதியத் தொடக்கம் ரூ. 275; ஐந்தாண்டு கல்லூரிப் படிப்புப்பெற்ற ஆசிரியப் பயிற்சியுடைய பட்டதாரியின் ஊதியத்தொடக்கம் ரூ 140; இவ்வாறு கணக்குப் போட்டு, ஆசிரியப்பட்டதாரியின் மாத ஊதியம் ரூ 230-ஆவது இருக்கவேண்டாமா? எனக் கேட்டார். கல்லூரி வரை எல்லாத் துறைக்கல்வியும் இலவசமாக இருக்க வேண்டுமென்று இரண்டாண்டுக்கு முன்னரே இக்கருத்தை வெளியிட்டார் வேங்கடாசலனார்.

திரு. வே. 1936 முதல் 1938 முடிய வடக்கு இராமநாதபுர மாவட்டக் கழகத் தலைவராகப் பணி செய்தார். அப்பகுதிக்கு அவர் ஆற்றிய தொண்டுகளை இன்னும் மக்கள் புகழ்கின்றனர். அவர்தம் பொதுத் தொண்டுக்கும் ஆட்சித்திறனுக்கும் இத் தலைமை பெரு வாய்ப்பாக இருந்தது. தன் மாவட்டப் பகுதியில் பொதுவாகக் கல்வி வளர்ச்சிக்கும், சிறப்பாக, பெண்கல்வி வளர்ச்சிக்கும் பாடுபட்டார். ஒன்பது புதிய மருத்துவ நிலையங்களை நிறுவியதோடு, ஐந்து நிலையங்கட்குச் சொந்தக் கட்டிடத்தையும் உருவாக்கிக் கொடுத்தார். இந்நிலையங்களில் பெண் மருத்துவர்கள் மிகுதியாக நியமிக்கப்பட்டனர். சிவகங்கையில் பெண்கள் உயர்நிலைப்பள்ளி ஒன்று துவங்கப்பட்டது. முதலாக மாவட்ட கழக ஆட்சியில் மகளிர் உயர்நிலைப்பள்ளி தொடங்கிய பெருமை இவரைச்சாரும். ஏராளமான தொடக்கப்பள்ளிகளும் இவர் ஆட்சி நடத்திய இரண்டாண்டுகளில் நிறுவப்பெற்றன. வணிக வளர்ச்சிக்கு நல்ல நெடுஞ்சாலைகள் தேவை. சாலையமைத்தற்கு உரிய இடங்கள் பிறருடைய சொத்

துக்களாக இருக்கும்போது அவற்றை வழக்கின்றி வாங்கும் சாமர்த்தியம் வேண்டும். திரு. வே. நன்முறையில் வழக்கின்றி 200 கல் தொலைவு அளவுக்கான பல சாலைகளை அமைத்துச் செப்பம் செய்தார்.

இராமநாதபுர மாவட்டத் தண்டல்நாயகமாகவும், இந்து அறநிலைய ஆணையாளராகவும் இருந்த திரு அ. உத்தண்டராமன் ''திருத்தலப்பயணம்'' எனும் நூலின் அணிந்துரையில் பின்வருமாறு எழுதியுள்ளார்: ''இராமநாதபுரம் வடபகுதியில் உள்ள போக்குவரத்துச் சாலைகள், பொது நல நிறுவனங்கள் பல இன்றும் அவர் வகுத்த திட்டத்தில் உருவானவைகளேயாகும். பொதுநலப் பணிகள் எல்லாவற்றிலும் அவருடைய ஆற்றலையும் செல்வாக்கையும் அந்த மாவட்ட ஆட்சியினர் நன்கு பயன் படுத்திக்கொண்டனர்''.

கோடைக்காலத்து ஓரிருதிங்களாவது கொடைக்கானலில் தங்கி ஓய்வு பெறுவது இவர் வழக்கம். இன்றைய கோடைக்கானல் நகர் வளர்ச்சிக்கு இவர் பெருங்காரணமாவர். அதன் வளர்ச்சிக்குழுவிற்குத் தலைவராகவும் உள்ளார். சென்னை அரசு மத்திய அரசின் துணைகொண்டு 25 லட்சம் ரூபாய் செலவில் பயணிகள் விடுதி கட்டியதும், குடிநீர்வசதி, சாலையமைப்பு முதலிய நலங்கள் செய்ததும், தன் சொந்தச் செலவில் ஏரியில் வண்ண நீரூற்றமைத்ததும் பூங்காவளர்த்ததும் குறிப்பிடத்தக்கவை. இவர் தூண்டுதலால் சோலைகள் உண்டாக்கிய அன்பர் பலர்.

வணிகம், தொழில், பொதுப்பணி ஆகிய சிறப்புக்களை அறிந்த ஆங்கில அரசு 1940-இல் 'இராவ்பகதூர்' என்ற பட்டத்தை வழங்கியது. இவர் பொதுப் பணியும் செல்வாக்கும் மேலும் மேலும் பெருகியதால் அடுத்த மூன்றாண்டில் 'திவான் பகதூர்' என்ற பட்டமும் இவரை வந்து எய்தியது. இங்ஙனம் தம் பொதுப்பணிக்குக் கிடைத்த இரு விருதுகளையும் 1947-இல் இந்தியா உரிமைபெற்ற ஆண்டில் துறந்தார். அதனால் இவருடைய மதிப்பு உரிமை பெற்ற இந்தியாவில் மேலும் பெருகலாயிற்று. பலரும் பாராட்டும் முறையில், பொதுப்பணி செய்தற்குரிய வாய்ப்பும் நட்பும் வளர்ந்தன. எது எக்காலத்துக்குத் தகும் என்று காலநாடி பிடித்து வாழ்க்கை நடத்தும் மதிநுட்பம் உடையவர் திரு. வே. ''ஒத்தது அறிவான் உயிர் வாழ்வான்'' என்ற திருக்குறட்படி உலக நடப்பினை அறிந்து அதற்கேற்ற பணிகளை மேற்கொள்ளவேண்டும் என்பதற்குத் திரு. வே. யின் வாழ்க்கை ஓர் எடுத்துக்காட்டு.

## 8

தன வணிக சமூகம் கடல்கடந்து சென்று வணிகம் செய்த சமூகமாகும். எல்லா வகையறங்களும் உள்நாட்டிலும் அயல்

நாட்டிலும் செய்த சமூகமாகும். தமிழக மக்களுள் தனவணிகர் எண்ணிக்கையில், சிறு தொகையினராயினும், திருப்பணிக்கும், கல்விக்கும், பெருந்தொகை பல நூற்றுண்டுகளாகச் செலவழித்துவருபவர். அச்சமூகத்தார் அரசியல் மாற்றங்களால் தம் அயல்நாட்டுச் சொத்துக்களையும் வணிகத்தையும் இழந்து பொருள்நிலை குறைந்துவிட்டனர். வறுமை அறியாச் சமூகத்து வறுமைகுடிகொண்டு வருகிறது. இந்நிலையில் தனவணிகத்தலைவர்களுள் ஒருவராய திரு. வே. தன் சமூகத்தை உயர்த்த அரும்பாடுபடுகின்றுர்.

சென்னையில் கூடிய முதல் நகரத்தார் மாநாட்டில், சமூகப் பணிக்குப் பொருள் திரட்டும் முயற்சியைத் தொடங்கிவைத்த அவர் பிற தனவணிகத் தலைவர்களோடு செல்வர்கள் வீடு தோறும் சென்று நன்கொடை தொகுத்துள்ளார். இவர்தம் முயற்சியால் நன்கொடை பெருகுகிறது. சமூக இளைஞர்கள், பெரும்படிப்பு படிப்பதற்கு இடங்கள் பெற்றுக்கொடுப்பதும், உதவித்தொகைகள் பெற வழிசெய்வதும், வேலை வாய்ப்பைத் தேடித்தருவதும் இவர் செய்துவரும் சமூகத்தொண்டுகளாகும்.

அழகப்பா கல்லூரி முன்னுள் முதல்வர் திரு. தம்பி அவர்கள் திரு. வே. நிதித்துறைபற்றிய மதிநுட்பமுடையவர் எனவும் அவர் நிதிமந்திரி ஆகவல்ல திறம் உடையவர் எனவும் தம் வாழ்த்துரையில் பாராட்டியுள்ளார். சிறிது நேரம் திரு. வே. யோடு பேசிய யாரும் அவர் பொருளாதாரக் கொள்கைகளை அறிந்து கொள்வர். எதனையும் திட்டமிட்டுச் செலவழிக்க வேண்டும் என்பதும், வருவாய்க்கு அடங்கியே செலவு செய்ய வேண்டும் என்பதும், வருவாய் மிஞ்சாவிட்டாலும் செலவு எக்காரணத்தானும் மிகுதியாதல் கூடாது என்பதும், இது தனி மனிதனுக்கும் அரசுக்கும் ஒக்கும் என்பதும் அவர் நிதிக் கொள்கைகளாகும். வள்ளல் அழகப்பர் நிதிநிலை பாராது வருவாய் வருமென்று எதிர்பார்த்துக் கல்லூரிகளைப் பெருக்கியவர். அவர் இளமை மரணத்தால் கல்லூரி நிறுவனங்கள் நிதியுரமின்றித் தடுமாறின. அந்நிலையில் அனுபவத்தால் நிதியின் நுட்பங்களை அறிந்த திரு. வே. செயலர் பொறுப்பை ஏற்று அறநிலையத்தின் வரவையும் செலவையும் சீர்ப்படுத்தி தள்ளுவன தள்ளி, கொள்ளுவன கொண்டு, தடுமாற்றம் தவிர்த்தார். இதனையறிந்தே ஏழாண்டு முதல்வராக இருந்த தம்பி மேற்கண்டாங்குப் பாராட்டினுர்.

திரு. வே. யின் சமூகத்தொண்டுக்கும் நிதித்துறைவன்மைக்கும் ஒரு எடுத்துக்காட்டு: 1942-இல் சப்பான் படையெடுப்பால் மலேயா, பர்மாவில் நகரத்தார் சமூகத்துக்கு நட்டங்கள் ஏற்பட்டன. இந்நட்டத்தை, இந்திய வருமானவரி அலுவலகம்

ஒத்துக்கொள்ளவில்லை. அரசாங்கத்தைக் காணும் பேட்டிக் குழுவிற்கு வேங்கடாசலனார் தலைமைதாங்கி, நட்டத்தை ஏற்றுக் கொள்ளுமாறு அன்றிருந்த ஆங்கில அரசை இசைவித்தார். இதனால் இரண்டரைக் கோடி ரூபாய் தள்ளுபடியானதோடு செலுத்தியிருந்த ஒருகோடி ரூபாய் திரும்பக் கிடைக்கலாயிற்று. இது தொடர்பான அரசாங்க ஆணையை "சி. வி. சிடி பைபிள்" என்று வருமானவரி அலுவலகத்தினர் பாராட்டுவர். நகரத்தார்க்குப் பர்மாவில் இருந்த லட்சக்கணக்கான ஏக்கர்கள் தேச உடைமையாக்கப்பட்டன. அதனால் ஏற்பட்ட நட்டத்தை நகரத்தாரின் இந்திய நாட்டு வருவாயில் கழித்துக்கொள்ள வேண்டுமென்று மத்திய அரசிடம் வேங்கடாசலனார் முயற்சி செய்து வெற்றியும் பெற்றார். மேற் சொல்லிய இருவகைச் சலுகைகளாலும் நகரத்தார் சமூகம் பெற்ற நன்மை பெரிதாகும். இந் நன்மையினால் வேங்கடாசலனாரின் மதிப்பு சமூகத்தாரிடைப் பெருகியதோடு இன்றும் அந்நன்மை நினைவுகூரப்படுகிறது.

## 9

திரு வே. ஒரு பெருங்கலைப்பிரியர். இசை, நாடகம் முதலான கலைகளில் ஈடுபாடு பெரிதும் உடையவர். இளம் பருவத்துச் சிலகாலம் இசைப் பயிற்சி பெற்றார். சிவகிரி சீனிவாச அய்யங்கார் இவருக்கு வயலின் கற்றுக் கொடுத்தார். செட்டியாரின் இசைப்பயிற்சியை அரியக்குடி இராமானுச அய்யங்காரே பாராட்டினார் என்றால் வேறு சான்றிதழ் வேண்டுமா? ஒரு முறை அரியக்குடி அய்யங்கார் பாடும் கச்சேரியில் வேங்கடாசலனார் வயலின் வாசித்தார். திரு. வே. அருகே எப்போதும் ஒரு வானொலிப்பெட்டி இருக்கும். செல்லும் இடமெல்லாம் அதனை எடுத்துச் சென்று காரோடும்போதும் கையில் வைத்துக்கொண்டு இசை மடுப்பர். வசதியும் செல்வாக்கும் உடைய குடும்பத்தினராதலின் பல கலைகளைக் கற்றுக்கொள்ளும் வாய்ப்பும் ஆசையும் அவருக்கு இருந்தன.

தன் 16-ஆவது வயதில் காரோட்டக் கற்றுக்கொண்டபின்னரே 20-ஆவது வயதில் மிதிவண்டிவிடக் கற்றுக்கொண்டாராம். வேட்டையாடும் திறன் இவருக்கு உண்டு. "நல்ல வேட்டைக்காரர்" என்று கோடைக்கானலில் இவர் புகழ்பெற்றுள்ளார். படகோட்டும் பயிற்சியும் பெற்றவராதலின் கோடைக்கானல் படகுப் போட்டியில் அடிக்கடி கலந்துகொள்வார். "சென்னை பறக்கும் கழகம்" "செட்டிநாட்டுப் பறக்கும் கழகம்' என்றவற்றில் உறுப்பினராக இருந்தார்.. வானூர்தி ஓட்டவும் ஓரளவு பயின்றிருந்தார். விளையாட்டில் இவருக்கு விருப்புண்டு. டென்னிசு, கால்பந்து நன்கு விளையாடுவார்.

பலதுறைப் பெருமக்களோடு பழக்கம் இருப்பதுபோல், இசை நாடகத் துறை வல்லுநர் பலரோடும் இவருக்கும் பழக்கம் உண்டு. அரியக்குடி இராமானுச அய்யங்கார், காரைக்குடி வீணை இரட்டையர்கள், சாம்பசிவ அய்யர், திருவீழிமிழலை சுப்பிரமணியபிள்ளை சகோதரர்கள், வீருசாமி பிள்ளை, இசையரசு தண்டபாணி தேசிகர் முதலிய இசைப்புலவர்களையும், நவாப் இராசமாணிக்கம், டி.கே. சண்முகம், பகவதி முதலிய நாடகப் புலவர்களையும் நன்கு அறிவார். அண்மையில் அழகப்பா கல்லூரி வட்டத்து டி. கே. சண்முகம் குழுவினர் தொடர்ந்து பல நாடகங்களை நடத்துமாறு ஏற்பாடு செய்தார் வேங்கடாசலனார். தரமான நாடகங்களையே இவர் விரும்புவார். சில நாடகங்களில் நடித்த ஓர் நடிகர் வேங்கடாசலனார் என்றால் அவர்தம் கலையார்வம் எத்தகையது என்று உணர்ந்துகொள்ளலாம். தன் மாமனார் தோற்றுவித்த தமிழிசை இயக்கத்தில் வேங்கடாசலனாருக்குச் சிறந்த பங்கு உண்டு.

## 10

வேங்கடாசலனார் அறஞ்செய்யும் பெருநோக்குடையவர்; அறஞ்செய்வோரைப் போற்றுவதிலும் அறங்களைப் பாதுகாப்பதிலும் ஆவல் உடையவர். வள்ளல் அழகப்பரின் நண்பர், அறநிலையச் செயலர் எனப் பாராட்டப்படும் வேங்கடாசலனார் எவ்வளவு அறச்சிந்தனையுடையவர் என்பது வெளிப்படப் பலருக்குத் தெரியாது. தருமம் செய்வதற்கும் நல்வினை வேண்டும் என்ற அரிய கருத்தைத் திரு. வே. கூறுவதை நாம் அடிக்கடி கேட்டிருக்கிறோம். கானாடுகாத்தானில் நீர்வசதி யளிப்பதற்கு பதின்மூன்றாயிரம் ரூபாய் அளித்தார். இந்நன்கொடை அறஞ் செய்ய விரும்பியும் திரும்ப வந்துவிட்டதாம். இதனால் தருமஞ் செய்வதற்கும் நல்லூழ் வேண்டும் என்பது அவர் கருத்து.

திருவேங்கடமுடையான் அறநிலையம், சீனிவாச அறநிலையம் என இரு நிலையங்களை அமைத்துப் பலவகை அறங்கள் செய்து வருகின்றார். இராமேசுவரத்தில் அன்பர்கள் தங்கும் கட்டிடங்களைகட்டி உதவியுள்ளார். அழகப்பா கல்லூரி வட்டத்து வேங்கடாசலனார் மருத்துவமனையும், மீனாட்சி ஆச்சி உடல்பயில் மண்டபமும் பெருந்தொகை செலவழித்துக் கட்டி வழங்கியுள்ளார். ‘திருத்தலப் பயணம்’ என்னும்500 பக்கங் கொண்ட நூலைத் தமிழ்க் கடல் ராய. சொ. அவர்களைக் கொண்டு தொகுப்பித்து இனாமாக வழங்கினார். வள்ளல் அழகப்பரோடு பழகிப் பழகித் தனக்கும் அறம் செய்யும் எண்ணம் பெருகிவிட்டதெனப் பெருமிதமாகச் சொல்லிக் கொள்வார். ‘வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி தொகுத்தார்க்கும்

துய்த்தல் அரிது என்ற திருக்குறள் இவர் நினைவில் அடிக்கடி வரும். இனி உலகில் பணத்திற்கு என்ன மதிப்பிருக்கிறது ; வர வரப் பணமதிப்புக் குறைகிறது. இங்ஙனம் வைத்திருக்கும் பணத்தின் மதிப்பு குறையப் போவதைப் பார்த்துக்கொண்டி ராது நல்லமுறையில் தருமஞ் செய்து உயர்ந்த மதிப்புப் பெற லாமே என்று பலர்க்கு அறிவுரை வழங்குவார் வேங்கடாசலனார். பல செல்வர்களை ஒப்பிட்டு நோக்கும்பொழுது, வேங்கடாசல னார்க்கும் பணப்பற்றுக் குறைவு. பணம் ஈட்டுவதே ஒரு குறிக் கோளாக அவர் கொண்டிருந்தால் அண்ணாமலையரசர் மருகன் என்ற முறையிலும், அரசியற் செல்வாக்கு அதிகமாகப் பெற்ற வர் என்ற முறையிலும், தமிழகத்தின் தலைசிறந்த பெருஞ் செல்வர்களுள் ஒருவராக அவர் வந்திருக்கலாம். கலைப்பற்றும், கல்விப்பற்றும், பொதுப்பணி நோக்கமும் இளமை தொட்டு அவருக்கு வளர்ந்தமையால் செல்வம் ஈட்டுதல் அவர்தம் குறிக் கோளுள் ஒன்றாக இருந்ததேயன்றித் தலையாக இருந்ததில்லை.

திரு. வே. பணியாற்றிய நிலையங்கள் பல. சென்னை மாநில நன்னிதிக் கழகம், கல்விக்குழு, இந்திய செஞ்சிலுவைச் சங்கம், காச நோய்த்தடுப்புக்குழு, சாலைக்குழு, உணவுக் குழு, தென்னிந் திய ஆலோசனைக் குழு, விடுதலை பெற்ற கைதிகளின் உதவிக்குழு ஆகியவற்றின் உறுப்பினராகவும், பாரதச் சாரணக்குழு, கானாடு காத்தான் ஊராட்சி மன்றம், காடுகாத்தான் கூட்டுறவுச் சங்கம் முதலியவற்றின் தலைவராகவும் ஆற்றிய அருந் தொண்டுகள் மிகப்பல. திரு. வே. வணிகத்திலும் தொழிலிலும் தனி நுட்பமுடையவர். இத்துறைகளில் பலருக்கு மதி வழங்கியவர். இந்திய வங்கியின் ஓர் இயக்குநராகவும், சென்னைத் தொழில் முதலீட்டுக் கழகம் நிறுவிய இயக்குநராகவும், ரிலையன்சு வழங்கு கழகம் நிறுவிய இயக்குநராகவும்,நெற்குப்பை மின்சாரம்வழங்கு கழகத்தின் ஆட்சிப் பங்காளராகவும் பணியாற்றியுள்ளார்.

## 11

வள்ளல் அழகப்பரின் நீண்ட உடல் நலக் குறைவால் தன் நிறுவனங்களைக் கவனிக்க இயலாது போயிற்று. தம் கல்லூரி களைத் தாம் காத்தாலென்ன, பிறர் காத்தாலென்ன என்ற முறை யில் தக்க காப்பாளர் ஒருவரை நாடினார். உற்ற நண்பர் வேங் கடாசலனாரின் திறத்தையும், உலக அனுபவத்தையும், மேற் கொண்ட காரியத்தை முடிக்கும் துணிவையும் தெளிந்திருந்த வள்ளல் 1955 இல் அறநிலையச் செயலாளர் ஆக்கினார். அதன் பின்னர் வள்ளல் சில ஆண்டுகளே வாழ நேர்ந்தது. வள்ளலின் நிறுவனங்கள், பல செம்மை பெறாமலிருந்தன. கட்டிடங்கள் அரைகுறையாக நின்றன. நிதி நிலையிலும், சிக்கல்கள் இருந்

தன. இவற்றைப் பலரும் பாராட்டும் வகையில் சமாளித்து ஆடாமல் அசையாமல் வள்ளலின் நிறுவனங்களை நிலை பேற்றுக்கு ஆக்கிய பெருமை வேங்கடாசலனாரையே சாரும்.

இச்செயலர் ஆட்சிக் காலத்து அழகப்பா கல்லூரியில் கலை மண்டபம், வெளி மாணவர் தங்கும் இல்லம், கலைக் கட்டிடத்தின் இரண்டாம் மாடி, சண்முக நூல் நிலையக் கட்டிடம், விடுதியில் புதிய ஓர் உணவுக் கட்டிடம் முதலியன அமையலாயின. தமிழ் எம். ஏ. வகுப்பும் தமிழ் ஆராய்ச்சி நிலையமும் ஏற்பட்டன. அழகப்ப செட்டியார் பயிற்சிக் கல்லூரியில் பெரும்பாலான கட்டிடங்கள் இச் செயலர் காலத்துத் தோன்றியவை. அலுவலகக் கட்டிடமும் நீண்ட பெரும் கலைமண்டபமும் மாணவர் விடுதியும் அரசின் உதவி பெற்றுக் கட்டப்பட்டவை. பொறியியற் கல்லூரியின் வளர்ச்சி மிகவும் குறிப்பிடத் தகுந்தது. வனப்பு மிக்க அலுவலகக் கட்டிடமும், குப்புசாமி நாயுடு விடுதியின் மாடியும், அரைவட்ட விடுதியின் கட்டிடமும், அறிவியற் கட்டிடப் பகுதிகளும் செயலரின் பெரு முயற்சியால் உருவானவை. ஈராயிரம்பேர் அமர்ந்திருந்து கேட்கும் வண்ணம் அமைந்த பெரு மண்டபம் முருகப்பா மண்டபமாகும். தொழிலதிபர் முருகப்பசெட்டியாரின் நன்கொடையால் எழுந்தது இம் மண்டபம். இம்மண்டபம் பல வனப்புக்களோடு உருவாவதற்குச் செயலர் அவர்களே காரணமாவர். பல் தொழிற்கல்லூரியின் அலுவலகக் கட்டிடமும், விடுதிகளும், திரு வே. செயலரானதற்குப் பின் தோன்றியவை. இக்கல்லூரிக்கென அறிவியற்கருவிகளும், பொறிகளும், தனியாக அமைத்துக் கொடுத்தார் இச் செயலர். உடலியற் கல்லூரியின் முழுவளர்ச்சியும் இவர் காலத்து ஏற்பட்டதேயாகும். சிறிய இடத்திலிருந்தே இக்கல்லூரியை விரிந்த இடத்துக்கு மாற்றி அலுவலகக் கட்டிடம், விடுதியின் முதல் மாடி, உடல்பயில் மண்டபம் எல்லாம் இக் கல்லூரி பெற வைத்தார். கடற்கரைத் தொண்டியில் ஆண்டுதோறும் இக்கல்லூரி மாணவர்கள் சென்று தங்கிப்பயில்வதுண்டு. ஆண்டுதோறும் தங்கும் இடமாகத் தொண்டி அமைந்துவிட்டமையின், கல்லூரிக்கெனச் சில ஏக்கர் நிலம் வாங்கினார் செயலர். அதனை மேலும் விரிக்கத் திட்டமிட்டுள்ளார். மாண்டிசோரி, ஆதாரப்பள்ளி, ஆயத்தப் பள்ளி முதலான பள்ளிகளும் கட்டிட வளர்ச்சி பெற்றுள்ளமை குறிப்பிடத்தகும். அழகப்பா நகர் அளவில் சிற்றூராகவிருந்தாலும், செயலில் பரப்பும் சுறுசுறுப்பும் உடையது. நாடெங்கிலும் கிளை உடைய இந்தியன் வங்கி, சில திங்களுக்கு முன் இங்கோர் கிளையைக் கண்கவர் வனப்புடைய கட்டிடத்தில் நிறுவி யுள்ளது. இதற்குத் தூண்டுகோல் செயலரேயாவர்.

எப்பொழுதுமே அழகப்பர் வட்டாரத்துக் கட்டிடங்கள் கட்டியவண்ணமாக உள்ளன என்றும், சிவி. சிடி. யின் ஓயாத உழைப்பும் கல்லூரிப்பற்றும் அதனல் விளங்குகின்றன என்றும் டாக்டர் அரசர் முத்தையா செட்டியார் அவர்கள் எப்போதும் பாராட்டுவார்கள். இவ்வாறு அமைந்த கல்லூரிகளும், பள்ளிக் கூடங்களும் நிலைபெறுமாறு, அரசினர் உதவி பெற்றும் அன்பர்கள் உதவிபெற்றும், தாம் உதவி செய்தும் கல்வி நிலையங்கட்கு வேண்டும் பல்வேறு கட்டிடங்களையும் பத்தாண்டு காலத்தில் கட்டிமுடித்தார். கட்டிடக்கலையில் வன்மையுடையவராதலின் அவரால் இச்செயல் செய்ய முடிந்தது.

ஒவ்வொரு துறையிலும் வேங்கடாசலனார்க்குத் தெளிவான அறிவுண்டு. தெரிந்துகொண்டாற்போல எதனையும் செய்யமாட்டார். உரியவர்களிடம் ஒவ்வொன்றையும் தெளிவாகத் தெரிந்து கொண்டபின்னரே பொருள்களை வாங்கவும் பயன்படுத்தவும் இசைவு தருவார். கட்டிடக் கலை அவர் கைவரப் பெற்ற கலை.

கடிதப் போக்குவரத்துச் செய்வதில் சிறப்பான, செம்மையான ஒழுங்கு அவர்பால் உண்டு. செயலர் பார்வைக்கும் கையெழுத்துக்கும் உரிய கல்லூரிகளின் கடிதங்கள், அவர் செல்லுமிடமெல்லாம் அனுப்பப்படும். சென்ற இடங்களிலும் சில மணி நேரம் அலுவலுக்கென ஒதுக்கிக் காரியங்களை முடிப்பார். காலதாமதம் என்பது கடுகளவும் இராது. எதனையும் தாமதித்து வைத்தல் அவருக்குப் பிடிக்காது. சிலர் வேண்டுகோளைச்செய்ய முடியாவிட்டாலும் செய்ய இயலவில்லை என்பதையும் தெரிவித்துவிடுவது அவர் வழக்கம். அஞ்சலகத்தி லி ரு ந் து கடிதங்கள் வந்தவுடன் முதற் பார்வை செய்து அன்றே கட்டுக்குச் செல்லுமாறு முடித்துவிடுவார். தொலைபேசி மூலம் பேசவேண்டியதைப் பேசிக் கருத்துக்களைப் பரிமாறிக் கொண்டு, காரியச் செம்மை செய்துகொள்வார். தொலைபேசி பேசுவதில் மிகுதியாகச் சிக்கனத்தைக் கையாளுவார். ஞாயிற்றுக் கிழமைகளிலும், இரவு நேரங்களிலும் பேசுவதால் கட்டணக் குறைவு ஆதலின் அந்நேரங்களையே நெடுந்தொலைவுப் பேச்சுக்களுக்குப் பயன் படுத்துவார்.

எதுவும் முறையாக இருக்க வேண்டும் என்பது அவர் செயல் முறைகளுள் ஒன்று. விண்ணப்பங்கள் மேலதிகாரிகள் வாயிலாகவே வரவேண்டும் எனவும், முறையான ஒப்புதல் பெற்றே மேலதிகாரிகளைப் பார்க்கவேண்டும் எனவும் அவர் வலியுறுத்தும் ஆட்சிமுறைகளுள் ஒன்று. பலர் எதிர்ப்பு வரும் என்பதற்காக, தமக்குச் சரி யென்று பட்டதைச் செய்யாது விடார். எத்துணை பெரிய அதிகாரிகளாயினும், செல்வாக்குப் பெற்றவர்களாயினும் கருத்து முரண்களை நேரடியாகத் துணிவாகச்

சொல்வார். அஞ்சாமை இவர் பண்புகளுள் ஒன்று. கல்விப் பெரியார் ஒருவர், கல்லூரி விழாவிற்கு வந்திருந்த போது, ''டாக்டர், அழகப்ப செட்டியார் இருந்த காலத்து அவர் கேட்டது, கேளாதது எல்லாம் அளிக்க முன் வந்தீர்கள்; இப்பொது அவருக்குப் பின் அந்த எண்ணம் எங்கோ போய்விட்டது; அவர் நிறுவனங்களைக் காக்கின்ற நான் முறையோடு கேட்கின்ற விருப்பங்கட்கு இணங்கமாட்டேன் என்கிறீர்கள்'' என்று உளம் பதிய எடுத்துக்கூறினார் வேங்கடாசலனார்.

கலந்து அளவளாவி உறவாடும் ஆசை நிரம்ப உடையவர் வேங்கடாசலனார். திருத்தலப் பயணம் சென்ற போது அன்பர்கள் பலரையும் அழைத்துக் கொண்டு சென்றார். உறவினரின் விசேடங்களுக்குச் செல்வதுபோல நண்பர்களின் விசேடங்களுக்கும் தவறாது கலந்து கொள்வார்.

அரசியலில் ஆளுங்கட்சியை ஆதரிப்பதுதான் உண்மைக் குடியின் ஒழுக்கம் என்பது அவர் கருத்து. நிதித் துறையில், செலவு வருவாயை மிஞ்சக் கூடாது என்பது அவர் கொள்கை. ஆட்சித் துறையில், சுறுசுறுப்பும் துணிவும் வேண்டும் என்பது அவர் கோட்பாடு. கல்வித் துறையில், ஆசிரியர்களின் ஊதியத்தைப் பெருக்க வேண்டும் என்பதும், மாணவர்களுக்குச் சம்பளச் சலுகைகள் ஏராளமாக அளிக்க வேண்டும் என்பதும் அவர்தம் எண்ணங்கள். சமயத்துறையில் கவலையற்ற அமைதியை அளிப்பது தெய்வப் பற்றே என்பது அவர்தம் அனுபவம். என்றும் உள்ளத்தில் மகிழ்ச்சியாக இருப்பதே வாழ்க்கைச் செல்வம் என்பது அவர்தம் தெளிவு.

'யாண்டுபலவாக நரையிலவாகுதல் யாங்காகியர்' என்று கேட்ட பெரியவர்களுக்குப் பிசிராந்தையார் எவ்வகைக் குறையும் வாழ்வில் எனக்கில்லை; அதனால் முதுமை காட்டும் நரையில்லை என்று பதில்விடுத்தார் எனப் புறநானூற்றால் அறியலாம். அத்தகைய பதிலையே இன்று வே. யும் வாழ்வார்க்குக் கூறுகின்றார். எதற்கும் கவலைப்படாத உள்ளமே, வாழ்வுக்கு இளமை என்பது அவர் அறிவுரை. அறுபதாண்டாகியும் தனக்கோர் நரை உண்டா, திரை உண்டா என்று அவர் கேட்கும் போது அவர் அனுபவத்தை நாம் உண்மையென ஒப்புக்கொள்கின்றோம்.

பொதுப்பணியிற் சிறந்த, கல்வித் துறையை வளர்த்து, கடவுட் பற்றில் உயர்ந்து விளங்கும் வேங்கடாசலனார் இன்று கண்டு மகிழும் மணிவிழாப் போல, மேலும் பல விழாக்கள் கண்டு தமிழ்த்தாயின் அருளாலும் அரியக்குடிப் பெருமாளின் அருளாலும் குடும்பத்தோடு சிறந்து வாழ்வாராக.



தந்தை திரு. க. வெ. சித. சிதம்பரம் செட்டியார்



அன்னை தெய்வயானை ஆச்சி



சகோதரர் திரு. க. வெ. சித. கரு. கருப்பன் செட்டியார்.



சகோதரர் திரு. க. வெ. சித. கோவிந்தன் செட்டியார்.



சகோதரர் திரு. க. வெ. சித. சீனிவாசன் செட்டியார்.



சகோதரர் திரு. க. வெ. சித. ரெ. ரெங்கனாதன் செட்டியார்.

மகனும் மருமகளும்



திரு. வி. சிதம்பரம் - திருமதி சீதாலட்சுமி

முதல் மகளும் மருமகனும்



திரு. மு. வெ. அருணாசலம் - திருமதி. மீனாட்சி

முதல் மகள் வழியினர்



பேரன் வெள்ளையன் பேத்தி வள்ளி பேரன் வேங்கடாசலம்

இரண்டாவது மகள் வழியினர்



முருகப்பன் - வேங்கடாசலம்

C. RAJAGOPALACHARI

NA OROJI ROAD, KILPAUK
MADRAS–10.
*28th July 1966.*

On the occasion of Sri C. V. CT. V. Venkatachalam Chettiar's sixtyfirst birthday celebration, my best wishes for more decades of service.

K. SUBBA RAO
Chief Justice of India

No. 2, MOTILAL NEHRU MARG,
NEW DELHI,
*8th August, 1966.*

My wife and I are happy to learn that a Committee has been formed to celebrate the Shastiabdapurti of Sri C. V. CT. V. Venkatachalam Chettiar on October 18th, 1966.

Sri Chettiar is well known for his philanthropy. He is intimately associated with multifarious activities like education, social service, administration, religion, industry and commerce. He is a gentleman of pious disposition. We wish him many more years of healthy life in the service of humanity.

We wish the function all success.

ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு

ஸ்ரீ சங்கராச்சார்யஸ்வாமிகள் ஸ்ரீமடம்,
காஞ்சிபுரம்.

முகாம் : காளஹஸ்தி தேதி 15-8-66

தெய்வப் பற்றுடன் பல்வேறு ஸமுதாயத்தொண்டுகளில் தொடர்ந்து ஈடுபட்டு ஜனங்களின் பாராட்டைப் பெற்றுவரும் ஸ்ரீ க. வெ. சித. வெ. வேங்கடாசலஞ்செட்டியாருக்கு அண்மையில் இவருடைய நண்பர்கள் மணிவிழாக் கொண்டாடவிருப்பதை அறிந்து மகிழ்ச்சியடைகிறோம்.

ஸ்ரீ செட்டியார் தன் தெய்விக—ஸமுதாய ஸேவையை மேன்மேலும் அபிவிருத்தி செய்துகொண்டு நீடூழி காலம் வாழ்வாராக.

M. ANANTHASAYANAM AYYANGAR

BIHAR GOVERNOR'S CAMP
*September 7, 1966.*

I am glad to learn that it has been arranged to celebrate the Shashtiabdapurti of Shri C. V. CT. V. Venkatachalam Chettiar on the 18th October.

Shri Venkatachalam Chettiar has been devoting himself for the past forty years to the cause of education and social service. He is a great industrialist and a commercial magnate. He has become one of the good administrators of our State and has served the community in one capacity or the other. Above all he is deeply interested in religion. The improvement of the North Ramnad District has been largely due to the keen interest that he has evinced and the attention that he has bestowed thereon as President of the District Board. He is a great nationalist. He has been public-spirited all his life and has taken interest in all noble activities which have served the cause of the country. I pray that he may have many happy returns of the birthday and live a full hundred years to serve the Country in an ever-increasing measure. I wish the function every success.

V. V. GIRI
Governor of Mysore.

RAJ BHAVAN
BANGALORE
*4th August, 1966.*

On the occasion of the Sixtyfirst Birth Day of Shri Venkatachalam Chettiar, I send my best wishes to him, and wish him long life so that he can continue to serve the cause of our country.

M. BHAKTAVATSALAM
Chief Minister
Government of Madras

FORT ST. GEORGE
MADRAS-9
*August 4th 1966.*

In the none too extensive circle of public men who dovote their time, talents and energy to nourish public institutions and support public causes, we come across men like Sri Venkatachalam Chettiar silently devoting their time and labour for the promotion of educational and welfare work. I send my greetings to Sri Chettiar on the occasion of his Shastiabdapurti and wish him many years of useful service to his District in particular and to Madras State in general.

C. P. RAMASWAMI AIYER

DELISLE
OOTACAMUND
*July 29, 1966.*

It was with great pleasure that I received the intimation of the forthcoming Sashtiabdapoorthy celebration of Sri C. V. CT. V. Venkatachalam Chettiar.

His varied educational and public activities and his services to the cause of industry and commerce and especially his work on the Alagappa Chettiar Educational Trust Board have been so outstanding that they deserve to be commemorated.

I am glad that steps are being taken to present a Souvcnir to him, and I have great pleasure in conveying my congratulations and my best wishes to Sri Venkatachalam Chettiar and also for the resounding success of the celebrations.

DR. RAJAH SIR MUTHIAH CHETTIAR
OF CHETTINAD.
CHETTINAD HOUSE, ADAYAR,

RAJAH ANNAMALAIPURAM P O.
MADRAS-28
*18th August 1966*

I am very happy that the 61st Birthday of Sri Diwan Bahadur C. V. CT. V. Venkatachalam Chettiar will be celebrated shortly. Sri C. V. CT. (as he is familiarly known among his friends and relations) has been actively associated during the last 40 years with education, social service, administration, industry, art and commerce. Every field of activity in which he has been interested bears the impress of his personality. He became President of the North Ramnad-District Board at the early age of 30. During his Presidentship, the District came to have many schools, hospitals, roads and bridges. It is no surprise that the then Government conferred on him successively the title of Rao Bahadur and Diwan Bahadur in appreciation of his public work.

Sri C. V. CT. V. Venkatachalam chettiar has made his mark in the fields of industry and commerce as a Director of the Indian Bank Ltd., and the Founder-Director of the Madras Industrial Investment Corporation and of the Reliance Supply Corporation. He has done very much to improve the amenities in his home town, Kanadukathan.

Sri Venkatachalam Chettiar's interest in education is an abiding one. His work in this field as President of the North Ramnad District Board has already been mentioned. As the Secretary and Correspondent of the Alagappa Group of Educational Institutions from 1955 he has thrown himself heart and soul into his work and is devoting all his energies for their well-being and prosperity. The Alagappa group of Colleges have greatly improved under his guidance. He delights to be in the company of educationists and scholars. He is religious by temperament and has shown this in various ways.

I am confident that the Shastiabthapoorthy Committee will bring out a Souvenir worthy of the occasion and I am sure that the Shastiabthapoorthy Celebrations will be a great success.

DR. P. V. RAJAMANNAR,
D. Litt. L.L.D.. M.L.C.,
Chief Justice of Madras,
(Retired)

9, VICTORIA CRESCENT ROAD,
MADRAS-8.
*4 August, 1966.*

I am happy to learn that the 61st Birthday of my esteemed friend, Sri C. V. CT. V. Venkatachalam Chettiar will be celebrated on October 18, 1966. I have known him very well for nearly 30 years in several capacities.

Sri Venkatachalam Chettiar belongs to that small category of public men who render great service to their fellow-men and have a rich knowledge of men and things from vast personal experience, but are unostentatious. As President of District Board, President, Hindustan Scout association, President of the Kanadukathan Panchayat Board, President, Kanadukathan Cooperative Stores, Member of the Madras Provincial Welfare Fund, the Indian Red Cross Society, (Education Committee) Tuberculosis Relief Society, Road Traffic Board, the South Indian Railway Advisory Board, Discharged Prisoners' Aid Society etc., Sri Venkatachalam Chettiar has made his contribution to the social and economic welfare of the country. His services in the field of education are also commendable. He has been member of Dr. Alagappa Chettiar Educational Trust Board ever since its inception in 1947 and Secretary and Correspondent of the Alagappa Group of Institutions from 1955. He has devoted his time and energy for the progress of these institutions.

As a man, Sri Venkatachalam Chettiar is very pious by nature, generous and loyal. Though he is an able administrator, he is also a lover of the Fine Arts and Music. May God bless him with a long and healthy life to enable him to continue to render service to his people.

கருமுத்து தியாகராசன் மதுரை, 7—9—1966

திரு க. வெ. சித. வெ. வேங்கடாசலம் செட்டியார் நாட்டிற்கும் மக்கட்கும் ஆற்றியுள்ள அருந்தொண்டுகளைப் பாராட்டு முகத்தான், மலர் வெளியிடுதல் பொருந்தும்.

திரு வெ. அவர்கள் இருவேறு செல்வமும் நிரம்பிய தொல் புகழ் கொண்ட நற்குடியில் தோன்றியவர். அன்பு, ஆற்றல் ஆகிய பண்பு நலங்கள் சான்றவர்.

இவர், "பெண்ணிற் பெருந்தக்க யாவுள" என்னும் பொன்னுரைக்கு இலக்கியமாய்த் திகழ்ந்த இராசா சர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களின் அரும்பெறற் புதல்வியர் திருமதி மீனாட்சி ஆச்சியை இல்லத்தரசியாகப் பெற்றவர்.

திரு வெ. அவர்கள் நுண்மாண் நுழைபுலம் மிக்கவர். வாணிகத் திறம் சான்றவர். மன்பதைக்குத் தொண்டு செய்வதைப் பெரும்பேறாகக் கருதுபவர். "கேடில் விழுச் செல்வம் கல்வி" யே என்று தெரிந்து, அதன் வளர்ச்சிக்கு அயராது உழைப்பவர். அவருடைய தாளாட்சியில் வள்ளல் அழகப்பர் கண்ட கலைக்கோயில்கள் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வருதல் இதற்குத் தக்கதோர் சான்றாகும். இவ்வாறு பல துறையிலும் அரும்பணி புரிந்து வரும் திரு. வெ. அவர்களை அக்காலத்திலேயே ஆங்கிலேய அரசு "இராவ் பகதூர்", "திவான் பகதூர்" ஆகிய விருதுகளை வழங்கிச் சிறப்பித்தது. எனினும், தாய்நாட்டுப்பற்று மிக்க திரு. வெ. அப்பட்டங்களைத் துரும்பென நினைத்துத் துறந்துவிட்டார்.

இத்தகு நலங்கள் அனைத்தும் பொற்புற வாய்க்கப் பெற்ற திரு வெ. அவர்கள் இறைப்பற்று மிக்கவர். சிவநெறிச் செல்வர். வெண்ணீறு துலங்கும் மேனியர்.

அம்மலர் நாற்றிசையும் திரு வெ. அவர்களின் புகழ்மணம் பரப்பிச் சிறக்கவும், அன்பர் திரு வெ. அவர்கள் மேலும் பல்லாண்டு இனிது வாழ்ந்து தாய்நாட்டிற்கும் பொதுமக்களுக்கும் அருந்தொண்டாற்றி உயர்ந்து ஒளிரவும் எல்லாம் வல்ல ஆலவாய் அண்ணல் அருள் புரிவாராக.

T. P. MEENAKSHISUNDARAN,
Vice-Chancellor
Madurai University

UNIVERSITY BUILDINGS
MADURAI-2.
*6th August, 1966.*

I am happy to know that the Shastiabdapurti of Sri C. V. CT. V. Venkatachalam Chettiar, Secretary, Dr. Alagappa Chettiar Educational Trust is to be celebrated in the middle of October, 1966 and in that connection a souvenir is to be presented to him.

The services of Sri C. V. CT. V. Venkatachalam Chettiar as Secretary and Correspondent of the Alagappa Group of Institutions for about a decade are well-known. In the field of Industry and Commerce and in social work, he has distinguished himself by being a member of one or other of the authority concerned and thus rendered yeomen service to the public.

I wish him many more years of useful services to the humanity.

எஸ். செல்லபாண்டியன்,
பி.ஏ.பி.எல்.
சபாநாயகர், சென்னை சட்டசபை

செயின்ட் ஜார்ஜ்கோட்டை
சென்னை-9
6—9—66

திரு வேங்கடாசலஞ்செட்டியார் அவர்களுக்கு மணி விழா நடப்பது குறித்து மிகுந்த மகிழ்ச்சி அடைகிறேன். திரு செட்டியார் அவர்கள் சுமார் 40 ஆண்டுக்காலமாகக் கல்வி, தொழில், வணிகம் முதலிய துறைகளில் தொடர்ந்து பணி செய்து சிறப்பான முன்னேற்றங்களை ஏற்படுத்தி இருக்கிறார்கள். வள்ளல் அழகப்பர் கல்வி நிலையங்கள் உயர்ந்து ஓங்கிவளர்ந்து நிற்பது அவரது ஓயாத உழைப்பின் சின்னமாகும். அவர்கள் மேலும் நீண்ட நாட்கள் வாழ்ந்து தேசத்திற்கும், குறிப்பாகத் தமிழ் நாட்டிற்கும் சேவை செய்யவல்ல திறமையை அருள வேண்டி இறைவனைப் பிரார்த்திக்கிறேன்.

R. VENKATARAMAN
Minister for Industries.
Government of Madras

FORT ST. GEORGE
MADRAS
*August 26, 1966.*

Men like Sri Venkatachalam Chettiar who devote their time and talents for the welfare of community are rare. To work quietly but efficiently in the fields of medical relief, education, youth organisation and co-operation and to leave the impress of one's personality on the institutions with which one has been associated, are virtues that are not widely distributed. Sri Venkatachalam chettiar has endeared himself to the community by his silent and effective service. I send my greetings and good wishes to him on the occasion of his 61st Birth Day.

JOTHI VENCATACHELLUM
Minister for Health
Government of Madras

FORT ST. GEORGE
MADRAS-9

Sri C. V. CT. V. Venkatachalam Chettiar has been one of the leading citizens of Madras State who has contributed his best for the progress of education, health and human welfare. I send my greetings and good wishes to this eminent citizen on the occasion of his sixtyfirst Birth Day.

கோ. பூவராகன்
செய்தி விளம்பரத் துறை அமைச்சர்
தமிழகவரசு.

செயின்ட் ஜார்ஜ்கோட்டை
சென்னை-9.

கல்விக்காக அள்ளிக் கொடுத்த கொடைவள்ளல் டாக்டர் அழகப்பர், கொடை உள்ளத்தோடு உருவாக்கி வளர்த்த கல்விச் சாலைகளை இன்று கண்ணிமை போல் காத்துவருபவர் திரு.சி.வி.சிடி.வி. வேங்கடாசலம் செட்டியார் ஆவார். வர்த்தகத் துறையிலும் தொழில் துறையிலும் இவருக்குள்ள அனுபவம், சமய நெறியில் இவருக்குள்ள பற்று, தமிழ் நாட்டின் கல்வி வளர்ச்சிக்காக இவர் ஆற்றிவரும் அரிய பணிகள் ஆகிய அனைத்தும் பெரிதும் போற்றத் தக்கவையாகும். மாணவர்கள், ஆசிரியர்கள், பொது மக்கள் ஆகிய அனைவருடையமுழு ஒத்துழைப் பையும் பெற்று, அழகப்பா கல்வி நிலையங்களை இவர் காத்து வளர்த்து வரும் திறனை எவரும் பாராட்டாமலிருக்க முடியாது. அத்தகைய பெரியாரின் அறுபத்தோராவது பிறந்த தினத்தை அன்பர்கள் சிறப்பாகக் கொண்டாட முன்வந்திருப்பதை அறிந்து மிக்க மகிழ்ச்சி அடைகிறேன். அவருடைய தூய கல்வித் தொண்டு தமிழ் நாட்டுக்கு மேலும் கிடைக்க வேண்டும் என்பதே என் விருப்பம். அவர் நீடித்த புகழுடன் நீடு வாழ எல்லாம் வல்ல இறைவன் நல்லருள் புரிவானாக.

N. S. S. MANRADIAR
(Pattagar of Palayakottai)
Minister for Co-operation

FORT ST. GEORGE
MADRAS-9.
*5th August 1966.*

Sri C. V. CT. V. Venkatatachalam Chettiar has served his home District and the State in diverse fields and in various capacities. I send my greetings to Sri Chettiar on the occasion of his Sixtyfirst Birthday and wish him many more years of fruitful service.

HIS HIGHNESS
THE RAJA OF PUDUKKOTTAI

PUDUKKOTTAI PALACE,
CANTONMENT,
TIRUCHIRAPALLI
*5th August, 1966.*

It gives me very great pleasure to join in the felicitations to Sri C. V. CT. V. Venkatachalam Chettiar on the occasion of his Shastiabdapurti. He has lived useful life and has served the public in various capacities, always with distinction. He has, in a large measure, his community's charitable instincts and, like his distinguished father-in-law, the late Rajah Sir Annamalai Chettiar of Chettinad, has given expression to them in practice.

He has an engaging and amiable disposition, which makes meeting him a real pleasure.

I wish him many more years of health, business prosperity and benificent public activity.

M. A. CHIDAMBARAM

ADAYAR HOUSE,
MADRAS-25
*July 29, 1966.*

I am pleased to know that a special committee has been formed to celebrate the 61st Birthday of Shri C. V. CT. V. Venkatachalam Chettiar. Shri Venkatachalam Chettiar's contribution to the promotion of Education in this part of the country has been great and the several educational institutions which we see in Karaikudi today are a living testimony to his great services. After the demise of Dr. Alagappa Chettiar the responsibility of organising the several activities of the Dr. Alagappa Chettiar Educational Trust fell on his able shoulders and he deserves our warm appreciation for the efficient manner in which the activities of the Trust have grown. If education in the country, particularly higher education, should develop at a faster rate, it is necessary that there should be many more men with a sense of dedication to Education like him.

I felicitate Shri Venkatachalam Chettiar on his 61st birthday and wish him a long life of many more years of useful service to the country.

## SRI RAMAKRISHNA MISSION VIDYALAYA

T. S. AVINASHILINGAM

SRI RAMAKRISHNA VIDYALAYA P. O.
COIMBATORE DISTRICT

*August 4, 1966.*

I have great pleasure in offering my felicitations and best wishes to Sri C. V. CT. V. Venkatachalam Chettiar on his 61st Birthday. He has done great educational and social service to our country by his correspondentship of the Dr. Alagappa Educational Institutions at Karaikudi besides being a member of numerous social service organisations.

Dr. Alagappa Chettiar had the unique vision and honour of founding these institutions and providing for their necessary monetary support. It fell to Sri C. V. CT. V. Venkatachalam Chettiar to consolidate these institutions on a permanent basis. He has warmth and friendliness which are irresistable.

May he live long to serve them !

# பல்லாண்டு! பல்லாண்டு!!

## தமிழ்க்கடல், சிவமணி, சிவம்பெருக்குமீலர்

## ராய. சொ.

அன்பர் வேங்கடாசலனார் இன்று அறுபது ஆண்டைத் தாண்டி நிற்கின்றார். அவருக்குப் பல்லாண்டு! பல்லாண்டு!

வேங்கடாசலனார் வைணவத்தில் அழுத்தமான பற்றுடையவர். எனவே திவ்வியப்பிரபந்தத்தின் தொடக்கமாகிய, 'பல்லாண்டு' என்னும் சொல்லால் கட்டுரையைத் தொடங்குவது பொருத்தம்தானே. பல்லாண்டு பாடுதல் வைணவர்களுக்கு மட்டுமே சொந்தமல்ல. சைவப் பெரியார் சேந்தனார் சிவபெருமானுக்குப் பல்லாண்டு பாடினார்.

'பல்லாண்டு என்னும் பதம்கடந் தானுக்கே
பல்லாண்டு கூறுதுமே'

என்பது சேந்தனார் பல்லாண்டு. ஆதலால் சைவத்துக்கும் வைணவத்துக்கும் பொதுவான பல்லாண்டை, இரு பிரிவையும் வேறுபாடின்றிக் காணும் வேங்கடாசலனாருக்கு, இரண்டு சமயத்தையும் இரண்டு கண்களாகக் காணும் நான், நவின்று வாழ்த்துகின்றேன்.

அன்பர் வேங்கடாசலனார் கானாடுகாத்தானில் பிறந்தார்; சிறப்பு வாய்ந்த க. வெ. சிதம்பரம் செட்டியாருக்கு மகனாகத் தோன்றினார்; தனவணிகருக்குள்ளே ஓர் தனித்தன்மையை நிறுவிய, ராசா. சர். அண்ணாமலைச் செட்டியாருக்கு மருமகன் ஆனார். இன்று அன்னார் பெரும்பாலும் சென்னை நகரத்தில் வாழ்கின்றார். செட்டிமார் நாட்டிற்கு வருவாரானால் கானாடு காத்தானில், அவர் சொந்த வீட்டில் தங்குவது இல்லை. காரைக்குடியில் அழகப்பா கல்லூரி வட்டத்தில்தான் அவர் இருக்கை; கல்லூரிகளோடு அவருக்கு அவ்வளவு தொடர்பு.

வள்ளல் அழகப்பர் கோடி கொடுத்துக் காரைக்குடியில் கலைக் கோயில் கட்டினுர். அக்கோயிலைக் கண்ணெனக் காத்து வருகின்ருர் அன்பர் வேங்கடாசலனுர்.

அன்பர் வேங்கடாசலனுரை 'சி. வி. சிடி. வி' என்று சொன்னுல்தான் பளிச்சென்று எல்லோருக்கும் தெரியும். இவ் விலாசத்தை இந்த நாட்டில் அறியாதவர் யாரும் இருக்க மாட்டார்.

அன்பர் வேங்கடாசலனுர் நிறைந்த பொருட் செல்வம் உடையவர். அவர் பிறரைப்பற்றிக் கூறும்போது 'பணக்காரர்', 'பணக்காரர்' என்று சொல்லுவார். அதனுல் அவர் பணத்தில் குறைந்தவர் என்று எண்ணி யாரும் ஏமாற வேண்டாம்!

செல்வத்தில் அவரைவிட நிறைந்தவர்கள் தனவணிக நாட்டில் பலர் இருக்கலாம். எனினும் செல்வாக்கில் அவருக்கு இணை யானவர் விரல்விட்டு எண்ணக் கூடிய சிலர்தான் இருக்கக்கூடும். எந்தக் காரியத்தையும் எளிதில் முடித்துவிடுவார். நாட்டில் செல்வாக்குள்ள பலரையும் நன்கு அறிவார். செயலை முடிக்கும் திறனிலும், முயற்சியிலும் பெரிதும் வல்லவர்.

அன்பர் வேங்கடாசலனுர் குடும்பக் காரியம் பற்றிச் சிறிதும் கவலைப்பட வேண்டாத நிலையில் ஆண்டவன் அவரை வைத்திருக் கின்ருன். அவருக்கு இரண்டு மகளும், ஒரு மகனும் உளர். இரண்டு பெண்களையும் தொழில் முறையில் சிகரத்தில் நிற்கும் அ. மு. மு. குடும்பத்தில் மணம் செய்து கொடுத்துவிட்டார். ஒரு மருகர், அ. மு. மு. வெள்ளையன் செட்டியார் மைந்தர் எம். வி. அருணுசலம். மற்ருெரு மருகர் அவர் தம்பியும், அண்மையில் புகழுடம்பு பெற்ற அ. மு. மு. முருகப்ப செட்டி யாரின் மைந்தருமான எம். எம். முத்து. இவ்விருவரும் மிக்க திறமை வாய்ந்தவர்கள்.

தம் ஒரு மைந்தன் சிதம்பரத்திற்கு ராசா. சர். அண்ணுமலைச் செட்டியாரின் இளைய மைந்தரும், தமது மைத்துனருமாகிய, மிகுந்த தொழில் திறம்படைத்த, விரிந்த பெரியமனம் கொண்ட, மு. அ. சிதம்பரம் செட்டியாரின் மகளை மணமுடித்து, மருகியாகப் பெற்ருர். மகளுக்குத் தந்தை செல்வ வளத்தைக் குவித்துக் கொண்டிருக்கின்ருர். எனவே அன்பர் வேங்கடாசலனுருக்குக் குடும்பக் கவலை ஏது? அன்பர் வேங்கடாசலனுர் திறமை மிக்கவர். அதோடு அதிட்டமும் சேர்ந்தது.

குடும்பப் பொறுப்பைத் தாம் எடுத்துக்கொண்டு, நல்ல பொதுத்தொண்டில் ஈடுபடுமாறு அன்பர் வேங்கடாசலனுருக்குக் கடவுள் இட்ட கட்டளை இது என்று நாம் கொள்வோம். அழகப்பா கல்லூரிகளையும் அன்னபிற அறங்களையும் ஒல்லுமாறு ஆற்ற ஆண்டவன் அவருக்கு வழி வகுத்துவிட்டிருக்கின்றார். அக் கடமையை அவர் செய்துகொண்டுதான் வருகிறார். இன்னும் சிறப்பாகச் செய்யவே அவருக்குப் பல்லாண்டு பல்லாண்டு பகர்கின்றேன்.

அன்பர் வேங்கடாசலனுர் அந்நாள் தொட்டே, பலருக்கும் தம்மாலான துணைபுரியும் இயல்பினர். எனினும் தம் பணத்தை அள்ளிக் கொடுத்துவிடமாட்டார் என்று சொல்லுவர். அது முன்னே; இப்பொழுது அப்படியில்லை. தக்க அறங்கள் அறிந்து கொடுக்கின்றார். அழகப்பா உடற்பயிற்சிக் கல்லூரியில் ஓர் விளையாட்டு அரங்க மண்டபம் கட்டத் தம் மனைவியின் பெயரால் ரூ. 28,000 கொடுத்தார். கல்லூரி வட்டத்தில் தம் பெயரால் மருத்துவ நிலையம் ஒன்று கட்ட ரூ. 25,000 வழங்கினர். ஒவ்வொரு கல்லூரியிலும் உபகாரச் சம்பளம் அளித்து வருகின்றார். இராமேச்சுரத்தில் பயணிகள் தங்க விடுதி அமைக்கத் தக்க பொருள் ஈந்தார்.

அரியக்குடிப் பெருமாளிடம் அவருக்கு அளவு கடந்த பற்று. க. வெ. குடும்பத்தார் தொன்றுதொட்டு அரியக்குடிக் கோயிலுக்குப் பல அறப்பணிகள் செய்திருக்கின்றனர். அக் கோயிலுக்கு அன்பர் வேங்கடாசலனுர் பல ஆண்டுகளாக மானேஜிங் டிரஸ்டியாக இருந்துவருகிறார். அக்கோயிலை வருமானத்திலிருந்து நடத்தத் தக்கவாறு, ஓர் மூலதனத்தை உண்டாக்க இலட்சரூபாய்க்குமேல் திரட்டுவது என்று திட்டமிட்டு, தாம் முதலில் ரூ. 25,000/- அளித்தார்.

அன்பர் வேங்கடாசலனுர் தெய்வ பக்தி மிக்கவர். திருமாலையும் சிவனையும் வேறுபாடின்றிக் காண்பவர். திருமாலிடம் சிறிது கூடுதலான அன்பு உடையவர் என்று கூறலாம். எனினும் அவர் நெற்றியில் திருநீறு தான் விளங்கித் தோன்றும். அசல் வேங்கடாசலனுரையே,

> 'கரிய மேனிமிசை வெளியநீறு சிறிதேஇடும்
> பெரிய கோலத் தடங்கண்ணன்'

என்று ஆழ்வார் பாராட்டுகின்றாரன்றோ?

அண்மையில் அவர் செய்த திருத்தலப் பயணத்தால் மிக்க சிறப்பை அடைந்தார். தேவாரமும் திவ்வியப் பிரபந்தமும் பெற்ற, அருளாளர்கள் பாடிய, கோயில்களையெல்லாம் சென்று வணங்கிப் பாசுரங்களைப் பாடக் கேட்டு மகிழும் பேறு பெற்றார். அதோடு,

'கொல்லா விரதம் ஒன்று கொண்டவரே நல்லார்'

என்று தாயுமானப் பெரியார் அருளியதற்கு ஏற்ப, கொல்லா விரதம் மேற்கொண்டு, புலால் உணவை நீக்கிய அவர் சிறந்த செயல் எல்லாவற்றிற்கும் சிகரம் போன்றது.

பல்கலைக் கழகங்கள்தாம் நூல் ஆராய்ச்சிப் பிரிவைத் தோற்றுவிப்பது மரபு. அழகப்பா கல்லூரியில் தமிழ் ஆராய்ந்து நூல் வெளியிடும் புதுமையை அன்பர் வேங்கடாசலனார் கண்டார். அவரின் நெடுநாள் நண்பனாகிய என்னை அப்பணியில் ஈடுபடுத்தினார். இரண்டு ஆண்டுகளில் 'கம்பனும் சிவனும்', 'வில்லியும் சிவனும்' என்ற இரண்டு அரிய ஆய்வு நூல்கள் வெளியாயின. தொடர்ந்து இன்னும் பல வெளிவரும். இத் தமிழ்ப் பணி காரணமாக எனக்கும் அவருக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டதற்கு மகிழ்ச்சியடைகின்றேன். அதோடு நான் சொல்லும் அறங்களுக்கு அவர் பொருள் உதவி வருவது கண்டு பெருமிதம் எய்துகின்றேன்.

அன்பர் வேங்கடாசலனார் அண்மையில் சென்னை மாநகரில் மணிவிழாக் கொண்டாடி மகிழ்ந்தார். அன்று உறவினர் அனைவருக்கும், ஏராளமான நண்பர்கட்கும் கோடி கொடுத்தார். அவர் கொடுத்த ஒரே மாதிரிக் கோடி ஆடையைப் புனைந்து, ஆண்களும், பெண்களும் பெருக அவ்விழாவில் கலந்து கொண்டது மிக்க சிறப்பாக இருந்தது. தமிழ் நாட்டிலுள்ள பல்லாற்றானும் பெரும் சிறப்பு வாய்ந்த பல பெரியார்கள் மணி விழாவிற்கு வந்து, வேங்கடாசலனாரை வாழ்த்தினார். அந்த நன்னாளில், தம் வாழ்நாளில் கிடைத்தற்கரிய பேறு என்று ஒவ்வொருவரும் கருதத்தக்க, திருத்தலப் பயணத்தை நூலாக வடித்து 'திருத்தலப் பயணம்' என்ற பெயரிய, கண்கவர், சிறந்த நூலை வெளியிட்டுப் புகழ் பெற்றார்.

அன்பர் வேங்கடாசலனார் அறச் செயலாளராக இருந்து காக்கும் கல்லூரிகள் இன்று அவரைப் பாராட்டி விழா எடுத்து, மலர் வெளியிட்டு, சிறப்படைகின்றன. அன்பர் வேங்கடாசல னாருக்குப் பல்லாண்டு! பல்லாண்டு!!

தி. மு. நாராயணசாமி பிள்ளை
எம்.ஏ.,பி.எல்.,

தில்லை நகர்
திருச்சிராப்பள்ளி-3
5—10—66

நான் உயர் திரு சி. வி. சிடி. வி. செட்டியார் அவர்களைப் பல ஆண்டுகளாக நன்கு அறிவேன்; அவர் ஒரு நல்ல குடியிற் பிறந்தவர்; அவர் நம் தென்னாட்டிலேயே பல துறைகளிலும் மங்காத சோதியாய்ப் பிரகாசித்துக்கொண்டிருக்கும் ஒரு பெரியவராகிய ராஜா சர். அண்ணாமலை செட்டியார் அவர்களின் புதல்வியை மணந்தார். நான் முதல் முதலில் இவரோடு அரியக்குடி சீனிவாசப் பெருமாள் கோவில் சம்பந்தமாகத் தொடர்பு கொண்டேன். 1941-ஆம் ஆண்டென்று நினைக்கின்றேன். அந்தக் கோவிலைப் பற்றி ஒரு விவகாரம். அது மிகவும் சிக்கலாக இருந்தது. ஒரு தக்கவரை நியமித்தால்தான் அந்த விவகாரம் முடிவு பெற்றுக் கோவில் நிர்வாகம் நன்மைக்கு வரும் என்று எண்ணி திரு. சி. வி. சிடி. வி. செட்டியார் அவர்களை அழைத்து தர்மகர்த்தா வேலையை ஒப்புக்கொள்ளும்படி கேட்டுக் கொண்டேன். அவரும் சம்மதித்தார். அன்றுமுதல் அந்தக் கோவில் நிர்வாகம் வளர்ச்சி பெற்று வந்து கொண்டிருக்கின்றது. அந்தக் கோவிலை நன்றாக நிர்வகிக்கப் பெறும் கோவில்களுள் முன்னணியில் வைக்கலாம். ஒரு காரணம் இவருடைய நிர்வாகத் திறன்; இரண்டாவது கோவில் நிர்வாக வளர்ச்சியில் இவர் கொண்டுள்ள பேர் ஊக்கம். இவர் ஒரு நல்ல பக்திமான். கோவில் நன்றாகப் பராமரிக்கப்பட்டு வந்தால்தான் மக்கள் வாழ்வாங்கு வாழமுடியும் என்ற அடிப்படை நம்பிக்கை உடையவர். ஆகையால் கோயில் மேம்பாட்டைக் கண்ணும் கருத்துமாகக் கவனித்து உழைத்துவந்தார். இவருக்கு அரியக்குடி சீனிவாசப் பெருமாள் அருள் நிரம்ப உண்டு. அவர் தர்மகர்த்தாவாக ஆன பிறகுதான் அவருக்கு நல்ல குடும்ப விளக்கம் செய்ய ஓர் ஆண் மகன் வந்து தோன்றினான்.

இரண்டாவதாக, பொருளாதாரத்துறையில் தன் மாமனார் ராஜா. சர். செட்டியார் அவர்களுடன் தொடர்புகொண்டு அவருடைய நுண்ணறிவு, ஆற்றல். சேவை மனப்பான்மை, மக்களை எடைபோடுதல், மக்களோடு சுமுகமாகப் பழகுதல் இன்னோரன்ன பண்புகளில் தலைசிறந்து விளங்குபவர். சமூகத்தில் பெருமதிப்பையும் செல்வாக்கினையும் பெற்றவர். இராமநாதபுரம் ஜில்லா போர்டு தலைவராகவும் இருந்து நற்செயல்களைச்

செய்து புகழ் பெற்றுள்ளவர். நல்ல பொருளாதாரத் துறையில் திருமகள் நாளுக்கு நாள் அவருக்கு வேண்டிய அளவு அருள் புரிந்து வருகின்றார்.

மூன்றாவதாக, கோவில் நிர்வாகம், பொருளாதார நிர்வாகம் இவைகளில் மட்டும் அன்றி கல்வித்தாபன நிறுவனங்களிலும் இவர் புகழ் உயர்ந்துஓங்கி விளங்கிக்கொண்டு வருகின்றது. நமது நாட்டில் அற்புதமாகத் தன் பணத்தையே தன் பணம் என்று கருதாமல் பொதுமக்களுக்காகப் பெரிய பெரிய கல்லூரிகளைக் காலஞ்சென்ற வள்ளல் அழகப்ப செட்டியாரவர்கள் நிறுவிச் சென்றார்கள். அவைகள் இப்போது நல்ல மணம் கமழ்ந்து மக்களுக்குப் பெருஞ் சேவை செய்து வருகின்றன. அவைகளை நிறுவிய பெருமை வள்ளலுக்கு இருந்தாலும், அவைகளை நன்றாகக் கண்காணித்துப் பராமரித்துப் பொருளாதாரத் துறையில் நெருக்கடி நேரும் போதெல்லாம் அதைத் தவிர்த்து நன்கு நிறுவனங்கள் பணிசெய்ய வசதி செய்துகொண்டிருக்கும் பெருமை நமது உயர்திரு சி. வி. சிடி. வி. அவர்களுக்கே உரியது. எல்லோரும் இதற்காக அவருக்கு நன்றி செலுத்தக் கடமைப் பட்டவர்கள்.

இவர் சிறந்த பக்திமான். அண்மையில் இவர் தமிழ்க்கடல் உயர்திரு இராய. சொ. அவர்களிடம் தொடர்புகொண்டு நண்பர்களோடு கோவில்தோறும் சென்று ஆங்காங்குப் பதிகங்கள் பாடி, நமக்கு இணையில்லாத கடவுளருட்செல்வமாகும் தெவிட்டாத அமுதத்தை, அனுபவித்து வருவது சாலவும் போற்றத் தக்கது. அதைக் கேட்கக் கேட்க நான் மிகவும் மகிழ்ச்சி அடைகின்றேன். இவர் பெரும் பக்தர்; பெரும் பொருளாளர்; பெரும் உபகாரி; பெரும் நிர்வாகி; பெரிய சமூக பொருளாதார கல்வி முதலிய துறைகளின் சிறந்த தொண்டர். இவரும் இவர் குடும்பமும் நன்றாகச் செழித்து ஓங்கி வளர்ந்து கொண்டே இருக்க வேண்டும் என்று எல்லாம் வல்ல அன்னை ஸ்ரீ அகிலாண்டேசுவரி சமேத ஜம்புகேசுவரரை வணங்கி வாழ்த்துகின்றேன்.

Dr. S. G. MANAVALA RAMANUJAM
M.A. Ph. D. (Lond) D.I.C.,
F.R.M.S.

"BAGHYA GOVIND"
498, POONAMALLEE HIGH RD.,
VEPERY, MADRAS-7.
26-8—66

I offer my warmest felicitations to Sri C. V. CT. V. Venkatachalam Chettiar on his completing his first sixty years span of life. Completion of sixty years of life is regarded as an eventful event in Hindu Society and often celebrated with eclat by near relations and friends. I hope that Mr. Chettiar's Shastiabdapoorthi will be celebrated with due pomp, religious fervour and best wishes from all.

My association with Sri Venkatachalam Chettiar started when I was nominated to the late Dr. Alagappa Chettiar's Educational Trust by the University of Madras in about 1947 when the first College in Karaikudi was started. I have developed great regard and esteem for Mr. Chettiar's capacity, quick understanding of problems, great administrative ability and tactful handling in delicate or serious situations. It is these qualities perhaps and his confidence in him that led the shrewd late Dr. Alagappa Chettiar to throw the burden of administration of his Educational Trust on his shoulder, when a successor had to be found for the late Shri Ramanathan Chettiar as Secretary and Correspondent of the Trust. Shri Venkatachalam Chettiar has been ably administering Dr. Alagappa's Trust and the educational institutions of the Trust. The Trust activities have been greatly enlarged by the vision and purposefulness of Mr. Chettiar.

Shri Venkatachalam Chettiar's services to the Tamil Nad and more particularly to the land of Chettiars in the Ramnad District may not be forgotten—they are remembered with gratitude even today. His varied activities as President of the District Board of former days, as Managing Director of the Electric Supply Corporations in the District and as member of various financial organisations and

welfare associations have all left an indelible mark and a name for him to be gratefully remembered by present generation and by posterity.

Religious that he is, may I pray to God Lord Shri Venkateswara at Tirumalai and to Sri Thiruvengadamudayan at Ariyakkudi of which temple he is the President of the Managing Trust to shower their bleesings and bestow on him all happiness and best of health to carry on the selfless task of public and educational activities which he has taken on himself. The Dr. Alagappa's Educational Trust is particularly most fortunate in having his services which I hope will continue for long years to come. Pray God bless Mr. Chettiar and his family.

DR. M. S. THACKER

PLANNING COMMISSION
NEW DELHI
*7th August 1966.*

I have had the pleasure of knowing Shri C. V. CT. V. and have come in close contact with him over last many years. I have, in my association with him, found in him a person of sterling qualities. Shri C. V. CT. V. over these years has devoted his life to service in the field of education, social services and other areas and has made significant contributions.

I have always enjoyed, and have much benefitted from, my talks with Shri C. V. CT. V. Talking with him, has been a great stimulus. He has heart always ready to respond and full of warmth. His is a deeply religious and pious disposition.

In extending with all his friends, and he has many, my felicitations and all best wishes, I pray that he be spared for many more years in the cause of service to which he has dedicated his life.

Dr. A. JOGARAO, M.Sc., D.Sc.,
MEM.Electrochem, Soc.(U.S.A)
A.R.I.C.(Lond)
Controller-General of Patents
Designs and Trade Marks.

CENTRAL BLDG., QUEEN'S ROAD,
BOMBAY
*5th September, 1966*

My hearty felicitations to Shri C. V. CT. V. Venkatachalam Chettiar on the occasion of his Shastiabdapurti and my sincere good wishes to the Committee who have chosen to fittingly celebrate the occasion.

Shri Venkatachalam Chettiar is veritably the nucleus in the Alagappa Educational Campus at Karaikudi from which radiate year after year teams of graduates in different faculties of learning and skills.

Shri Chettiar has a formidable record of good things accomplished. The diversity of his activities and the sense of fulfilment, I am sure, lie at the bottom of his good health. Many institutions in that area, owe their successful functioning to Shri Venkatachalam Chettiar's philanthropy and drive.

Shri Venkatachalam Chettiar is doubly pious, if one may put it that way. In the midst of renowned Chettiar families who take the pride of place as worshippers of Lord Shiva, Shri Venkatachalam Chettiar knows no such distinctions and his services are evenly balanced to all devotees, be they of Lord Shiva or Lord Vishnu!

May Providence bestow on Shri Venkatachalam Chettiar continuing good health and many more years of fruitful endeavour.

இராதா தியாகராசன்

"மீனாட்சி"
ம து ரை.
*5—9—1966*

# வாழ்க பன்னாள்

எப்பொழுதும் புன்னகை பூத்த முகமும், உளம் உவந்த உரையாடலும் பூரித்த தோற்றமும் கொண்டு, எவ்விடத்தும் இனியராய், யாவர்க்கும் அன்பராய் விளங்கும் திரு. சி.வி.சிடி.வி. வேங்கடாசலனார், தமிழக மக்கட்குப் புதியரல்லர்; பல்லோர் அறிந்த செல்வப் பெருமகன்.

உலகு புகழும் தனவணிகர் நன்மரபில் பிறந்த இச்செம்மல் அண்ணாமலையரசரின் அன்புடை மருகர்.

மாநிதிச் செல்வமும், மாமனைச் செல்வமும், மக்கட் செல்வமும் தக்காங்குப் பெற்ற இத்தமிழ் மகன், இன்று அகவை அறுபது நிறைந்த நாண்மங்கலச் செல்வம் பெறுகின்றார்.

வாணிகத்திலும், தொழிலிலும், பொதுநலப் பணியிலும், திட்பமும் நுட்பமும் செறியப் பெற்ற இவர்கள்பால் அருங்கலை பேணும் ஆர்வமும் கல்விபுரக்கும் கருத்து வளமும் கனலிக் கிடக்கின்றன.

அழகப்பரின் அருங்கொடை நிறுவனங்களை வளம்படப் பேணித் திறம்பட இயக்குவதில் தன்னிகரற்ற இத் தாளாளர் நமது நாட்டின் கல்வி வளர்ச்சிக்குப் பேராக்கம்; கலை வளர்ச்சிக்குத் தனி ஊக்கம்.

இப்பெரும் பணிக்கிடையும், இறைபணி மறவாத இப் பெருமகன், ஆலய வழிபாடும் நல்லறப் பணியும் பாங்குறப் புரிந்து, தமது நல்வாழ்வுக்கு ஏற்றம் செய்கின்றார்.

இவ்வாறு நயத்தகு செய்கையும் நன்மனப் பாங்கும் நன்கமைந்து, நல்லார் நட்புறவும் நாடா நல்லிசையும் நனி சிறந்து ஒக்கலும் மக்களும் பொலிந்து மணிவிழாக்கொண்டு மாண்புறும் வேங்கடாசலனார், எண்பதும், நூறுமாகிய பல்லாண்டு விழாக்கள் பல கண்டு, மிக்குறு வாழ்நாள் மேதகு செல்வத்தால் மேம்படுக என அங்கயற் கண்ணியின் பொங்கு பேரருளைப் பரவி வாழ்த்துகின்றேன்.

P. P. I. VAIDYANATHAN, I. C. S.

B-7, WELLESLEY ROAD,
NEW DELHI-11

*2nd August 1966*

Thanks very much for your letter regarding the Shashti-abdapurti of Shri C. V. CT V. Venkatachalam Chettiar. I am very happy in joining you all in felicitating Shri Venkatachalam Chettiar on this occasion and wish him a long and happy life to continue his contributions to piety, education and public service.

C. D. NATARAJAN, M.A.,B.L.,
Secretary to Government,
Legislative Assembly Department

MADRAS
*18th August 1966.*

I am indeed very glad to know that the Shastiabtapoorthi of Sri C. V. CT. V. Venkatachalam Chettiar will be celebrated appropriately and with eclat on 18-10-1966. There cannot be any person in Tamizhagam who does not know Sri C. V. CT. V. Venkatachalam Chettiar and his signal services to the cause of education in general and technical education in particular. Worthy son-in-law of an illustrious father-in-law, the late Raja Sir Annamalai Chettiar, Sri C. V. CT. V. Venkatachalam Chettiar has espoused good and great causes in the fields of education, art, culture and industries. Special mention has to be made of his deep interest in Dr. Alagappa Chettiar's Educational Trust and the famous group of institutions in Karaikudi which owe their present position and prominence to the steadfast services of Sri C. V. CT. V. Venkatachalam Chettiar.

Popular and prominent, besides being pious and philonthropic Sri C. V. CT. V. Venkatachalam Chettiar has endeared himself to one and all in Tamizhagam. I for one must make special mention of his great interest in the development of Kodaikanal as a Hill Station as well as a Health and Tourist Resort. He has very wide vision and has many useful schemes for its development. Some of his dreams have come true, some remain yet to be realised and I have no doubt that with his perseverence and purposeful endeavour he will accomplish them as he has done many other things.

I wish to convey my very respectful felicitations to him on the completion of 60 years of his age and pray that the Almighty, the Supreme Ruler of the Universe, may endow him with health, happiness and long life so that he may continue to serve the above causes for many many more years to come.

V. BALASUNDARAM, I.A.S.,
Member,
Board of Revenue and Commissioner
of Land Revenue,
Commercial Taxes and Transport

CHEPAUK, MADRAS-5.
9—8—1966

I am glad to know that the Shastiabdapurti of Sri C. V. CT. V. Venkatachalam Chettiar will be celebrated on 18-10-66. I have known Sri Venkatachalam Chettiar for a long time. When I was Collector of Ramnad, I was closely associated with the educational and social activities of Sri Venkatachalam Chettiar. Later, as Commissioner of Labour, Registrar of Co-operative Societies and Secretary to Government(Education and Public Health Department), I had the privilege of associating myself with his work in the fields of labour, co-operation, education and health. I always valued his knowledge and experience. He has been taking considerable interest in many and varied activities particularly in education and health matters. I greatly appreciate the success that has attended his efforts in stabilising and developing the various educational institutions in Dr. Alagappa Chettiar Campus at Karaikudi. He is an able administrator and educationist. I congratulate him on his Shashtiabdapurti and wish him long life, health, happiness and success.

C. V. NARASIMHAN, I.P.S.

TIRUCHIRAPALLI,
*3rd September 1966.*

I feel happy to know the arrangements being made for the celebration of the Shashtiabdapurti of Sri C.V.CT.V. Venkatachalam Chettiar. His service for the cause of education and his energetic efforts for stabilising the administration of various educational institutions in Karaikudi when they were suddenly left without guidance and direction from their founder Dr. Alagappa Chettiar on his death in 1957 are too well known to need recollection. I take this opportunity to extend my hearty felicitations to Sri C. V. CT. V. Venkatachalam Chettiar.

K. S. SIVASUBRAHMANYAN, I. A. S.

3, VENKATAKRISHNA IYER ROAD,
MADRAS-28,
*29th July, 1966*

I thank you for your kind letter intimating the Celebration of the 61st Birthday of Sri C. V. CT. V. Venkatachalam Chettiar. I have great pleasure in associating myself with the sponsors of this move and in wishing Sri Venkatachalam Chettiar many more years of service to the public and to the institutions for which he has already done so much.

S. VENKATESWARAN, I.C.S. *(Retd.)*

MADRAS-28.
28—7—1966

I am glad to learn that Shashtiabdapurti of my good friend, Sri C. V. CT. V. Venkatachalam Chettiar is proposed to be celebrated in a fitting manner.

I can write from personal knowledge only about his work for the Alagappa Group of Institutions at Karaikudi. The late Dr. Alagappa Chettiar dreamt many big dreams, but the best of them was his permanent and most beneficial work for education at Karaikudi. This dream also might have largely remained as a dream, but for the hard and sustained work of co-operation and organisation he received from Sri C. V. CT. V. Venkatachalam Chettiar. Together they formed a formidable combination, and his fine group of institutions at Karaikudi was the result. It is to the lasting credit of Sri C. V, CT. V. Chettiar that Karaikudi has been put in the educational map of India, with immense potentialities for education and research in the fields of humanities and science and technology. May my friend live for many many years more, and have the pleasure of seeing these institutions grow from strength to strength, and give more and more for the benefit of our country.

PADMA BHUSHAN
K. BALASUBRAMANIYA AIYER,
B.A., B.L., M.L.C.

ASHRAMA,
LUZ, MADRAS-4.

I am very glad to know that Sri C. V. CT. V. Venkatachalam Chettiar's 61st Birthday will be celebrated by his friends and admirers on 18th Oct. 1966.

For many years he was Director of Indian Bank Ltd., along with me and we became friends. Mr. Chettiar is a public spirited and philonthropic gentleman. He has been connected with many public institutions and he has done great service to the country, in many fields. He has always taken great interest in education as Secretary of the Alagappa Group of Institutions. He has rendered distinguished service to those institutions and to the cause of education in general.

He is a keen businessman and by his own ability he improved his finances greatly. He is a gentleman of very pious disposition. He is the son-in-law of Raja Sir Annamalai Chettiar, the Late Rajah of Chettinad. He is the Trustee of Ariayakudi Devasthanam. Once I visited that Institution with him and I appreciated very much the work he has done as a Trustee and great improvements were carried out by him at the Devasthanam. He has been a sincere friend to me for all these years.

I pray to God that he may vouchsafe to him long life, health and prosperity.

A. N. TAMPI, B.A. (OXON)
Barrister-at-Law
Chairman,
State Education Advisory Board

THYCAUD,
TRIVANDRUM,
*2nd October, 1966*

Sri C. V. CT. V. Venkatachalam Chettiar, C.V.CT. as we affectionately call him is as substantial as he looks. The sad and unxpected demise of the great Alagappa created a void in the educational field in South India and this was most keenly felt at Karaikudi which was fast developing into a great University Centre. C.V.CT. stepped into his shoes and restored the stability and stature of the cluster of Educational Institutions in Karaikudi. He is a financial wizard and I have always felt that he would make an excellent Minister of Finance in any Cabinet, Central or Local. He is celebrating his Shastiabdapoorti this month. May I as an old friend wish him all the best on this occasion. May the ALMIGHTY bless him with long life, health and cheer.

டாக்டர் அ. சிதம்பரநாதன் மதுரை
முதல்வர்
தியாகராசர் கல்லூரி

# சைவச்சிலர்

சைவச்சிலர் திரு க. வெ. சித. வெ. வேங்கடாசலஞ் செட்டியார் அவர்களை முப்பதாண்டுகளாக அறிந்துள்ளேன். அண்ணாமலைப் பல்கலைக் கழகம் நிறுவிய செட்டி நாட்டரசர் திரு. மு. அண்ணாமலைச்செட்டியார் அவர்கள் மாளிகையில் முதன் முறை கண்டேன். அன்றுதொட்டு அவர் என்னிடம் பேரன்பும் பெருமதிப்பும் வைத்துத் தம் நண்பர்களில் என்னை ஒருவனாகக் கொண்டு பேணிவருகின்றார். அவருடைய இன்மொழிகளாலும் இனிய முகத்தாலும் கவரப்பட்டுள்ள பலருள் நானும் ஒருவன். "ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே செல்லும் வாயெல்லாஞ் செயல்" என்னுந் திருக்குறட் கருத்துக்கேற்பப் பிறர்க்கு உதவி செய்து வருபவர் திரு. வேங்கடாசலஞ் செட்டியார். அவர் செயத் தக்கவற்றைக் காலமறிந்து செய்து, செயத்தக்க அல்லவற்றைத் தவிர்த்து வரும் பெற்றியுடையவர்; வள்ளல் அழகப்பர் நிறுவிய பல்வேறு கல்வி நிலையங்களைப் பொன்னெனப் பொதிந்து போற்றிவரும் பெருமையுடையவர்; மனத்திட்பமும் வினைத் திட்பமும் உடையவர்; தொண்டுள்ளத்தோடு பணியாற்றி வருபவர்.

இராமநாதபுரம் மாவட்டக் கழகத் தலைவராகப் பல்லாண்டு கட்கு முன்னரே பணியாற்றிச் சிறப்புப் பெற்ற திரு. செட்டியார் ஏனைய நிறுவனங்களிற் பங்கு பெற்றுப் பணியாற்றி அந் நிறுவனங்களை உயர்த்தி நிறுத்தியிருப்பது பொருத்தமானதே. நாட்டுப்பற்றும் மொழிப்பற்றும் கடவுட்பற்றும் உந்த, அவர் புரிந்துள்ள செயல்கள் பற்பல பாராட்டத் தக்கவை. அவர் எல்லாம் வல்ல இறைவனருளாற் பல்லாண்டு பல்லாண்டு உடலுரத்துடன் இனிது வாழ்க என வாழ்த்துகின்றேன்.

Dr. R. SUBRAMANIAM,
B.SC., M. D. M. R. C. P. (LON)
Physician, General Hospital
Professor of Medicine
Madras Medical College.

"LALITHA VILAS"
8-C. BALFOUR ROAD,
KILPAUK, MADRAS-10.
30—7—1966

I have known Sri C. V. CT. V. Venkatachalam Chettiar for a number of years for the leading part that he has been taking in the matter of education and his untiring zeal for the public causes. I used to see him year after year in Kodaikanal, taking lot of interest in the improvement of Kodaikanal town. I am sure such pilanthropic gentlemen will help the country to go a long way. It is only because of such people our country is improving. I pray to God Almighty for his long llfe so that he may continue to serve the country and our fellowmen.

கரு. முத்து.
தி. சுந்தரம், பி.காம்.

மதுரை
7—10—66

"உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்" என்று நல்லவர் தொடர்பிற்கு வள்ளுவர் பெருமான் இலக்கணம் கூறுவர். இதற்குத் திரு. க. வெ. சித. வெ. வேங்கடாசலம் செட்டியார் அவர்கள் ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகின்றார். அவர் பழகுதற்கு இனியவர். அவரைக் கண்டு சொல்லாடிக் கொண்டிருந்தால், பொழுது போவதே தெரியாது. அவரை ஒருமுறை பார்த்துப் பழகியவர்கள் மீண்டும் அவரோடு தொடர்புகொள்ள விரும்புவர்.

இதற்குக் காரணம் திரு. வே. அவர்கள் அன்பு நிறைந்தவராக இருப்பதாகும். இவர், "அன்பின் வழியது உயிர்நிலை" என்னும் பொன்மொழிக்குச் சிறந்த சான்றாகத் திகழ்பவர். இந்த அன்புதான் இவரிடம் மிகப் பல பெருமக்களை ஈர்த்துப் பிணைத்து வைத்துள்ளது.

திரு. வே. அவர்கள் சிறந்த தொண்டுள்ளமும் வாய்க்கப் பெற்றவர். கல்விக்கும், சமூகத்திற்கும், நாட்டின் தொழில் வணிக வளர்ச்சிக்கும் அவர் நெடுங்காலமாக அரும் பணி புரிந்து வருகிறார். மேலும், காலஞ்சென்ற டாக்டர் அழகப்பர் கண்ட கலைக்கோயில்கள் அனைத்தையும் இவர் கண்ணுங் கருத்துமாக வளர்த்து வருகிறார்.

இத்தகைய பண்புகள் வாய்ந்த திரு. வே. அவர்களின் அறுபதாம் ஆண்டு நிறைவு விழா சிறப்புற நடைபெற இருப்பதறிந்து மகிழ்ச்சியடைகிறேன். அவர்கள் மேலும் பல்லாண்டு இனிது வாழ்ந்து புகழ் சிறந்தோங்கித் திகழ அங்கயற்கண்ணி அருள் புரிவாராக.

கி. ஆ. பெ. விசுவநாதம்

தி. வ. 1997 ஆவணி 23
திருச்சிராப்பள்ளி-8.

திரு க. வெ. சித. வெ. வே அவர்கள் பெருங்குடியிற் பிறந்து பெருங்குடியில் மணந்து, பெருஞ் செல்வம் பெற்று, பெரும்பணி புரிந்து பெருவாழ்வு வாழ்ந்து வருபவர். அவரது அறுபதாம் ஆண்டு விழாச் செய்தி என்னைப்பெரிதும் மகிழ்விக்கிறது.

எவரிடத்தும் நகை முகம், இயன்ற அளவு நன்கொடை, எப்போதும் இன்சொல், எவரையும் இகழ்ந்துரையாத் தன்மை ஆகிய நான்கையும் ஒருங்கே அவரிடத்திற் காணலாம். இது குறளைப் படித்து அமைத்துக்கொண்ட வாழ்வோ, அல்லது இவருக்காகப் பிறந்த குறளோ என்னவோ, குறள் இதுதான்.

''நகை ஈகை இன்சொல் இகழாமை நான்கும்
வகைஎன்ப வாய்மைக் குடிக்கு.''

இது திரு க. வெ. சித. வெ. வே. அவர்களின் குணங்களை மட்டும் குறிப்பிடவந்த குறளல்ல. அவரது குடிப் பெருமையையும் சேர்த்துக் கூறவந்த குறளாகவே தெரிகிறது.

பத்து எழுத்துக்களில் ஐந்து சொற்கள் உள்ளன. எல்லாமே இரண்டெழுத்துச் சொற்கள். அவை ''எண், சொல், செய், பெறு, வாழ்'' என்பன. இவற்றில் நல்லதைக் கலந்தால் அது ஒரு பெரும் போதனையாகவே அமைந்துவிடும். அது ''நல்லதை எண்ணு, நல்லதைச் சொல், நல்லதைச் செய், அதனால், நல்லன பெற்று நல்வாழ்வு வாழ்'' என்பதே. இப்போதனையைப் போதிப்பது திரு க வெ. சித. வெ. வே. அவர்களின் வாழ்க்கை.

திரு செட்டியார் அவர்கள் பன்னெடுங்காலம் நல்லுடல் நலத்துடன் இருந்து நாட்டிற்கும், மொழிக்கும், மக்களுக்கும் நற்றொண்டு செய்து சிறப்பெய்தி வாழவேண்டுமென இந்த நல்ல நாளிலே முழுமனத்தோடு வாழ்த்துகிறேன்.

வெ. அழகுசுந்தரஞ் செட்டியார்

பசுமலை,
மதுரை
10—8—66

ஸ்ரீ க. வெ. சித. வெ. வேங்கடாசலஞ் செட்டியார் அவர்களைச் சுமார் 30 ஆண்டுகளாக அறிவேன்.

அவர் கானுடுகாத்தானில் பழமையான பெருங் குடும்பத்தைச் சேர்ந்தவர். ராஜா சர். அண்ணுமலை செட்டியார் அவர்களின் புதல்வி மீனுட்சி ஆச்சியை மணந்தார். இருவரும் இனிது இல்லற வாழ்க்கை நடாத்தினர்.

ஸ்ரீ வேங்கடாசலஞ் செட்டியார் அவர்கள் வாழ்க்கையில் வெற்றி கண்டவர். அதற்குக் காரணம் ராஜா சர். அண்ணுமலை செட்டியார் அவர்களிடம் அவர் பெற்ற பயிற்சியும், அவருடைய மனைவியின் தார்மீக ஆதரவும் தான்.

சிறுவயது முதற்கொண்டே சமூக சேவையிலும், அரசியல் வாழ்விலும் அவர் முக்கியமான பங்கெடுத்துக் கொண்டார். எல்லாவற்றிலும் சிறந்து விளங்குவது அவர் கல்விப் பணியே. அழகப்பா கல்லூரி ஸ்தாபனங்களின் நிலையைப் பல விதங் களிலும் உயர்த்திய பெருமை அவரையே சாரும்.

ஸ்ரீ வேங்கடாசலஞ் செட்டியார் அவர்கள் அபாரத் திறமை யுள்ளவர். காரியங்களைச் சாதிப்பதில் வல்லுநர். செய்வன திருந்தச் செய்வார். நயமாகப் பேசுவார். அவர் இருக்கும் இடம் எப்போதும் கலகலப்பாக இருக்கும். எல்லோரோடும் சரள மாகப் பேசிப் பழகுவார். குழந்தைகளிடத்தும், மாணவர் களிடத்தும் உண்மை அன்பு கொண்டவர்.

கோடைக்கானலுக்கு ஓய்வெடுக்கச் செல்வார். ஆனுல் ஓய்விலும் சேவை செய்வார். அவர் சம்பந்தப்படாத பொது நலமே கோடைக்கானலில் இல்லையென்று கூறலாம்.

ஸ்ரீ வேங்கடாசலஞ் செட்டியார் அவர்களுக்கு 60 ஆண்டுகள் பூர்த்தியாகி மணிவிழாக் கொண்டாடுவது மகிழ்ச்சியைத் தருகின்றது. அவர் உடல் நலத்துடன் இன்னும் நீடுழி வாழ்ந்து மேலும் பல பொதுநலச் சேவைகளைச் செய்ய அரியக்குடிப் பெருமான் அருள் புரிவாராக.

கருமுத்து
தி. மாணிக்கவாசகம், பி.ஏ.,

"மீனாட்சி நிலையம்"
மதுரை-1.
20—8—66

திரு க. வெ. சித. வெ. வேங்கடாசலம் செட்டியார் அவர்கள் "தோன்றிற் புகழொடு தோன்றுக" என்ற வள்ளுவர் வாய் மொழிக்கு இலக்கியமாகச் செல்வாக்கு மிக்க தொல்குடியில் தோன்றியவராவர்.

மேலும் பொன்மலர் நறுமணம் வீசுவதைப் போன்று இயற்கையிலேயே புகழ் வாய்ந்த இவர்கள், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தைத் தோற்றுவித்து நாட்டில் இறவாப் புகழ் நாட்டிய இராசா சர் அண்ணாமலைசெட்டியார் அவர்களின் அருமைப் புதல்வியாரைத் தமது வாழ்க்கைத் துணைவியாகக் கொண்டார்.

திரு. வெ. அவர்கள் வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து வருபவர். செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த்து இருப்பவர்.

வாணிகக் கலையில் பேரறிஞர். கல்வியின் வளர்ச்சிக்கு அயராது உழைப்பவர். நாட்டுப்பற்று மிக்கவர். மன்பதைத் தொண்டிற்குத் தம்மை அர்ப்பணித்துக் கொண்டவர்.

இத்தகைய பெருமகனாரின் மணிவிழாத் தொடர்பாகச் சிறப்பு மலர் வெளியிட இருப்பதறிந்து மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். திரு வெ. அவர்கள் மேலும் பல்லாண்டு வாழ்ந்து நாட்டுக்கும் மக்களுக்கும் அருந்தொண்டாற்றி மேன்மேலும் சிறந்தோங்கி வாழ எல்லாம் வல்ல ஆலவாய் அண்ணல் அருள் புரிவாராக!

B. V. RAMACHANDRA NAIDU
Managing Director,
Southern & Rajamani
Transports (P) Ltd.,

"SUNSHINE"
KODAIKANAL
*19th September 1966.*

I am happy to know that Sri C. V. CT. V. Venkatachalam Chettiar Sixtyfirst Birth-Day celebration Committee is bringing out a Souvenir in connection with the 61st Birth-day celebration of Sri C. V. CT. V. Venkatachalam Chettiar.

"C. V. CT. V." as he is broadly known to friends and public Mr. Chettiar has been doing a very high and noble service for the promotion of Education, Industry and Religious causes.

The developments that have greatly taken place in Alagappa Engineering and Arts Colleges will speak for the services of Mr. Chettiar.

Mr. Chettiar is a hard and sincere worker and his Humanitarian services rendered for more than 40 years to the Nation is the concrete proof.

Under the Chairmanship of Mr. Venkatachalam Chettiar in the Advisory Committee, the Kodaikanal Town is greatly benefitted and his valuable suggestions to the development of the Hill stations were extremely useful.

I wish the celebration a great success and pray that Sri Chettiar lives for many long years to serve the people.

B. SIVAGAMINATHA PILLAI,
(ALIAS) BALAIAH PILLAI,
Chairman, Municipal Council.

SRIVILLIPUTTUR,
*29—9—1966.*

I am very happy to learn that Sri C. V. CT. V. Venkatachalam Chettiar's Sixty first birth day will be celebrated on 18-10-66. Kindly accept and convey to him my best wishes and hearty congratulations on the occasion.

I have had the pleasure of being in his company for several years both in the Ramnad District Board and in other social institutions. He has done all his best to the Society in general and to the people of Ramnad in particular, in all fields including education.

His piety and philanthropy have no parallels. He is endowed with great talents in all fields in general and in Finance and Education in particular. He is also very sociable and liked and admired by one and all who come into contact with him.

He possesses pleasant characters and a forceful personality with delightful mind and strong will power. He is a person of action and independence, very realistic in his ways and all the same time, very reasonable.

He is generous in heart and fond of society,

I pray to Almighty to bless him with longevity good health and prosperity.

RAO BAHADUR
R. V. RAMASUNDARAM PILLAI,
Pannayar.

RAJAPALAYAM,
30—8—66

The 'Shashtiabdapoorthi' of Sri C. V. CT. V. Venkatachalam Chettiar is a happy and important occasion, happy because we celebrate, then, the auspicious completion of over three decades of sincere public service of a good friend and an outstanding personality, and improtant, because the sense of achievement and confidence from his successful career so long, will be further strengthened by the prayers and blessings on the eventful day, that would inspire him to continue his service with yet greater cheer and hope.

Sri C. V. CT. as he is endearingly called, in short, by one and all who know him, is essentially a man of laughter. When he burst into any group of friends with his hillarious and frank talk conceived and carried on in a pleasing vein of good humour everyone there would put aside all work on hand and welcome him heartily and join in his mirth. This disarming virtue it is that has accounted for his triumphant march, through every kind of difficulty, in whatever business he undertook, till he achieved his object: officer or clerk, minister or voter, friend or foe, his avalanche of banter, will overwhelm in a short while. And above all it is this sense of humour based on a deep sense of values that has yielded calm and courage to him in his irreparable loss of his partner in life, and helped him to carry on public and private duties as ever before and find solace therein.

At his office desk, he presents a different and exemplary aspect. Readily accessible and affable to visitors, big and small, alertly listen ing to representations with understanding, unafraid or unashamed to consult the higher or the lower in rank appropriately, over the phone if need be, he develops the best disposal possible under the circumstances in a few minutes and gives his 'yes' or 'no' definitely and finally, without mental reservations; and he means the reply he gives. If a 'no' is the all he could give, he sweetens the disappointment with a humourous extension of a hope depending upon something likely to turn up, by better luck next time.

அமைச்சர் டி. எஸ். எஸ். ராசனுடன் வட இராமநாதபுர மாவட்டக் கழகத்தின்
தலைவர் வேங்கடாசலனார்



தொண்டிபாராட்டு விழாவில் கான்சாகிப் எம். ஆர். பி. செய்யது முகமது சாகிப்புடன் வேங்கடாசலனார்.
(துருக்கிக்குல்லாயுடன் காட்சியளிக்கிறார்)




இராவ்பகதூர் பட்டம் பெற்ற வேங்கடாசலனாரைக் கானாடுகாத்தான் நகரத்தார் பாராட்டுதல்



அமராவதிபுதூர் முருகப்பா மகளிர் இல்லம் ஆண்டுவிழாவில் க. வெ. சித. வெ

These native talents and traits of his found ample scope for expression and development in the double-blessing of glorious environment and background he had of close association with the great business genius of Raja Sir Annamalai Chettiar, his father-in-law whose glorious success and munificence are hard to emulate or excel and with that Prince of Philanthropists Dr. Alagappa Chettiar whose group of collegiate and technical institutions in Karaikudi has few parallels anywhere, in their diverse and rich catering to the educational needs of the country. Thus endowed, and placed by God's grace, he has devoted himself heartily to the duties that came to him, with remarkable skill, drive and goodwill. Particularly his Herculean efforts to stabilise and promote the progress of the Alagappa Educational Institutions after the illustrious founder's demise, as his very heir, history will record with gratitude and admiration.

With this humble tribute, I wish Sri C.V, CT. V. Venkatachalam Chettiar's Shastiabdapoorthi Celebration all success and invoke Heaven's choicest blessings on him and all his family members.

It is only proper that his 61st birthday is celebrated in a fitting manner.

May God bless him with a long, healthy and happy life so that he may be of service for many more years. May God enable us to celebrate his Satabhishekam also (81st birthday) in an equally fitting manner.

# ONE DEDICATED TO SERVICE

J. G. Abraham, *B.E., M.I E. (Ind )*

*(Chief Engineer, PWD. (General)*

I have learnt with great pleasure that the Shashtiabdapurti of Sri C. V. CT. V. Venkatachalam Chettiar is being celebrated on 18-10-66. Sri C. V. CT. V. Venkatachalam Chettiar has been doing yeoman service for the cause of education and social uplift in our State during the past 40 years or more, and the celebration of his Shastiabdapurti is therefore a great occasion for offering our hearty felicitations to him and to wish him a long life and many more years of useful and devoted service to the Public of Madras.

I have known Sri C. V. CT. V. Venkatachalam Chettiar for over 15 years, but I had contact with him in a close and intimate manner during the time I was serving the State as the ex-officio Director of Technical Education between the years 1958 and 1962. I found Sri Chettiar always very helpful and co-operative and taking a keen interest in the progress of Technical Education in the State and morc particularly in the Alagappa College of Engineering and Technology and Alagappa Polytechnic, Karaikudi, and had shown particular keenness to carry out any suggestion for improving the standards of education and maintaining high standards of discipline and conduct of the students in the two Institutions. I must say it was a real pleasure to work with him, as the Managing Correspondent of the Alagappa Trust Institutions, and more particularly the Alagappa College of Engineering and Technology and the Alagappa Polytechnic, Karaikudi.

Sri C. V. CT. V. Venkatachalam Chettiar is simple in his habits of living, has abundant commonsense and is shrewd and very

courteous in all his dealings. He has a philanthropic disposition and has helped mary a Public cause with his munificence and donations. He is a keen and shrewd businessman, and has amassed wealth, which he uses for the benefit of humanity. I wish him great success in his future career aud all health and prosperity and long life, so that by his devoted service, this great State could make futher progress in industrial sphere and in Education, General and Technical and thereby contribute effectively to the raising of the standards of living of the common man. I wish him all success.

# புகழ்பூத்து வாழ்க!

## தவத்திரு குன்றக்குடி அடிகளார்

நம்மை ஆளுடை ஈசன் பொருள்சேர் புகழ் நிறைந்தவன். தந்தையினுடைமை வழிவழி மக்களுக்கு உரிமையுடையதேயாம். சிவபெருமான் தம்மடியார் புகழ் பெற்று விளக்கமுறவே திருவுள்ளங்கொள்கிருன். வாய்ப்பு கிடைத்த பொழுதெல்லாம் தம்மடியார் தம் புகழினை விளக்கவும் பாதுகாக்கவும் முயல்கிருன். இந்தக் குறிப்பினைச் சுந்தரர் வரலாறு நமக்கு எடுத்துக்காட்டுகின்றது. மானுட வாழ்க்கையில் பெறவேண்டிய பேறுகளுள் தலை சிறந்தது புகழ். புகழினை விரும்பி முயன்று அடைதல் வேண்டும். இன்றையவுலகில் புகழ் விலை பொருளாக அமைந்திருக்கிறது. இது சான்ருேர் மரபு அன்று. புகழ் உரிய கடமைகளை ஒழுங்குமுறை தவருது செய்தலினுல் பெறக்கூடியதொன்று. புகழுக்கும் மறுதலைப்பட்டது இகழ்ச்சி. மானிட வாழ்க்கையில் இகழ்ச்சிக்குரிய வாய்ப்புக்கள் மிக மிகக் குறைவு. ஆனுல் புகழ் செய்வதற்குரிய வாய்ப்புக்கள் ஏராளம் ஏராளம். ஆயினும் அறிவிலும் உணர்விலும் வறுமையடைந்துள்ள மனிதஇனம் தன் காலடியில் கிடக்கும் புகழை விரும்பாமல் முயன்று இகழ்ச்சியினைத் தேடிக்கொள்கின்றது. ஐயோ பாவம்! இரங்கத் தக்கது. மறம் செய்யும் வாழ்க்கையைவிட அறம் செய்யும் வாழ்க்கையே எளிது. பாதுகாப்பானதும்கூட. அறம் செய்யும் ஆற்றல் இல்லாது போனுலும், அறத்திற்கு இடையூறு செய்யாதிருப்பதும் ஓரளவு புகழினைத் தரும். அறம் செய்தலைவிட, செய்த அறத்தினை அழியாமற் காப்பது பேரறமாகும். பெரும் புகழினையும் தரும். சிவனடியார்களுக்குத் தொண்டர்குலத் தலைவராகிய சண்டீசப் பெருமான் எழுதும் திருமுகம் ஒன்றுண்டு. அத்திருமுகத்தில் காணப்பெறும் வாசகங்களாவன :

"அறம் செய்தானே செய்தான்; அறம் செய்தான்
தலையின் மேல்
அறம் காப்பானின் திருவடிகள்" என்று காணப்பெறும்.

தென்காசித் திருக்கோயிலை எடுத்த பேரரசன் முடிவாக "இந்தத் திருக்கோயிலில் எதிர் காலத்தில் விழும் கற்களை எடுத்து வைப்பான் திருவடிகளை இப்போதே என் தலைமீது கொண்டு வணங்குகிறேன்" என்று செதுக்கியிருக்கும் கல்லெழுத்து தமிழினத்தின் பண்பாட்டுக்குச் சான்றாகும்.

வள்ளல் அழகப்பா நம் தலைமுறை தந்த வள்ளல்; நமது தலைமுறையினை மட்டுமல்ல; வருங்காலத் தலைமுறையினரையும் ஏழேழு பிறப்புக்கும் வாழ்வளித்த, உய்தி அளித்த வள்ளல் பெருமான்; புலனழுக்கற்ற அந்தணாளர்களாக சங்ககாலப் புலவர்கள் விளங்கினார்கள். அதன் காரணமாகவே எளிய கொடைகள் தந்த அரசர்களும் பெரும் புரவலர்களாகப் பாராட்டப் பட்டார்கள். ஒரு கொடிக்குத் தேரீந்தான் பாரி; ஆனால் வள்ளல் அழகப்பரோ ஆயிரம் ஆயிரம் உயிர்க்கொடிகளுக்கு அறிவுத் தேரை வழங்கினார். பாரி கொடுத்த தேரால் கொடிக்கு உய்தி இல்லை. ஆனால் அழகப்பர் கொடுத்த தேராலோ வாழ்க்கையும் கிடைத்தது; உய்தியும் கிடைத்தது பாரி கொடுத்த தேர் கொடி இனத்துக்கு பயன்படவில்லை. ஆனால் வள்ளல் அழகப்பரின் கொடை இனத்துக்கே பயன்படுகிறது. பாரியின் கொடையால் கொடிக்குப் புகழ் இல்லை; பாரிக்கே புகழ். வள்ளல் அழகப்பரின் கொடையால் அவருக்கும் புகழ் உண்டு. அக்கலைக் கோயிலில் பயின்றோர் பலரும் புகழ்பெற்று விளங்குவார்கள். பாரியின் கொடை செழிப்பில் பிறந்தது. அழகப்பரின் கொடை குறைவில் தோன்றி நிறைவானது. பாரி கொடுத்தது ஊர்ந்து செல்லும் தேரினையே. வள்ளல் அழகப்பர் கொடுத்த தேர் குடியிருந்த வீட்டையே ஆகும். வள்ளல் அழகப்பரின் புகழ் தெய்வப் புகழ்.

அழகப்பர் செய்த அறத்தைக் காப்பது யார்? செய்தவர் பலருண்டு. பின்னின்று அந்த அறத்தினைப் பாதுகாப்பார் இல்லாது போதலுமுண்டு. வள்ளல் அழகப்பர் பேருள்ளத்தில் தோன்றிய அறம் வள்ளல் அழகப்பரை ஒத்த ஒருவரைப் பாதுகாலவராகத் தேர்ந்து எடுத்துக்கொண்டது. வள்ளல் அழகப்பரின் அறத்தினைத் தொண்டர் தம் நலனைக்காத்தருளும் கடவுளைப் போலக் காத்து வளர்த்து வருகின்றார் க. வெ.சித.வெ. வேங்கடாசலம் செட்டியாரவர்கள்.

வேங்கடாசலம் செட்டியார் அவர்கள் வழிபடும் கடவுள் வையகத்தினைக் காத்தருளும் திருமாலாவார். தாம் வழிபடும் தெய்வத்தின் செயலினையே இவரும் மேற்கொண்டுள்ளார்.

வேங்கடாசலம் செட்டியாரவர்களுக்கு மணிவிழா எடுத்தல் அவர்தம் வயதினையொட்டியா? நம்பமுடியவில்லையே! உலகில் வழக்கில் சொல்வதுபோல "மணி"யாகக் காரியங்களைச் செய்வதால் மணி விழாக் கொண்டாடுகிறார்கள். அவர் இளைஞர். அன்பு நெஞ்சினர். ஆர்வம் நிறைந்தவர். எடுக்கும் காரியங்கள் இனிது முடிப்பவர். அவர் செட்டிநாட்டுச் செல்வம். தமிழகத்தின் சொத்து; அழகப்பர் அறம் வளர்க்கும் வான்மழை. வள்ளல் அழகப்பருடைய புகழின் சின்னம். நாம் வாழ; அவர் வாழ்க; புகழ்பூத்து வாழ்க. திருவருள் துணை செய்வதாக.

## அழகப்பா கல்வி அறநிலைய அச்சாணி

பழ. சிதம்பரஞ் செட்டியார் (*தலைவர், சன்மார்க்கசபை*)

*தமிழ்த் தோன்றல் திரு. க. வெ. சித. வெ. வேங்கடாசலம் செட்டியாரவர்கள் சாந்திற்றெடுத்த தீந்தேன் போலத் தன வணிகர் குடியில் சிறந்து விளங்குபவர் ஆவார்கள். கருவிலே திருவுடைய இவர்கள்பால் செங்கதிர்க்கு நல்லொளியும், திங்களுக்குத் தண்மையும்போல் மதிநுட்பம், தொழில்திறமை, ஆட்சித் திறன் முதலிய மாண்புகள் யாவும் இயல்பாகவே ஒருங்கியைந்து விளங்குதலைக் காண்கிறோம். ஒப்பற்ற தனித்திறமை வாய்ந்த இவர்கள் தலைமையினாலும், தொடர்பினாலும் மேம்பாடுற்ற நிறுவனங்கள் மிகப் பல. இவர்கள் இந்தியன் வங்கியின் நல் வளர்ச்சிக்கு இன்றியமையாத காரணராய் விளங்கினார்கள்.*

*பல்கலைக் கழகம் நிறுவிப் பைந்தமிழைப் போற்றிப்புரந்த அண்ணாமலையரசரின் திருமகளாரை வாழ்க்கைத் துணைவியாகப் பெற்ற இவர்கள் தம் மாமனாரைப் போலவே கல்விப் பணிக்குத் தம்மைப் பெரிதும் ஈடுபடுத்திக் கொண்டுள்ளார்கள். வள்ளல் அழகப்பா அவர்கள் நிறுவிய கல்வி நிலையங்கள் மேன்மேலும் பரந்து விரிந்து இன்றைய நிலையில் விளங்குவதற்கு இவர்களே அச்சாணியாவார்கள். எண்ணிய எண்ணியாங்கு இனிது நிறைவேற்றிவரும் இவர்கள் அழகப்பா கல்வி நிலையங்கள் அனைத்தையும் ஒருங்கிணைத்துப் பல்கலைக் கழகமாக்கப் பேரார்வத்துடன் செயலாற்றி வருகின்றார்கள். இவ்வாறு கல்விப் பயன் தெரிந்து பணியாற்றிவரும் இவர்கள், தெய்வப் பற்றும் மிக்குப் பாடல் பெற்ற திருப்பதிகள் தோறும் சென்று இறைவழிபாடாற்றித் தமிழ்ப் பண்பாட்டிற்கு இலக்கியமாகத் திகழ்கிறார்கள்.*

*கல்விப் பணியினால் சைவமுந் தமிழும் தழைத்தினிதோங்க ஏறத்தாழ அறுபது ஆண்டுகள் ஏற்றவையெல்லாம் இடையறாது ஆற்றிவரும் எங்கள் சன்மார்க்க சபையினிடத்து இவர்கள் பெரிதும் ஈடுபாடு கொண்டுள்ளவர்கள். சன்மார்க்க சபை நிறுவியோர் விழாவில் தலைமையேற்று அணி செய்தவர்கள். சபை வளர்ச்சியில் ஆர்வத்துடன் ஊக்கமூட்டி உதவி வருபவர்கள். இத்தகு பெருந்தகையாளரின் மணிவிழாச் சிறப்புற நிகழவும், இவர்கள் பல்லாண்டு பல்லாண்டு இனிது வாழவும் என் உயிர்க்கு உயிராய் விளங்கும் மீனாட்சி சொக்கலிங்கர் திருவடிகளை வணங்கி வாழ்த்துகின்றேன்.*

# என்றும் இளைஞர்

இராம. பெரிய கருப்பன்

இந்தியப் பல்தமிழ்க் கழகம்

என்றும் இளைஞராய்க் காட்சி தரும் திரு. வேங்கடாசலனார்க்கு மணிவிழா நிகழ்கின்றது எனக் கேட்டு இறும்பூது எய்துகின்றேன். அவர்தம் அகத்தின் இளமை புறத்தும் புலனாகின்றது.

செல்வத்தை ஈட்டலிலும் காத்தலிலும் நல்வழியே செலவிடுதலிலும் தனித்திறன் கைவரப் பெற்ற கலைஞர் அவர். இவரின் செயலாற்றல் கண்டுதான் அண்ணாமலையரசர் தன் மகளை இவர்க்கு மணமுடித்தார்போலும்.

இந்தியப் பல்தமிழ்க் கழகச் செயலர் என்னும் முறையில் யான் இவர்களோடு நெருங்கிப் பழகும் நற்பேறு பெற்றேன். கழகத் தொடக்க நாள் முதல் அதன் வளர்ச்சியில் இவர்கள் காட்டும் ஈடுபாடு என்னைப் பெரிதும் கவர்கின்றது.

கைராசி மிக்க வேங்கடாசலனார் தொடங்கிவைத்த இந்தியப் பல்தமிழ்க் கழகம் பீடுநடை போட்டு வளர்ந்து வருகின்றது. பல்தமிழ்க் கழகத் தேர்வுகளையும் நற்பயிற்சி வகுப்புக்களையும் நடாத்துவதற்கு அழகப்பா கல்லூரியில் இடம் தருகின்றார்கள்; கழகத்தின் வளர்ச்சி குறித்துத் தக்க கருத்துக்கள் வழங்குகின்றார்கள்.

அழகப்பர் அறநிறுவனங்களைக் காத்து வளர்த்தலையே தம் வாழ்வுக் குறிக்கோளாகக் கொண்டுள்ளார்கள். இவர்களின் காவலின்றேல் அழகப்பர் நிறுவனங்கள் எந்நிலை அடைந்திருக்கும் என்பதனை நினைக்கவும் என் நெஞ்சம் நடுங்குகின்றது.

எதற்கும் அஞ்சாத் தாளாளராய தமிழ்த் தோன்றல் வேங்கடாசலனார் செட்டி நாடு செய்தவப்பயனாய்த் தோன்றியவர். அன்னார் பன்னெடுங்காலம் சிறப்போடு வாழ்ந்து அழகப்பர் பல்கலைக் கழகத்தினைத் தோற்றுவித்து காரைக்குடியூரினைப் பாரறியச் செய்து ஒல்காப் பெரும் புகழ் பெறல் வேண்டும். அவர்தம் மணிவிழா சிறப்புடன் நடைபெற அங்கயற் கண்ணி தன்னொடும் அமர்ந்த ஆலவா யவிர்சடை யண்ணல் தண்ணருள் புரிக!

# பொறுப்பாக உதவிபுரிபவர்

உபன்யாஸ சக்கரவர்த்தி
சேங்காலிபுரம் ஸ்ரீ அனந்தராம தீட்சிதர்

ஸ்ரீமான் சி. வி. சிடி. வி. வெங்கடாசலம் செட்டியார் அவர்கள் ஆஸ்திக குலத்தில் பிறந்தவர்கள். தெய்வ பக்தியும் பெரியோர்களிடத்தில் அன்பும் இவர்களுக்கு உண்டு. முனிவர்கள் தானங்களுக்குள் பூமிதானத்துக்கு மேற்பட்ட தானமில்லையெனவும் அதற்கு ஒப்பாக அன்னதானத்தை மட்டும் கூறலாம் என்றும் ஆனால் இவைகளுக்கெல்லாம் மேற்பட்டது வித்யா தனம் எனவும் கூறியுள்ளனர்.

> பூமிதானாத்பரம் தானம் வித்யதே நேஹ கிஞ்சன
> அன்னதானம் தேந துல்யம் வித்யாதானம் ததோதிகம்

அப்படிப்பட்ட வித்யா (கல்வி) தானத்தை ஸ்ரீமான் செட்டியார் அவர்கள் பல ஏழைக் குடும்பங்களுக்குச் செய்து வருகிறார்கள். நானே பல ஏழைக் குடும்பங்களுக்குச் சிபார்சு செய்துள்ளேன். அதை அன்புடன் ஏற்று மற்றவர்களைக் காட்டிலும் இவர்கள் பொறுப்பாக உதவி புரிந்ததை மறக்க முடியாது. இக்காலத்தில் வித்யை என்றால் ஆங்கிலத்தை மட்டுமே கல்வியென எண்ணுகிறார்கள். ஆனால் அதற்குப் பொருள் வேதம், சாஸ்திரம், காவியங்கள் முதலிய யாவுமே ஆகும். இதை உணர்ந்து ஸ்ரீமான் செட்டியார் அவர்கள் வேதம் கற்றவர்களுக்கும் அக்னி ஹோத்ரம் முதலிய ஸத்கர்மங்களைச் செய்யும் அந்தணர்களுக்கும் ஆடம்பரமின்றிப் பல உதவிகளைச் செய்து வருகிறார்கள். மிகச் சிறந்தவர்கள் என்பதற்கு ஸ்ரீராஜா குடும்பத்தில் சம்பந்தம் ஏற்பட்டிருப்பதே சான்றாகும். இப்படிப்பட்ட புண்ய புருஷர்களுக்கு ஷஷ்டி பூர்த்தி விழா நடக்கப்போவது தர்மத்திற்கு விழா நடத்துவது போலாகும். இவர்கள் பெரியோர்கள் சொல்வதையே வேதவாக்காக மதிப்பார்கள். ஸ்ரீ குருவாயூர் அப்பன் சன்னிதியில் ஸ்ரீ நாராயண பட்டத்திரியும் ஸ்ரீ குருவாயூரப்பனைப் பார்த்து ஓ அப்பா! தாங்கள் கபிலராக அவதரித்து தாயான தேவஹூதி தான் க்ஷேமத்தை அடைய எதுவழி என்று கேட்டதும், மஹான்களை அண்டி அவர்கள் மூலம்

ஸ்ரீ பகவானிடத்தில் பக்தி ஏற்பட்டு க்ஷேமங்களை அடையலா மெனக் கூறினீர்களாமே? அது சத்யமா? என்று கேட்க அப்பனும் 'ஆமாம்' என்று தலையை அசைத்து அங்கீகரித்தாராம். அது போல் ஸ்ரீமான் செட்டியார் அவர்களுக்கும் அவர்கள் குடும்பத் தினருக்கும், அவர்கள் ஆப்த மித்ர பந்துக்களுக்கும் ஸ்ரீமஹான் களுடையவும், ஸ்ரீ குருவாயூரப்பன் அனுக்ரஹத்தாலும் ஆயுள், ஆரோக்யம், சந்தானம், சம்பத்து, சதாபிஷேகம் முதலிய சகல பாக்யங்களையும் அடையும்படி ஸ்ரீ வேங்கடாசலபதியையும், ஸ்ரீ குருவாயூரப்பனையும் பிரார்த்திக்கிறேன்.

# நகரத்தார் நக்கிரர்

டாக்டர் மெ. சுந்தரம், எம். ஏ., எம். லிட்., பி. எச். டி..

தமிழ்த் துறை, மதுரைப் பல்கலைக் கழகம், மதுரை

சென்ற அரை நூற்றாண்டுக் காலமாகச் செந்தமிழ் நாட்டைச் செழுந்தமிழ் நாடாகச் செய்து வரும் செம்மல் களில் திரு. வேங்கடாசலனார் முன்னணியில் நிற்போர் ஆவர். வேங்கடாசலனார் தொடாத துறை இல்லை; அடையாத வெற்றி இல்லை. சென்ற சென்ற போர் தோறும் வென்றியே புனைந்த செந்தமிழ் வேந்தர் போன்று திரு. வேங்கடாசலனார் வாழ்வின் எல்லாத் துறைகளிலும் வாகை சூடினார். இறுதியில் அவர்களைத் தடுத்தாட் கொண்டவை கல்விப் பணியும் கன்னித் தமிழ்ப் பணியும். கல்விப் பணியில் அவர்கள் அயராது ஆற்றி வரும் பெருந் தொண்டிற்கு அழகப்பா கல்லூரிகள் சான்று பகரும். கன்னித் தமிழ்ப் பணிக்குத் தமிழ்க் கடல் எடுத்துக் காட்டாக இலங்கும். இரண்டையும் இரு கண்ணென எண்ணி இடையறாது தொண்டு பூண்டொழுகும் தோன்றலானார். நெற்றிக் கண்ணாகிய மூன்றாங் கண்ணாக வணிகப் பணியையும் மேற்கொண்டு 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்ற நாயன்மார் பொன்மொழிக்கு இலக்கியமாக விளங்கி வருகின்றார்கள்.

செட்டிநாட்டுப் பாடல் செப்புமாப் போலே, "நல்ல இடம் பார்த்து நாடாண்டார் வீடு பார்த்து, விளையும் நிலம் பார்த்து விதை பாவி" வைத்தார்கள், இவர்கள் பெற்றோர். சார்ந்த குடியின் மரபுச் சிறப்பால் இவர்கள் பெருகிய வாழ்வும், பெருமித உணர் வும் பூண்டு இலங்கினார்கள்.

அனைத்துப் பண்புகளைக் காட்டிலும் இவர்களை ஆட்கொண்ட தனிப்பெரும் பண்பு அஞ்சாமையேயாகும். தூய்மையும் வாய்மையும் பொருந்திய செயலாயின் அதற்கு எத்துணை இடர்ப் பாடு இருப்பினும் அதனைத் துணிந்து செய்து வெற்றி காணும் பெற்றிமை இன்றும் இவர்கள்பால் நின்றிலங்குகின்றது.

'துன்பம் உறவரினும் செய்க துணிவாற்றி
இன்பம் பயக்கும் வினை'

என்ற குறளுக்கு எடுத்துக்காட்டாக விளங்கும் இவர்களை எண்ணும்போது சங்கப் புலவர் நக்கீரர் நம் நினைவிற்கு வந்து நெடுமகிழ்வூட்டுவார். தணிந்தும் தயங்கியும் எதனையும் செய்யும் நகரத்தார் வரிசையில் இப்பெருமகனார் நக்கீரர்போல் துணிந்தும் கனிந்தும் செயற்பட்டு வருவது பெரிதும் போற்றத் தக்கதாகும். பெருமாளின் அருள் படராத புலம் இல்லாதவாறு போல, இப்பெருமகனாரின் பொருள் பயன்படாத நிலம் இல்லை எனலாம். அறச் சிந்தனையுடைய இச்செம்பொருட் செல்வர் உடலால் புறத்தினராகவும், உள்ளத்தால் அகத்தினராகவும் காட்சியளித்து வருகின்றனர். இவர்கள் புறத்தோற்றம் ஆற்றலையும், அகத் தோற்றம் அன்பினையும் எடுத்து விளக்கும். 'பிறந்த நாளில் பெருமங்கலம்' காணும் இச் செந்தமிழ் மறவர் நிறைவும் அமைதியும் பெற்று வையை ஏக்கர் இட்ட மணலினும் பலவாய் வாழ்ந்து சிறக்க வாழ்த்தெடுக்கின்றேன்.

# இனிய நண்பர்

'சோமலெ'

'சிவி சிடி' என்று அனைவருக்கும் இன்று அறிமுகமாகியுள்ள உயர்திரு க. வெ. சித. வேங்கடாசலம் செட்டியார் அவர்களை, முப்பது ஆண்டுகளாக அறியும் பேறு பெற்றவன் நான். எனவே அவர்களைப்பற்றி எழுதுவதில் மகிழ்ச்சியடைகிறேன்.

1936-இல் வடக்கு இராமநாதபுர மாவட்டக் கழகத்தின் தலைவராக இருந்தபோது, 'சிவி சிடி' அவர்களுடன் பழக எனக்கு முதல் வாய்ப்பு ஏற்பட்டது. என் ஊராகிய நெற்குப்பையில் 'நெற்குப்பை மின்சாரக் கழகம்' நிறுவ அவர்கள் 1938-இல் முன் வந்தது எங்களிடையே மீண்டும் தொடர்பை ஏற்படுத்தியது. 1943-இல் கானாடுகாத்தானிலும் நெற்குப்பையிலும் நாங்கள் கூட்டுறவுப்பண்டகசாலைகளில் செயலாளராகப் பணி புரிந்தோம். மாவட்ட உணவுக் குழுவில் இருவரும் உறுப்பினராயிருந்தோம். அந்நாளில், திருப்புத்தூர் வட்டத்தில் உணவுப் பஞ்சம் வாரா திருக்க 'சிவி சிடி' அவர்கள் செய்த செயல்களும் மேற்கொண்ட முயற்சிகளும் அப்போது மாவட்டக் கலெக்டராக இருந்தவர் களுக்கும் என் போன்றோர்க்கும் மட்டுமே தெரிந்தவை. 'சிவி சிடி' யின் ஊராகிய கானாடுகாத்தானில் அண்ணாமலை தொழிற் கல்லூரி (பாலிடெக்னிக்) செயலாளராக யான் 1956-57 இல் பொறுப் பேற்றிருந்தேன். அப்போது அவர்களும் அதே துறையில் காரைக்குடியில் பல பொறுப்புக்களைச் செய்துவந்தார்கள். நகரத்தார் சமூக முன்னேற்றத்திற்குரிய பல அலுவல்களிலும் நாங்கள் இருவரும் இணைந்து வேலை செய்துள்ளோம்.

'சிவி சிடி'—பழகுவதற்கு இனியவர். எக்கருத்தினரும் அவருடைய நட்பைப் பெற இயலும். அவரவர் நிலைக்கேற்ப, அவர்களுடன் உறவு கொள்ளுவார். நேரில் சென்றால், அவரிடம் ஆகவேண்டிய வேலைகளை உடனே முடித்துக்கொள்ளலாம்; ஒரு செயலுக்காக அவரை மீண்டும் மீண்டும் காண வேண்டுவதில்லை. கடிதம் எழுதினால் அவரிடமிருந்து உடனே மறுமொழி கிடைக்கும். அவர் ஊரில் இல்லாவிட்டாலும் அவருடைய சுற்றுப் பயணம், திட்டம் முதலியவற்றைச் செம்மையாகத் தெரிவிக்கும்

ஆற்றலுள்ளவர்களையே அவர் தம் அலுவலகத்தில் வைத்துக் கொள்வார். பிறர் அவரிடம் உதவி கேட்கும்போது 'உண்டு, இல்லை' என்று உடனே சொல்லிவிடுவார். நேரத்தின் அருமையை அவர் உணர்ந்தவர்; எனவே அவர் தம் நேரத்தையும் பிறர் நேரத்தையும் பொன்னே போல் போற்றி வருகிறார்.

'சிவிசிடி' ஒழுங்கான பழக்க வழக்கங்கள் உடையவர்; நல்ல செயல்களைப் பாராட்டுபவர்; இயன்றால் உதவுவர்; இயலா விட்டால் 'வாய்ச்சொல்' லேனும் அருளுபவர்; செல்வாக்கு மிக்கவர்; தம் செல்வாக்கைப் பிறர் நலத்துக்கும் பயன்படுத்தி வருபவர்.

'சிவிசிடி' காலை 6 முதல் இரவு 9 வரை உழைப்பவர்; சுறு சுறுப்பானவர். சுறுசுறுப்பு என்ற சொல்லுக்கு,'காலில் வெந்நீரை ஊற்றிக்கொண்ட நிலையில் அவசரக்கோலமாய்த் திரிதல்'என்பது பொருளன்று. 'சிவிசிடி'யின் சுறுசுறுப்பு அமைதியான செம்மை யான திட்டமிட்ட வாழ்க்கையின் ஒரு பகுதியாகும். அவர் தாம் செய்யும் செயல் எதையும் செய்வன திருந்தச் செய்கிறார். இதற்கு ஒரு காரணம் இரவில் அவர் வீணாகக் கண்விழிப்பது கிடையாது. மற்றொரு காரணம் அவர் வசதியாக வாழ்வது. 'சிவிசிடி'யை விடச் செல்வர்கள் பலர் உள்ளனர்: ஆனால் அவர்போன்று வசதியாக வாழ்பவர் சிலரே; தாம் பெறும் வசதிகளைப் பிறருடனும் பங்கு கொள்ளும் இயல்பினர் என்பது 'சிவிசிடி' யின் தனிச்சிறப்பு. இவ்விரண்டு நிலைகளால் 'சிவிசிடி'-யிடம் ஒரு தெளிவு நிலவுகிறது. சொல்லுறுதியும் செயலாற்றலும் அவரிடம் உண்டு. அமைச்சராகவோ பல்கலைக்கழகத் துணை வேந்தராகவோ பணிபுரியும் வாய்ப்புக் கிடைத்திருக்குமாயின் அவருடைய திறமையை நம் நாட்டுமக்கள் இன்னும் நன்றாக உணர்ந்திருப்பார்கள். எவ்வளவு நுட்பமான பொருளிலும் சிக்கல் இன்னது என்று அறிந்து 'சிக்கு' எடுக்கும் திறனும் விரைந்து செயலாற்றும் பான்மையும் 'சிவிசிடி'-க்கு இளமை முதலே கைவந்துள்ளன. மனம் திறந்து ஒளிவு மறைவு இன்றித் தம் கருத்தையும் முன்னாள் நிகழ்ச்சிகளையும் கூறும் பண்பும் 'சிவிசிடி'யின் போற்றத்தக்க இயல்புகளில் தலையாயது என்பேன். தமக்குத் துணையாய், தம் நம்பிக்கைக்கு உரியவர்களாய் இருக்கும் ஏவலாளர்களுக்கும் தம் வருவாயில் பங்கு கொடுக்கும் தாராள மனப்பான்மை 'சிவிசிடி'-யிடம் இருப்பதை இளைஞர் சிலர் வாயிலாக அறிந்திருக்கிறேன்.

'சிவிசிடி" படித்த பாடம் உலகியல். அவர் பயின்ற பள்ளி' 'உலகம்' என்ற பெருங்கல்லூரி. பழுத்த அனுபவத்தால் அவர் சட்ட நுணுக்கங்களை வழக்கறிஞர்க்கும், கல்விப் பிரச்சினைகளைக் கல்வியாளர்களுக்கும், பொறியியல் பொருள்களைப் பொறியியல் அறிஞர்க்கும் விளக்குதற்கேற்ற பயிற்சியைப் பெற்றிருக்கிறார்.

'சிவிசிடி'-நல்ல பேச்சாளர். ஆராய்ச்சி முடிவுகள், இலக்கிய மேற்கோள்கள், எதுகை, மோனை அடுக்குச் சொற்கள் ஆகியவை அவர் பேச்சில் இடம் பெறுவதில்லை. எழுதிப் படித்தோ, மணிக்கணக்கில் பேசியதையே திரும்பத் திரும்பப் பேசியோ கேட்பவர் சலிப்பு அடையுமாறு பேசும் பழக்கமோ 'சிவிசிடி'யிடம் இல்லை. ஆனால் சூழ்நிலைக்கு ஏற்ப, கேட்பார் மனதில் படுமாறு தெளிவாகவும் சுவையாகவும் அவர் பேசுவார்.

'சிவிசிடி'-பொருளாசை மிக்கவர். பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை என்பதை நன்குஅறிந்தவர். பிறர்க்கும் அதை அறிவுறுத்தி வருபவர். அவர் தமக்கும் தம் குடும்பத்துக்கும் மட்டுமன்றிப் பொது அமைப்புக்களுக்கு நிதி திரட்டுவதில் கை தேர்ந்தவர். 1965 ஜூலை மாதம் சென்னையில் நகரத்தார் மாநில மாநாடு நடைபெற்றபோது நொடிப்பெழுதில் இருநூறாயிரம் ரூபாய் வசூலித்துக்கொடுத்தார். கானாடுகாத்தான் டவுன்கிளப் கட்டிடம் விரிவடையவும், அந்தக் கிளப்பிற்கு மூலதனம் பெருகவும் அவர் தலைவராயிருந்தபோது செய்த முயற்சிகளை யானும் ஏனைய உறுப்பினர்களும் மிகவும் பாராட்டியுள்ளோம். அரியக்குடிப் பெருமாள் கோயிலின் நிதி நிலைமையைச் சீராக்குவதில் 'சிவிசிடி'-யின் பங்கு பெரிது; திருப்பதி தேவஸ்தானத்திலிருந்தும் அரியக்குடிக்குப் பணம் பெற வேங்கடாசலனார் செய்யும் முயற்சி வேங்கடாசலபதியின் அருளால் இனிது நிறைவேறுவதாக.

'சிவிசிடி'-நாட்டுப்பற்று மிக்கவர்; ஜஸ்டிஸ் கட்சிக்காரராக அவர் மாவட்டக்கழகத் தலைவராக இருந்தபோதிலும், அன்று அவருடன் பணியாற்றிய காங்கிரஸ்காரர்கள் அனைவரும் இன்றளவும் அவருடைய கெழுதகை நண்பர்களாக உள்ளனர். 'திவான் பகதூர்'-பட்டத்தை வேண்டாமென்று சொல்லச் செட்டிநாட்டில் இவர்தான் முதலில் முன் வந்தார். மின்சாரம் வழங்கும் நிறுவனங்களைத் தேசிய உடைமையாக்க அரசினர் சட்டம் கொண்டுவந்ததும், உடனே வலியச் சென்று நெற்குப்பை மின்சாரம் வழங்கு நிறுவனத்தை, 'சிவிசிடி' அரசினரிடம் ஒப்புவித்தது குறிப்பிடத்தக்கது.

பல கல்வி நிலையங்களுக்கு 'சிவிசிடி' செய்துள்ள தொண்டுகள் வெளியார் பலருக்குத் தெரிவதில்லை. அவற்றைக் கூறுவது என் கடமை. அண்ணுமலைப்பல்கலைக் கழகத்துக்கும் 'சிவிசிடி' அவ்வப்போது அறிவுரை கூறிப் பயன்மிக்க உதவிகளைப் புரிந்துள்ளார்.

மதுரையிலிருந்து திருப்பரங்குன்றத்துக்குச் செல்லும் வழியில் மலைச்சரிவில் அடுக்கடுக்காக அமைந்து எழிலார் காட்சி தருகிறது ஒரு பொறியியற் கல்லூரி. அது கலைத்தந்தை கருமுத்து தியாகராச செட்டியார் அவர்களின் கொடை. அக் கல்விக் கூடத்தை விரைந்து நிறுவ வற்புறுத்தியவர் 'சிவிசிடி'. அதற்குரிய இசைவுகளைப் பெறப் பல்கலைக் கழகத்தினரிடமும் தொழில் நுட்பக் கல்விக்குழுவினரிடமும் ஆவன செய்தவரும் இவரேயாவர்.

காரைக்குடி (செட்டிநாடு) அண்ணுமலை பாலிடெக்னிக் செயல்படத் தொடங்கிய பின்னரும் அக்கல்விநிலையத்துக்கு அரசினரின் ஒப்புதல் கிடைக்காதிருந்தது. அத்தடையை நீக்கிய பெருமையும் 'சிவிசிடி'-க்கே உரியது.

கேரளநாட்டில் வள்ளல் அழகப்பர் அமைத்த திருச்சூர் அழகப்பநகர் பாலிடெக்னிக் தொடர்ந்து செயல்படுவதற்கு வழி வகுத்ததும் 'சிவிசிடி'-யின் சாதனைகளுள் ஒன்ருகும்.

மேலைச்சிவபுரி கணேசர் செந்தமிழ்க் கல்லூரிக்கு நிதி திரட்ட மலாயாவுக்கு ஒரு குழு சென்றபோது, அம்முயற்சிக்கு 'சிவிசிடி ஒல்லும் வகையாலெல்லாம் உதவி செய்தார்.

இவ்வாறே இன்னும் பல கல்வி நிலையங்களின் வளர்ச்சியில் 'சிவிசிடி' கொண்டுள்ள பங்கு குறிப்பிடத்தக்கது. மாவட்டக் கழகத் தலைவராய் சிற்றூர்கள் பலவற்றில் அவர் பள்ளிக் கூடங்கள் அமைத்ததையும் மறந்து விடுவதற்கில்லை.

மலைவாசத்துக்குரிய நகராகிய கொடைக்கானல் அரசினரின் ஆதரவின்றி வளர்ச்சி பெருதிருந்தது. அரசினரின் கண்கள் உதகைமண்டலத்தில் இருந்தமையால், கோடைக்கானல் அவர்கள் பார்வையில் அவ்வளவாகப் படவில்லை. 'சிவிசிடி' அவர்கள் கோடைக்காலின் வளர்ச்சியில் அக்கறை காட்டி வருகிருர்கள்; அரசினர் அங்கு நல்ல விடுதிகள் அமைக்கச் செய்திருக்கிருர்கள்; கோடைக்கானல் நகரமைப்புக் குழுவில்

பொறுப்பான இடம் பெற்று, மதுரை மாவட்டக் கலெக்டருக்கு உறுதுணையாய் இருந்து 'கோடை விழா' முதலியன நடத்தி வருகிறார்கள். செட்டியார் பலர் கோடைக்கானலில் வாழ்ந்த போதிலும் பெயர் சுட்டாது 'செட்டியார்' என்று கூறின் அச்சொல் 'சிவிசிடி'-யையே அவ்வூரார் அனைவருக்கும் நினைவூட்டுகிறது. அவர் மாளிகையுள்ள சாலையும் 'செட்டியார்' ரோடு ஆகிவிட்டது.

'சிவிசிடி' நல்லவர்; வல்லவர். அவர் வாழ்க!

# வாழ்த்துகம் வம்மின்!

சித்தாந்த கலாநிதி, உரைவேந்து, பேராசிரியர்

ஔவை சு. துரைசாமிபிள்ளை

ஒருகாலத்தில் கிழக்காசிய நாடுகளிலும் மேலை நாடுகளிலும் வாணிகத்துறையில் முன்னணியில் நின்ற நாடுகளில் நமது பாரதநாடு தலையாயது என்று போற்றப்பட்டமை பழங்கால வரலாறுகள் கூறுகின்றன. கிரேக்கரும் ரோமானியரும் நமது இந்திய நாட்டுப் பொருள்களைப் பெறுதலில் பேரார்வம் கொண்டிருந்தனர் என அந்நாட்டவர் எழுதிவைத்துள்ள குறிப்புக்கள் தெரிவிக்கின்றன. கிழக்காசிய மக்களிடையே நிலவும் பழக்கவொழுக்கங்கள் பல நம் நாட்டனவாய் இருப்பதொன்றே மேலே குறித்த கருத்துக்கு ஆதரவு நல்குவதாகும்.

இங்ஙனம் கடற்கப்பாலுள்ள நாடுகளோடு வாணிகத் தொடர்புகொண்டதில் நமது தென்னாடு மிக்க தொன்மை வாய்ந்தது. தென்னாட்டிலும் அத்துறையில் வீறுகொண்டு மலை என எழும் அலை மிகுந்த கடலில் அஞ்சாமற் கலஞ்செலுத்திப் பொருளீட்டிப் புகழ் பெற்றவர் இன்று நகரத்தார் எனப்படும் தமிழ் வணிகப் பெருமக்களாவர். அதனால் அவர்களை அந்நாளைய மன்னர்கள் தமிழர் சமுதாயத்தில் நாடாளும் மன்னர்க்கு அடுத்த நிலையில் வைத்துப் பாராட்டினர்; அவர்களை "மன்னர்பின்னோர்" என்று பழந்தமிழ் இலக்கியங்கள் உரைக்கின்றன. அவர்களின் பெருமாண்பை நினைவிற்கொண்டே, சேரர் இளங்கோவும் "பெருநிலம் முழுதாளும் பெருமகன் தலைவைத்த, ஒரு தனிக்குடிகள்" என்று இப்பெருமக்களைப் புகழ்ந்துரைக்கின்றார்.

ஒரு காலத்தே இவ்வணிகர் புகார்நகரின் கண்"பதியெழுவறியாப்பழங்குடிகளாக" வாழ்ந்தவர். அப்பகுதி பின்னர் கடல்கோளுக்கு இரையாகத் தலைப்பட்டதும், இவர்கள் பாண்டி நாட்டிற் குடிபுகுந்தனர். அங்கே, மன்னர் பின்னோர் என்ற மாண்புக்கு இயைய மாடமாளிகையும் கூடகோபுரமும் அமைத்து வாழ்ந்து வரலாயினர். அரசரும் செல்வரும் வாழ்ந்த அரண்

மனைகளைச் சங்ககாலத்தார் "நகர்" எனக் குறித்து வழங்கினர். இவ்வணிகர்கள் அமைத்துள்ள பெருமாளிகைகள் அந்த "நகர்" என்ற முறையிலே கட்டப்பட்டமையின், இவர்கள் நகரத்தார் என்று போற்றப்படுகின்றார்கள்.

இப்பெருமக்கள் மேற்கொண்டு புரிந்த வாணிகம் கடந்த பன்னூறு ஆண்டுகளாகப் பெருவளம் பெற்றுப் பிறங்கி வந்தது. இந்நாளில் கடற்கப்பாலுள்ள நாடுகள் அரசியல் தனியுரிமை பெற்றபின் வாணிகம் வளம் குறைந்ததாயிற்று. வளம் சுருங்கினும் மனம் சுருங்காத மாண்பு இந்நகரத்தார் பெருமக்கட்கு இயல்பாக அமைந்துள்ளது.

வளம் பெருகின்ற காலத்தில் இந் நன்மக்கள் ஈட்டிய பொன்னும் பொருளும் நம் தென்னாடுடைய சிவநெறியின் செம்மை நிலைக்கே பெரிதும் பயன்பட்டன. தேவாரத்திருமுறைகளில் சிறப்பிக்கப்பெறும் திருக்கோயில்கள் அனைத்தும் நகரத்தாரின் நன்பொருளால் இன்று விளக்கம் பெற்றுள்ளன. "தேடும் பொருள் அனைத்தும் சிவநெறிக்கே" என்ற செம்மனப்பாங்கே இப்பெருமக்கள்பால் இன்றும் காணப்படுவது.

இவ்வாறு திருக்கோயில் திருப்பணிக்கே பெரும் பொருள் ஈந்து பெருமையுற்ற நகரத்தார் நற்குடி, சைவம் வளர்தற்கேற்ற சிவஞானம் மக்களிடையே பரவுதல்வேண்டி ஆங்காங்கே வேத பாடசாலைகளையும் ஆகம நூல் நிலையங்களையும் தேவாரப்பாட சாலைகளையும் நிறுவிப் பேணிவந்தது இன்னும் அப்பணிகள் தொடர்ந்து நடைபெறுகின்றன.

காலம் மாறுவதாயிற்று. நமது நாட்டில் அரசியல் தனி உரிமை உணர்வு தோன்றி நாட்டவர் உள்ளத்தைக் கவர்ந்து கொண்டது. சமயத்தினும் அரசியல் பொருளியல் துறைகளில் மக்கள் மனம் பெரிதும் ஈடுபடுவதாயிற்று. ஒருபால் விஞ்ஞான அறிவுபெருகிப் புதுப்புதுக்கருவிகளையும் போக்குவரவு வாய்ப்புக்களையும் இவை போலும் பல வாழ்க்கை வழிகளையும் ஆக்கித் தரவே, மக்களுடைய கருத்து இந்நாளைய வாழ்க்கையியலுக்கு ஏற்ற கல்வி பெறுவதிலே செல்லத்தலைப்பட்டது. பொருளீட்டத் தொடங்கிய அந்நாள் முதலே மக்களினத்தின் மனவளர்ச்சிக்கும், சமய வொழுக்கத்துக்கும் பெருந் தொண்டு புரிந்த பேரினமாதலின் நகரத்தாரினத்து நல்லோர் பலர், நாட்டு மக்கட்கு இன்று வேண்டப்படும் தொழில் விஞ்ஞானம் முதலிய துறைகட்கு இன்றியமையாத கல்வியை வழங்குவது செல்வம்

பெற்ற தமது செய்கடன் என்று எண்ணி, ஆங்காங்குத் தொடக்கப்பள்ளிகளையும் உயர்நிலைப்பள்ளிகளையும் வளம்பட நிறுவிக் கல்விக்கொடை புரிந்தனர்.

மலையெனத் திரண்ட தோளும் மன்னர் மதிக்கும் மாண்புடைய தோற்றமும் கொண்ட வள்ளல் அண்ணாமலையரசர் தோன்றி அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தை நிறுவினார். மன் மக்கள் எல்லாரும் தன்மக்கள் எனக்கருதும் பெருந்தகையாதலால் அப் பல்கலைக்கழகம் தமிழ் நாட்டு மக்கட்கேயன்றி பிறநாட்டு மக்கட்கும் பெரும் பயன் தந்து நிற்கின்றது.

அப்பெருமகனாரது பெருமை பிறங்கும் செல்வக்குடியில், கங்கையோடு கலக்கும் யமுனைபோல, திரு. வேங்கடாசலனார் மகட்கோள் முறையில் கலந்து, தமது தனிப்பெரும் பண்பால் தலைமைநலம் தழைத்த சான்றோராவர் கங்கையும் யமுனையும் இமயத்தில் தோன்றுவது போல, வள்ளல் அண்ணாமலையரசரும் திருவாளர் வேங்கடாசலனாரும் "தேனாடு சோலைக் கானாடு காத்தானில்" தோன்றிய சிறப்புடையர்.

திரு வேங்கடாசலனார் விரிந்த மனமும், நிறைந்த பண்பும்' சிறந்த செயல் புரியும் செய்வினைத் திட்பமும் ஒருங்கு படைத்தவர். புலவர் சிலர் கூடிய கூட்டமொன்றில் திரு.க.வெ.சித.வெ. வேங்கடாசலனாரது நலம் பாராட்டு முகத்தால் "சி. வி. சிடி. வி. அவர்கள் உருவத்தினும் அறிவு நலத்தினும் குறுமுனியாவர்" என்று கூறினார். அவருடைய புன்னகை தவழும் நன்முகமும், மக்கள் உள்ளத்தை ஊடுருவிநோக்கும் கூரிய கட்பார்வையும் எண்ணிய எண்ணியாங்கு முடிக்கும் மனத்திண்மையும் நினைக்குங்கால் அக்குறுமுனியினும் பெருமை வாய்ந்தவர் நம் சி. வி. சிடி. வேங்கடாசலனார் என்று ஒரு நண்பர் விளக்கம் கூற யாவரும் "ஆமாம்" எனத் தலையசைத்துப் பாராட்டினர்.

திருவேங்கடாசலனாரது செல்வ வாழ்வை நோக்குவோமாயின், அது முழுதும் மக்கட் பண்பு வளர்க்கும் கல்விப் பணியிலேயே பெரும்பாலும் கழிந்திருப்பது நன்கு தெரிகிறது. வேறு பலபொருட்டுறையிலும் பொதுப் பணியிலும் அவரது ஈடுபாடு விரவி நிற்பினும் 'கல்விப்பெருந் தொண்டுபோல அவர் கருத்தைப் பிணித்துப் பணிகொண்டதுவேறில்லை.

நீலநெடுங்கடலில் செஞ்ஞாயிறு தோன்றி இருள்நீக்கி ஒளிதருவதுபோல நகரத்தாரது செல்வப்பெருங்குடியில் வள்ளல்

அழகப்பர் தோன்றிக் காரைக்குடியில் மனவிருள் கடிந்து அறிவுப் பேரொளி நல்கும் செழுங்கலை நியமத்தை நிறுவியபோது நம் வேங்கடாசலனர் அதனைப் பேணி வளர்க்கும் பெரும் பணியில்'' 'எறும்வயிரத்தூண்போல்' நின்று தாங்கி, இன்று அதன் தலைமைச் செயலராய்ப் புகழ் பெருகப் பாதுகாக்கும் புரவலராய்த் திகழ்கின்றார்.

தொழில் துறையிலும் கலைப்பணியிலும் தமிழ்ப் புலமையிலும் தன்னிகரற்ற பெருமகனாக விளங்கும் கரு. முத்து. தியாகராசனர் அவர்கள் ஒருசமயம் திரு. சித. வே. அவர்களைப் பற்றிக் குறிப்பிடும்போது, அவர் இக் கலைக்கல்லூரி களையேயன்றி எத்தனைப் பல்கலைக்கழங்கள் தம்பால் ஒப்படைக்கப் பெறினும் அத்தனையும் உலகு புகழப் புரந்து காட்டும் பேராண்மையும் பெருந்திறனும் பெற்றவர் என்று வியந்து கூறியது என் நினைவில் நன்கு தோய்ந்துளது.

திரு. க. வெ. சித வெ. வேங்டாசலஞ் செட்டியாரவர்கள் சிவநெறிச் செல்வராயினும் ஏனைச் சமயங்களையும் நன்கு மதிக்கும் நலம் வாய்ந்தவர். பொருளியல், கல்வி, பொதுப்பணி முதலிய பறதுறைகளில் ஈடுபடும் இயப்பினராயினும், சமயத்துறையில் நிறைந்த ஊக்கமுடையவர். அறநிலையங்களில் தலைமைதாங்கியும், திருக்கோயில் தோறும் சென்று தெய்வ வழிபாடு செய்தும் சமய ஒழுக்கத்தில் தலைநின்று சிறக்கும் சால்புடையவர்.

திரு. க. வெ.சித. வெ. வேங்கடாசலனர் இப்போது அறுபது ஆண்டு நிறைந்து மணிவிழாக் கொண்டு மகிழும் மாண்புற்று நிற்கின்றார். அவர்கட்கு மணிவிழா வொன்றோ, வயிர விழா, நூற்றாண்டுவிழா என நிலவும் பல்லாண்டு விழாக்கள் பலவும் நிகழுமாறு, நல்லனவெல்லாம் எய்த நல்கும், செல்வத்திருவருட் செல்வியாகிய அங்கயற்கண்ணி தன்னோடமர்ந்த ஆலவாய் அண்ணலின் வண்ணத் திருவடிகளை வழுத்துதல் முறையாதலால்,

"வாழ்த்துகம் வம்மின் வண்டமிழ்ப் புலவிர்
தாழ்த்த சென்னியும் கூப்பிய கையுமாய்
ஓங்கிய சிறப்பின் வேங்கடா சலனர்
மணிவிழா வுடனே மருவு பல்லாண்டு
அணிவிழா பலப்பல கொள்கென
மனமொழி மெய்களால் இறைவனை நினைந்தே."

# வேங்கடாசலனர் வாழ்க!

ரா. பத்மநாபன்

(அழகப்பா பொறியியற் கல்லூரி அலுவலகம்)

அன்பர்பணி செய்யஎனை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந்து எய்தும் பராபரமே.

என்பார் தாயுமானர். இன்பநிலை எய்தப் பெருமுயற்சி எடுப்பது உலக இயல்பு. ஆனல் அதற்கு மாருக அவ் இன்பநிலையே நம்மை வந்து உறும் என்று இயம்பி, அதற்கான வழியையும் அருளிச் செய்கிருர் தாயுமானர். அதாவது அன்பர் பணி செய்ய அருள் கிட்டுமாயின் இது கைகூடும் என்கிருர். அன்புப் பணியின் மலர்ச்சியே அன்பர் பணி. 'அன்பே சிவம்' என்பார் திருமூலர். பொதுமறை அருளிய பெருநாவலர் ஒப்புரவு அறிதல் என்னும் நல்லறத்தின் நல்லியல்புகளை நாவார நவில்வார். 'என்கடன் பணி செய்து கிடப்பதே' என்று இசைப்பார் அப்பர் பெருமான். வள்ளல் அழகப்பர் இவற்றினை நன்கு உணர்ந்திருந்தார். ஆதலால்தான் தாம் நிறுவிய முதற் கல்லூரியாகிய அழகப்பா கல்லூரியின் சின்னத்தில், "அன்பு, அறம், பணி" என்னும் மும்மணிகளையும் இணைத்துப் பொருத்தினர்.

கல்வி அறப்பணிக்கு வள்ளல் அழகப்பர் தம்மையும் சேர்த்துத் தந்த தகையாளர்.

மருந்தாகித் தப்பா மரத்தற்ருல் செல்வம்
பெருந்தகை யான்கண் படின்.

என்னும் பொய்யாமொழிக்கு ஒரு இலக்கியமாகத் திகழ்ந்தார். பத்து ஆண்டுகளில் பல்துறைக் கல்வி நிலையங்களைப் பாரோர் வியக்க நிறுவினர். அவை பல்கி வளர வகை செய்தார். 'உள்ளி உள்ள எலாம் உவந்து ஈயும் வள்ளியோரின்' வழித் தோன்றலாக விளங்கினர். 'வீந்தவரேனும் ஈந்தவரல்லது இருந்தவர் யாரே?' என, என்றும் மெய்ப்புகழ் வீசி மணக்கும் பேற்றினைப் பெற்ருர். 'நல்தொண்டு செய்வார் நலிவதில்லை' என்பது கண்ணன் பார்த்தனுக்குப் பகர்ந்த உறுதிமொழி. உரிய காலத்தில் நற்பணி, சிறப்பொடு பேரின்ப நிலையையும் தரும்.

## வேங்கடாசலனார் பொறுப்பு ஏற்றது

'கோடி கொடுத்த கொடைஞன்' கண்ட அறப்பணி சிறக்க அவருடன் ஒத்துழைத்தோர் பலர். அவர்களுள் மிகச் சிறப்பாகக் குறிப்பிடத்தக்க பெருமகனார், உயர்திரு. வேங்கடாசலனார். அவர்கள் தொடக்க நாள் முதல் அறநிலையச் செயற்குழுவினரா யிருந்து அதன் பணிகளில் பங்கு கொண்டார். பின்னர் 25-6-1955 இல் 'கரஸ்பாண்டென்ட்', 'செயலர்' என்னும் இரு பொறுப்பையும் ஏற்றார். அரசியல் அநுபவம், ஆட்சி அநுபவம் நிரம்ப உண்டு; மிகப் பொறுப்பாக மேல்பார்வையிடும் பல்வகைப் பயிற்சிகள் அவருக்கு நன்கு கைவந்தவை.

## அறநிலைய நிருவாக அமைப்பு

பெரும்பாலோரிடம் பொறுப்பை ஏற்றவுடன் அதைத் திறம்பட ஆற்ற வேண்டும் என ஓர் மன எழுச்சி பிறக்கும். ஆனால் அம்மன எழுச்சியின் துணைகொண்டு அடைய எண்ணும் ஆக்கத்திற்கு உகந்த ஊக்கமும், முயற்சியும் அவருக்கு அமையப் பெறா. அதனால் அவர்கள் சிறிது காலம் விறுவிறுப்போடு செயல் செய்வர்; பின் ஊக்கம் குன்றுவர்; அலுத்துக்கொள்வர்; இறுதியில் எடுத்த காரியம் நிறைவேறாது போம்; அதனால் மனம் உடைவர். ஆனால் இதற்கு விதிவிலக்காகச் சிலர் உண்டு. அவர்கள் தொடக்கத்தில் காட்டிய ஊக்கத்தை நாள்தொறும் வளர்ப்பர். உறுதி தளராது உழைப்பர்; தாம் எடுத்த காரியம் சிறந்து, வெற்றி நடைபோடுவதைக் கண்டு உவப்பர். இவ்விதி விலக்கு இனத்தாரைச் சேர்ந்தாரே, கரஸ்பாண்டண்ட் வேங்கடாசலனார்.

உயர்திரு வேங்கடாசலனார் அழகப்பர் அறநிலையச் செயலர் பொறுப்பை ஏற்றது முதல், முந்தைய அநுபவங்களில் கிட்டிய முழுத் திறனோடு செயல் புரிந்து, நிருவாகத்தை அரசாங்க அமைப்பில் இயக்க அடிகோலினார். சிறுகச் சிறுக ஒரு கட்டுதிட்டத்திற்குள் அலுவல்களை அமைத்து உருக்கொடுத்தார். நிருவாகம் நிலைபெற்றுச் சிறக்க வள்ளல் அழகப்பருடன் அவர் நீண்ட பொழுதுகள் செலவிடுவார். எத்தனையோ நாட்களில் இருவரும் இரவு 11 மணி, ஏன்? நடுநிசி நேரத்திற்குப் பின்னும் கூட, பவநகர் அரங்கின் முகப்பில் அமர்ந்து, உரையாடி, விவாதித்து அறவழிக்கொரு நல்வழி கோலுவர்.

### நெடுநாளைய நட்பு

வள்ளல் அழகப்பரும், 'கரஸ்பாண்டண்ட்' வேங்கடாசலனரும் நெடுநாளைய நட்பினர். அவர்களிருவரும் உரையாடுகையில் நகைச்சுவையும், பரிகாசமும் கலந்து மிக விளையாடும். சில வேளைகளில் தொலைபேசியிலும் இம்மாதிரி நிகழ்வதுண்டு. 'செயலர்' வேங்கடாசலனர் எதையும் முன் ஏற்பாட்டுடன் செய்வது வழக்கம். 'டாக்டர் செட்டியார்' அவர்களைப் போல, 'மதிய உணவா? அல்லது மாலைப் பலகாரமா? அவை எந்த இடத்தில்? எப்போது?' என்ற தம்மை மறந்த நிலைக்குச் 'செயலர்' ஆளாக மாட்டார். எனவே அவர் கானடுகாத்தானிலிருந்து கல்லூரி வட்டத்திற்கு வருகையிலேயே மாலைப் பலகாரம் வைத்துள்ள கூடையையும் கூடவே கொண்டு வருவார். சுவைமிக்க அப் பலகாரங்களை 'டாக்டர் செட்டியார்' அவர்களுடன் பகிர்ந்து புசித்து இருவரும் அகமகிழ்வர். சிலவேளைகளில் வள்ளல் அவர்களிடம், "நான் பிறகு சாப்பிட்டுக்கொள்கிறேன்; அவசரமாயின் தாங்கள் முன்னரே சாப்பிட்டுவிடுங்கள்; ஏனெனில் தங்களுக்கெனவே சுண்டல் குழம்புடன் மாலைப் பலகாரம் கொண்டு வந்துள்ளேன்" என்பார். பவநகர் அரங்கின் படி ஏறுகையிலேயே இது குறித்து, உரிமையுடன் முன்னறிவிப்பு விடுப்பார். வேறு எங்காவது 'வள்ளல்' அவர்கள் மாலைப் பலகாரம் சாப்பிட வேண்டாம் என்ற அன்புக் கட்டளையாகவும் அமையும். நட்புரிமையோடு 'டாக்டர் செட்டியார்' அவர்களே, வேறு சில வேளைகளில் கேட்பதும் உண்டு. ஒருவரை ஒருவர் நன்கு புரிந்து கொண்டு, இங்ஙனம் அன்புடன் பழகி, நேசித்து அகமகிழ்வர். சிறந்த நிருவாகிக்குப் பொதுப்பணி புரிய மிகத் தேவையான 'கண்டிப்பு' முதலியவை தமது தகைசால் நண்பரிடம் அமைந்து கிடப்பதை, வள்ளல் அழகப்பர் அடிக்கடி பாராட்டிப் பேசுவார்.

### அழகப்பர் மறைவு – அதிகப் பொறுப்பு

வள்ளல் அழகப்பர் 5-4-57 அன்று அமரரானர். அப்போது அன்னர் நிறுவிய கல்வி அறப்பணிகள் எங்ஙனம், எப்படிச் சீராக இயங்கும் என்ற மாபெரும் கேள்விக்குறி பல்லோர் மனத்திலும் மலைப்புடன் எழுந்தது. அவ்வளவு பெரும் பொறுப்பை ஏற்றுச் செயல்படுத்துவது எளிதன்று என்றும் எண்ணலாயினர். ஆயினும் அந்த அரும்பெரும் சுமையைச் தம் தடம்பெருந்தோள்களில் தாங்கத்தான் வேண்டும் என்ற ஓர் உயரிய எண்ணம், ஆண்டவன் அருளால், உயர்திரு வேங்கடாசலனரின் நல்உள்ளத்தில்

எழுந்தது; நட்புமுறைக்கு ஒரு எடுத்துக்காட்டாகவும் அன்னாரை இறைவன் ஆக்குவித்தார்; ஏன்? ஆட்டுவிக்கிறார். 'ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே, என்பார் அல்லவா அப்பர் சுவாமிகள்?

அதிகப் பொறுப்பைத் தான் ஏற்றுக்கொண்ட நாள்முதல் பல வழிகளில் அறநிலையத்தின் செலவினங்களைச் 'செயலர்' அவர்கள் சுருக்கினார்; நீக்கினார். கல்வி அறங்கள் தொடர்ந்து நடைபெற அப்பணியையே முதன்மையாகக் கருதினார்; தன் சொந்த அலுவல்களை அடுத்தே வைத்துக்கொண்டார்.

## அழகப்பர் அறத்தினுக்கு ஓர் நல் உரு

மாநில அரசாங்கம், மத்திய அரசாங்கம், பல்கலைக் கழகத்தோர், கல்வி சம்பந்தமான பல்வேறு செயற்குழுவினர், மற்றும் அவ்வப்போது வரும் அரசாங்க அலுவலர் ஆகியோரின் சட்ட திட்டங்களுக்கு உட்பட்டு, கல்லூரிகளைச் சரிவர இயக்கு வது எல்லோருக்கும் எளிவரும் திறன் அன்று. ஆனால் செயலர் வேங்கடாசலனாருக்கு இவையெல்லாம் மிக எளிவந்த செயல் ஆகிவிட்டது என்றால் அது மிகையாகாது. வள்ளல் அழகப்பர் மறைந்து கிட்டத்தட்டப் பத்து ஆண்டுகள் பறந்தோடிவிட்டன. இப்பத்து ஆண்டுகளில் அவரது கல்வி அறப்பணி அனைத் தினுக்கும், தமது இடையறா உழைப்பின் மூலம், நல்லதோர் உரு அமைத்துக்கொடுத்த பெருமை, செயலர் வேங்கடாசலனாரையே சாரும்.

## சிறப்பியல்புகள்

வாழ்க்கை வளம், மதிப்புமிக்க வாழ்வுநிலை, நீண்ட நிருவாகப் பயிற்சி, திறமை, கூரிய மதிநுட்பம் நினைவாற்றல், மழுமழுப்பற்ற மனப்பான்மை. நினைத்தை நிறைவேற்றும் ஊக்கம், உறுதிப்பாடு, முயற்சி, ஆற்றல், விறுவிறுப்புத் தளராமை தளரவிடாமை; விரைவாகத் தீர்ப்பளிப்பது, அச்சமின்மை, உணர்ச்சி வயப்பட்டுக் காரியத்தைக் கோட்டைவிடாமை, அவை அஞ்சாமை, நகைச்சுவை வெடிக்க எளிமையாகப் பேசுதல், ஆரஅமரப்படித்துப் புரிந்து கொண்டு கையொப்பம் செய்யும் பொறுப்புணர்ச்சி, இன்னவையன்ன சிறப்பியல்புகள் நம் கரஸ்பாண்டெண்ட் அவர்களிடம் காணப் பெறுபவை. அழகப்பர் கல்வி அறப்பணிகளை நன்கு பேணிவளர்க்க இவையனைத்தும் உதவுகின்றன.

## அழகப்பர் கல்வி அறப்பணியே நினைவு

'செயலர்' அவர்கள் எந்த ஊரிலிருப்பினும். எப்பணியில் ஈடுபட்டிருப்பினும் அங்கங்கிருந்து உடனுக்குடன் அழகப்பர் கல்வி அறப்பணி சம்பந்தமான அலுவல்களைக் கவனிப்பார். ஊன்றிப் படித்துப் பிறகு தீர்மானமோ, கையொப்பமோ செய்ய வேண்டுமாயின் அவற்றை மட்டும் தனியாக எடுத்து வைத்துக் கொள்வார்; நேரம் இணங்கியபோது அவற்றை நன்கு படித்துப் பின் ஆவன செய்வார். ஏனைய தபால்களைப் பார்த்து முடிவு எடுப்பார்; திட்டவட்டமாக உத்தரவுக் குறிப்பு எழுதுவார்; அடுத்த அஞ்சலில் திருப்பி அனுப்புவார். இல்லாவிடின் அவருக்கு மனநிம்மதி வராது; இருப்புக் கொள்ளாது.

ஏறத்தாழப் பன்னிரண்டு ஆண்டுகள் ஊக்கம் குன்றாது, 'செயலர்' அவர்கள் தொடர்ந்து அன்புப்பணி செய்து வருகின்றார். அதனால் தான், அழகப்பரின் அறப்பணிகளின் நற்பயனை, ஆயிரமாயிரம் மாணவ-மாணாக்கியர், ஆசிரிய-ஆசிரியையர், அலுவலகர்கள் ஆகியோர் மன அமைதியுடன், துய்க்க முடிகிறது. எனவே கல்லூரி வட்டத்தில் பணிபுரிவோரும் சரி, அதனோடு ஏதேனும் ஒரு வகையில் தொடர்பு கொண்டோரும் சரி,'கரஸ்பாண்டண்ட்' அவர்களுக்குப் பெரிதும் கடமைப்பட்டுள்ளனர்.

> காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
>
> ஞாலத்தின் மாணப் பெரிது.

என்பார் வள்ளுவர். ஆகவே 'கரஸ்பாண்டண்ட்' அவர்களின் பேருதவிக்குக் கைம்மாறு ஏது?

## பொழுது போக்கு

'செயலர்' அவர்களுக்கு எத்தனை எத்தனையோ மூச்சுப் பிடிப்பான வேலைகள்; பொதுப்பணிகள். அவற்றிற்கிடையிலும் தினத்தாள், வார இதழ்கள் படிக்கத் தவறமாட்டார். எந்தத் தொடர்கதை, எந்தக்கட்டத்தில் நிறுத்தப்பட்டுள்ளது என்பதை ஐயமற நினைவில் வைத்துக் கொள்வார். வானொலியில் இன்னிசைப் பெரியோர்களின் நிகழ்ச்சியைக் கேட்டு நன்கு சுவைப்பார். 'வள்ளல்' அவர்களுக்குத் தொலைபேசி எப்படி இன்றியமையாததோ அப்படிச் 'செயலர்' அவர்களுக்கு டிரான்ஸிஸ்டர் ரேடியோ. அதையும் குடையையும் எடுத்துச் செல்லாத

பயணமே அரிது எனலாம். நேரம் கிடைப்பின் பேசும் படமும் பார்த்து மகிழ்வார். நல்ல நிகழ்ச்சிகளைக் கண்டுகளிக்க அன்பர் பலரை உடன் அழைத்துச் செல்வார். குழுவொடு கூடி மகிழ்ச்சியைப் பெருக்கிக் கொள்ளும் இயல்பினர்.

## இறைபணி இயற்றும் குடும்பம்

உயர்திரு வேங்கடாசலனார் திருக்கோயில் அறப்பணிச் செல்வர் பரம்பரையினர். பாண்டிக்கொடிமுடி என்னும் தேவாரத் தலத்துக் கோயில் திருப்பணி இவரது முன்னோரைச் சார்ந்தது. இவரது தந்தையார் தென்திருப்பதியாகிய அரியக்குடியில் சீனிவாசப் பெருமாளுக்கு ஆலயம் அமைப்பதில் பெரும்பொருள் செலவிட்ட பெருமாள் பத்தர்; தந்தையாரின் இறைபணியை இவரும் தொடர்ந்து இயற்றி வருகிறார். அரியக்குடிப்பெருமாள் கோயில் அறக்கட்டளைகள் என்றென்றும் தட்டுப்பாடில்லாமல் சீராக நடை பெற வேண்டி ஒரு நல்ல திட்டம் வகுத்து, உன்னிப்பாக அதற்கு ஆவன செய்து வருகிறார்.

'செயலரி'ன் மறைந்த இல்லக்கிழத்தி திருமதி மீனாட்சி ஆச்சியாருக்கு இறையன்பு மிகுதி. மணிவாசகப் பெருமான் அருளிய 'சிவபுராணம்' ஓதக்கேட்டு, இடையில் விட்டுப்போன இடத்தை நினைவுப்படுத்தித் தமது இறுதி இறைவணக்கத்தைச் செலுத்தினாராம். ஆகவே அவர் மிக மிகப் புண்யவதியே. இத்தகையாளை இழந்த பிரிவினால் ஏற்படும் மனவருத்தத்தின் தன்மையை அவரவர் அநுபவிக்கையில்தான், உள்ளவாறு உணர இயலும். இருப்பினும் 'செயலர்' அவர்கள் ஒருவாறு மனம் தேறினார்; தமக்கே உரிய மனவலிவு கொண்டு, தம்மிடம் ஒப்படைக்கப் பட்ட நற்காரியங்களில் ஈடுபட்டார்.

## திருத்தலப் பயணம்

இறைவன் அருள் கூடியதால் தேவார-திவ்வியப் பிரபந்தத் தலங்களைக் கண்டு தொழ விரும்பினார் திருவாளர் வேங்கடாசலனார். அதற்கு ஒரு உருக்கொடுக்க, உறுதுணையாக உடன் செல்ல, இத்துறையில் நன்கு அநுபவம் அடைந்த, திருத்தலங்களுக்கான தீந்தமிழ் தெய்விகப் பாடல்களைத் தன்னுள்ளே அடக்கிக் கொண்ட, 'நீண்ட தமிழால் உலகைநேமியின் அளந்த' முனி எனக் கல்லூரி வட்டத்தில் வாழ்ந்து, அதற்குப் பெருமை

தருபவரும், 'செயல'ரின் கெழுதகை நண்பருமான, 'தமிழ்க்கடல்' 'சிவமணி', 'சிவம் பெருக்கும் சீலர்' ராய. சொ. அவர்கள் அமைந்தார்கள்.

ஒரு வீட்டின் வசதியுடன் கூடிய மோட்டார் வான் (Caravan) ஒன்றைச் செயலர் அவர்கள் வாங்கினர். பொருட் செலவையும், வசதிக் குறைவையும் பொருட்படுத்தாது பல அன்பர்களை உடன் அழைத்துச் சென்றார். இவ்வளவு குறுகிய கால அளவில் இத்தனை தலங்களையும் எப்படிக் கண்டுகளிக்க இயன்றது என்று பலரும் வியக்குமாறு திருத்தலப் பயணத்தை வெற்றிகரமாக இனிது முடித்தார். அதோடு மட்டுமல்ல. அந்தந்த தலத்தில் தலத்திற்குரியதேவார-பிரபந்தப்பாடல்களைப் படிக்கக்கேட்டார்; இயலாது பாக்கி இருந்த பாடல்களைக் கொடைக்கானலில் தமது பங்களாவுக்குத் தமிழ்க் கடலாரையும், அன்பர்களையும் வரவழைத்து, வசதி அளித்து, படிக்கக் கேட்டார். திருவாளர் வேங்கடாசலனாரின் நெற்றியில் பளிச்சென்று ஒளிவீசும் திருநீற்றுப் பொலிவைச் 'சிவம் பெருக்கும் சீலர்' அடிக்கடி குறிப்பிட்டுப் பாராட்டுவது இச்சமயம் நினைவுக்கு வருகிறது. திருத்தலப் பயணத்திற்குப் போவோர் பலருக்கு மேலே குறிப்பிட்ட தேவார-பிரபந்தப் பாடல்களை இங்ஙனம் படிக்கக் கேட்கும் வாய்ப்பு அமைவதில்லை. தேவார முழுமையையும், பிரபந்தத் தலப் பாசுரங்களையும் முறையே படிக்க, அளவு கருதி அஞ்சி விடுவர். ஆகவே பல' துறைகளில் 'கொடுத்து வைத்த' வேங்கடாசலனார் இத்துறையிலும் 'கொடுத்து வைத்தவரே!'

பயணமுறை வகுத்தல், இடைவழி உணவு ஏற்பாடு, விருந்தோம்பல் இவற்றைச் 'செயலர்' அவர்கள் மிக அக்கறையுடனும், முன்னேற்பாட்டுடனும் சிறப்பாகச் செய்ததை, திருத்தலப் பயணத்தில் பங்கு பெறும் பேற்றினைப் பெற்றோர் அனைவரும் அறிவர். சில வேளைகளில் அப்பேற்றினை நுகரும் அரிய வாய்ப்பினை எனக்கும் வழங்கிய 'செயலர்' அவர்களுக்கு நான் என்றென்றும் கடப்பாடுடையேன். 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற திருமூலரின் திருவாக்கினைச் செயலில் காட்டிய 'செயலர்' வேங்கடாசலனார்.

### அறுபதுக்கு அறுபது

செயற்கரும் சீரிய செயல்கள் இயற்றிவரும் அழகப்பர் அறநிலையச் செயலர் உயர்திரு வேங்கடாசலனார் அவர்கள்

18-10-66 அன்று, அறுபது ஆண்டின் நிறைவை எய்துகிறார். அந்த மங்கல நன்னாள் பொன்னாளாகப் பொலிக! தம் இருவழிப் பேரர்-பேத்திகளுடன் அவர் இன்னும் பல்லாண்டு, பல்லாண்டு இன்புற்று வாழ்வாராக! மெய்ப் புகழுடன் நற்பணிகள் இயற்றி வருவாராக! இவையனைத்தினுக்கும், 'எண்ணம் புகுந்து தித்திக்கும் அமுதா'கிய, ஏழுமலையான் இன்னருள் பாலிப்பானாக!

வாழ்க, வேங்கடாசலனார்! வாழ்க, அவர் அன்புப் பணி!

கடுஞ்சொல்லன் கண்ணில னாயி னெடுஞ்செல்வ
நீடின்றி யாங்கே கெடும்.

(இன்சொல்லன்)

எனைத்தானு மெஞ்ஞான்றும் யார்க்கு மனத்தானா
மாணாசெய் யாமை தலை.

(இன்னாசெய்யாமை)

அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணு முள.

(இரக்க குணம்)

மடிமை குடிமைக்கட் டங்கிற்றன் னொன்னார்க்
கடிமை புகுத்தி விடும்.

(சோம்பலின்மை)

மாறுபா டில்லாத வுண்டி மறுத்துண்ணி
னூறுபா டில்லை யுயிர்க்கு.

(அளவோடுண்ணல்)

மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய
தற்றது போற்றி யுணின்.

(பிணியின்மை)

அறிவுடையா ரெல்லா முடையார் அறிவிலார்
என்னுடைய ரேனு மிலர்.

(நல்லறிவு)

புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாதல்
அறங்கூறு மாக்கந் தரும்.

(புறங்கூறாமை)

இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவ னென்பான்
முயல்வாரு ளெல்லாந் தலை.

(நல்வாழ்வு)

உலகத்தோ டொட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லா ரறிவிலா தார்.

(பலரையுந் தழுவி வாழ்தல்)

---

இந்த இருபது குறள்களிலும் குறளும், குறள் நெறியு மட்டுமல்ல; திரு. செட்டியார் அவர்களின் பெயரும், அவரது பண்பும் பின்னிக்கொண்டிருப்பதைக் கண்டு மகிழுங்கள்.



வள்ளல் அழகப்பரும் வேங்கடாசலனுரும்
குமாரசாமி ராஜாவுடன் உரையாடி மகிழல்

அழகப்பர் மகளிர் கல்லூரியில் திரு காமராசருடன் வேங்கடாசலனர்

அழகப்பர் பொறி இயல் கல்லூரிக்குத் தலைவர் இராசேந்திரபிரசாத் அவர்கள் வருகை : வேங்கடாசலனர் மாலையிட்டு வரவேற்கிறர்.

அழகப்பா பொறியியற் கல்லூரிக் கட்டிடக் கால்கோள் விழா



டாக்டர் பி. வரதராஜுலு நாயுடுவுடன்

அழகப்பநகர் பல்தொழில் நுட்பக்கல்லூரி விழாவில் ஆளுநர் பி. இராமகிருஷ்ணராவுக்கு வரவேற்பளிக்கும் வேங்கடாசலனார்

பவநகர் மைதானத்துக்கு ஆளுநர் ஸ்ரீ பிரகாசாவை அழைத்துச் செல்கிறார்



ஜவஹர் பூங்காவில் "சர் சி. பி." யுடன்



அழகப்பநகரில் கேரள அரசு ஆலோசகர் ராவுடன் உரையாடல்



அழகப்பர் கல்லூரி வட்டத்தில்
இந்தியன் வங்கிக் கட்டிடத்தைத் திறந்துவைத்தல்



செட்டி நாட்டு அரசர் மாலை அணிவித்தல்

# செயல்வீரர்

லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார்
தமிழ்ப் பேராசிரியர் (ஓரியண்டல்) அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

பொன்பூத்த சடைப்பெருமான் உமையவள்சேய்
இவர்அரசு புரிந்த பாண்டி
நன்னாட்டுக் கானாடு காத்தானிற்
சிதம்பரப்பேர் நல்லோர் பெற்ற
தென்பூத்த சி.வி.சிடி. வேங்கடா
சலமெனப் பேர் சிறந்த செம்மல்
அன்பூறும் குணக்குரிசில் அனைவரும்பா
ராட்டிடுநல் ஆட்சி யாளர். 1

முளைப்பருவம் தொட்டுமனம் மொய்துளவம்
போலமதி முகிழ்க்கும் மிக்க
இளம்பருவ மதுதொடங்கி ஈரிருபான்
ஆண்டாக எழில்சேர் கல்வி
திளைக்குநல முறுசமயம் தொழில்வணிகம்
ஆட்சிமுதற் செயலால் நன்மை
விளைக்கும்இவர் திறம்கண்டு வியவாதார்
யாவருளர் விளம்புங் காலே. 2

ஆங்கிலப்பேர் அரசினரும் மதிக்கவட
முகவைமா வட்டத் தாட்சி
பாங்குபெறப் புரிந்தும்உயர் சென்னையினன்
னிதிக்கழகம் முதலாப் பல்ல
ஓங்கியசீர்க் கழகம்அவற் றுறுப்பாயும்
ஊராண்மைக் கழகத் தாங்கண்
தாங்குதலை மையில்இருந்தும் ஆற்றுபணி
அளவிடற்காம் தகைய வாமோ. 3

உலகிலுயர் கொடைவள்ளல் தனிமையிற்பல்
கலைக்கழகம் உதவும் வேந்தர்
அலகில்பெரும் புகழாளர் அறிஞர்அண்ணா
மலையரசும் அவர்தம் மைந்தர்
தலைமைபெறும் இணைவேந்தர் தகுகுணத்தோர்
தமிழர்தனித் தலைவர் ஆயோர்
இலகியசீர் ராஜாசர் முத்தையப்
பேர்கொளும்நம் எழிற்கோ மானும் 4

அன்புரிமை மாதுலரும் மைத்துனரும்
ஆதலினால் அவர்தாம் சென்ற
துன்பமிலா நெறிபற்றிக் கல்விஅறம்
பரப்பிடுமத் தொண்டின் மிக்கார்
மன்பதையி னுக்குதவ வள்ளல்அழ
கப்பரவர் வகுத்த கல்வி
இன்பநிலை யம்வளர்க்கும் அருஞ்செயலால்
என்றுமுயர் பெருமை பெற்றார். 5

இன்னபெருஞ் சிறப்புறுநம் வேங்கடா
சலனாராம் ஏந்த லார்க்கு
முன்னியமூ விருபஃதாம் ஆண்டுநிறை
வெய்தியஇம் முதன்மை நாளில்
பன்னரிய அறிஞர்பெருஞ் செல்வர்மாண்
புறுபெரியோர் பலரும் கூடி
முன்னமிவர் செய்பணிகள் அனைத்தினையும்
நினைந்தேத்தும் முறைமை நன்றே. 6

தன்னிகரில் செயல்வீரர் மதிநுட்பம்
உடையவர்இவர் தகைமைக் கேற்ப
நன்னர்இரு முப்பானாண் டினிதுநிறை
விழாவிதனை நயந்து செய்து
அன்புரிமை மக்களொக்கல் சூழ்ந்திருக்க
அவனியில்நீ டூழி வாழ
மின்னுமணிப் பொதுவில்நடம் செயுமிறையோன்
திருவருளை வேண்டு வோமே. 7

# திறங்காப்பான்

சா. கணேசன்

திருவேங் கடமுடையான்
தென்பாண்டி நாட்டில்
அரியக் குடியில்
அமரும் — உருவோங்கும்
*மாநகர்க்குக் கோபுரமும்
மன்னுவித்த நற்குடியில்
தானுதித்தான் வாழ்க
தழைத்து.

கொள்ளக் கிடையாக்
குவலயத்தே கல்விக்காய்
அள்ளிச் சொரிந்த
அழகப்ப — வள்ளல்
அறங்காட்டு கின்ற
அமைப்பவற்றை மேலாம்
திறங்காப்பான் வாழ்க
செழித்து.

ஆறுபத் தாண்டை அடைவேங்க டாசலனூர்
நூறுபத் தாண்டளவும் நோயின்றி—வீறுபெற்று
அம்மையப்பன் ஆன அரிஅரன் தம்மருளால்
எம்மையினும் வாழ்க இனிது.

---

* மாநகர்-பெருங்கோயில்

# ஆர்வமுடன் வாழ்க!

திருமுருக கிருபானந்தவாரியார்

மூவிருப தாண்டு முருகன் திருவருளால்
பூவுலகில் எய்தியுயர் புண்ணியன்—மேவுபுகழ்
சீர்வேங் கடாசலம் செட்டியார் பல்லாண்டு
ஆர்வமுடன் வாழ்கநலம் ஆர்ந்து.

# புலவர் புகழ் வேங்கடாசலன்

க. வெள்ளைவாரணன்

துணைப்பேராசிரியர், தமிழ் ஆராய்ச்சித்துறை,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

உள்ளமகிழ் கலைத்துறைகள் தமிழகத்திற்
    பெருகவளர் உரவோன், அன்பால்
வள்ளல் அழகப்பரவர் நிறுவியநல் லறங்கள்பல
    வளர்க்குந் தோன்றல்,
தெள்ளுதமிழ் நலம்வளர்த்த செட்டிநாட்
    டரசர்மகிழ் மருகன், அன்பின்
வெள்ளமெனப் புலவர்புகழ் வேங்கடா
    சலனென்னும் விழுமி யோனே.

தனவணிகர் குலஞ்செய்த தவப்பயனாய்த்
    தோன்றியொளிர் செல்வன், மாந்தர்
இனம்வளரக் கலைவளர எத்திசையும்
    புகழ்வளர இந்த நாட்டில்
அனைவருமே பாராட்ட அரசினரும்
    கொண்டாட அருந்தொண் டாற்றி
மனமகிழ்ந்து புலவரெலாம் வாழ்த்திசைப்ப
    மணிவிழாப் பெற்றான் வாழி.

வாழியநம் வேங்கடா சலவணிகன்
    சுற்றமெலாம் வாழ்த்த நன்கு
வாழியவன் கண்ணெனவே வளர்க்குமழ
    கப்பர்கலை நிலையம் என்றும்
வாழியதிற் பணிபுரியும் ஆசிரியர்
    மாணவர்கள் மற்று முள்ளோர்
வாழியசெந் தமிழ் வளர்த்தே வேங்கடா
    சலக்குரிசில் வாழி வாழி.

# Mandarin of Accounts

M. V. D. Nair

*Assistant Educational Adviser (Tech), Ministry of Education, New Delhi.*

Greetings to you O, C.V.CT.
Greetings to you O, thou Lord of the Vysias,
Greetings to you O, thou, bestower of Education
Greetings to you O, thou hallowed with the name of Siva

Thou hast a son, grandsons with great wealth
at their command, thou hast sons-in-law grand,
Bakti of your class, divine grace,
galaxy of distinguished friends, work to
your liking, dignity, persuasive gift
of the gab, what more do you want O, thou, the son of the earth?

To the great battle-field of Karaikudi, you
have with effortless ease brought hallowed peace, and
calmness seeing which, from his heavenly abode the great Dr. Chettiar
struck with wonder and awe is like a painted picture.

One thing however; The light of your
life your Dharma Patni, who scintillated
with the nobility of her character has departed
to her heavenly abode. Reciting Mangala
Sutra (for your long, long life), radiating
gentleness that pure soul sits at the feet
of Lord Brahma and is looking benignly
at the auspicious celebrations of your
Shasti purthi.

In wisdom you achieved Shastipurthy
by the mere act of your birth, you are
destined to have youthfulness all your life.
Intermingling the wisdom of the ages with the spirit
of youth you in your circle are a King—What
therefore is its puja about a Shastipurthy for you.

O thou Mandarin of accounts, you
will therefore attain the age of hundred. The
light of your life will burn with dazzling lustrous brilliance.

---

Translation of the Malayalam felicitation by the author himself

# கனிந்த தொண்டன்

வித்துவான் க. தேசிகன்
தமிழ் விரிவுரையாளர், அழகப்பா கல்லூரி

கங்கைமுதற் காவிரிபொற் கலசத் தேந்திக்
கற்றோரின் களிப்போடு சுற்றம் வாழ்த்தச்
செங்கையினுல் அபிடேகங் கொள்ளுஞ் செல்வ!
சேர்ந்திட்ட பிறைமூன்றின் சிறப்பே போலத்
துங்கமுறும் நீறணிந்த தோற்றங் கொண்டாய்
தூயவருட் சாந்தியெனும் துறைப டிந்த
சங்குகளில் வலம்புரியே! உலக மெங்கும்
சார்ந்திட்ட நெறிதழைக்கத் தழைக்க நன்றே. 1

தீராத வினையெல்லாந் தீர்த்து வைக்குந்
திருவேங்க டத்துறையும் தெய்வப் பேரான்
ஊராளும் முறையறிந்த மன்னர் பின்னேன்
உலகெங்கும் தன்மநெறி காத்தற் கான
பேராளன் தனவணிகர் குலக்கொ ழுந்தாய்ப்
பிறவிமுதற் பொருட்பாலை ஊட்டிக் காக்கும்
சீராளன் அழகப்பா எண்ணம் காக்கும்
செயலாளன் பல்லாண்டு சிறந்து வாழ்க! 2

குன்றொத்த மேனியிலே அருவி போலக்
குதித்தோடு மேலாடை இருபால் சார
மன்றத்தே ஏறியவன் முழக்கங் கேட்டார்
மனமென்னும் பள்ளமதைச் சிரிப்பால் மூடி
என்றைக்குங் காணுத கலக லப்பால்
இன்பத்தே மூழ்கிடுவார்; எங்கோ கற்றான்!
நன்றிக்கே வித்தாக வாழ்த்தும் சொற்கள்
நாமுரைத்தோம் 'நலமெல்லாம் பொங்கி வாழ்க!' 3

கல்லொன்றில் கால்படவே பெண்ணாய் மாறிக்
கைகுவிக்கும் பெருமாளின் கனிந்த தொண்டன்
கல்லொன்றில் கைவைத்தால் மன்றம் ஆகிக்
கலைமகளார் திருக்கோயில் காட்சி நல்கும்
சொல்வென்றிக் கைராசி சூழக் கொண்டான்
சோர்வறியான் புலவர்க்குச் சுனைநீ ராவன்
வெல்கின்ற விழியாளன் அறுபத் தொன்றும்
வீதியிலே உலாவந்த வேந்தன் காணீர்! 4

பூமணக்கும் அருட்கோயில் பலவுங் கண்டு
போற்றிசெயும் தமிழ்க்கடலால் சூழப் பெற்று
நாமணக்கத் தமிழ்பாடி நயங்கள் கண்ட
நலத்தாலோர் அறுபதெனும் வட்டம் கண்டாய்,
வாய்மணக்கும் பேராளன் அழகன் செய்த
வழிமணக்குஞ் செயலாள! மற்றோர் வட்டம்
நீமணக்கும் புகழாலே உலகம் சுற்றி
நிலைநாட்ட வாழ்ந்திடுக நெடியோன் காக்க! 5

## தனித் திறம் நிறைந்தாய்

ரெ. முத்துக்கணேசன்

ஊக்கமே உருவ மாகி
உழைப்பினால் உயர்ந்த மேலோய்;
நோக்கிய நோக்கில் எல்லாம்
நொடிக்கொரு செயலே தோன்ற
ஊக்கிடும் அமைச்சன் ஆவாய்;
ஒளி உமிழ் கதிரை ஒப்பாய்;
பூக்கமழ் மணிவி மாவில்
புகழ்க்கொடி பொலிய வாழி! 1

கொண்டநற் கொள்கை யின்பால்
குன்றுபோல் வலிய நெஞ்சாய்;
அண்டமே திரண்டிட் டாலும்
அதற்கெனச் சிறிதும் அஞ்சாய்;
கண்டநற் கருத்தைக் காட்டிக்
கலந்தவர் உள்ளம் ஈர்ப்பாய்;
தண்டமிழ்ப் புலவோர் வாழ்த்தத்
தனித்திறம் நிறைந்தாய் வாழி! 2

பேர்பெற்ற வாழை ஒப்பப்
பெற்றிட்ட பொருளனைத்தும்
ஊர்கற்கக் கொடுத்து வந்த
உயர்அழகன் கல்லூ ரிக்காய்
வேருற்ற சிந்தை ஈந்து
வேங்கடா சலமே காத்தாய்;
பார்பெற்ற மக்கள் போற்றப்
பல்லாண்டு நிலைத்து வாழி! 3

# தமிழ்த் தோன்றல்

**இரா. சாரங்கபாணி** எம் ஏ.,எம்.லிட்.,
தமிழ்ப் பேராசிரியர், அழகப்பா கல்லூரி

நாட்டாண்மைக் கழகம்,ஊர் ஆட்சி மன்றம்,
நலம்பயக்குங் கூட்டுறவுச் சங்கத் தெல்லாம்
காட்டாகத் தலைமைதனை ஏற்றந் நாளில்,
கணக்கில்லாப் பணியாற்றி இன்பம் கண்டாய்;
கூட்டாகத் தமிழ்க்கடலின் துணைகொண் டிந்நாள்
குறைவின்றித் தமிழின்பம் நிறைகின் றாய்நீ!
பாட்டாலே பெறுகின்ற இன்பம் போலே
பாரதனிற் சிறந்ததொரு இன்பம் உண்டோ? 1

பாரியெனக் காரியெனப் புகழ்மை சான்று
பண்டிருந்த வள்ளல்திருக் கூட்டத் தோடே
ஓரினமாய் வைத்தெண்ணத் தக்க வள்ளல்,
உளங்கவர்ந்த பண்பழகன், அழகப் பன்தான்
வாரியனைத் துந்தந்து தனக்கொன் றின்றி
வளர்த்தபல கலைக்கழகம் அனைத்தும் 'நீவிர்
காரியத்துட் காரியமாய் நினைந்து காத்தல்
கடமை'யென வேண்டியதைக் கருத்துட் கொண்டு, 2

தடைவரினும் நட்புச்சொல் தளரேன் என்று
தயங்காது கண்ணிமைபோல் காத்து நிற்போய்,
'கடைவரையுங் கைகொடுப்ப தறமே; செல்வம்
கைக்குவரின் அப்போழ்தே அறத்தைச் செய்க;
இடைமயங்கேல்', எனுஞ்சான்றோர் மொழியைப் பேணி
இயலுநெறி அறப்பணிகள் ஆற்றும் அண்ணல்!
படைவரினும் கலங்காத மறவன் போல
பலபணியும் உரத்தோடு புரிவோய், வாழி! 3

பற்றெல்லாம் அறுதற்குப் பற்றில் லான்தாள்
பற்றுதலே உரியநெறி என்பதோர்ந்து,
கற்றுவின் மனம்போலக் கசிந்து பாடி,
களித்தஇறை அடியார்கள் ஏத்துங் கோயில்
சுற்றிவலம் சூழ்தந்து, தெய்வப் பாவின்
சுவையார்ந்து, சிவமணியின் உறவால் கோயில்
பற்றிய நூல் வெளியிட்டு, நிலைத்த இன்பப்
பத்திமையைப் பரப்புதமிழ்த் தோன்றல், வாழி! 4

கேட்டாரைப் பிணிக்கின்ற சொல்லின் வன்மை
கேளாரும் வியக்கின்ற மதியின் வன்மை
நாட்டுக்கோர் காட்டாக உழைக்கும் வன்மை
நலமார்ந்து பொலிகின்ற யாக்கை வன்மை
பாட்டுகளிற் சுவைதேரும் கல்வி வன்மை
பரமனடி பணிகின்ற பத்தி வன்மை
கேட்டுக்குக் கேடுசெய்யும் நகையின் வன்மை
கேளிர்கள் துயர்துடைக்கும் உறவின் வன்மை, 5

என்றினைய வன்மையெலாம் பெற்ற தாலே
எத்துணையோ வலியரெனக் கருதிட் டாலும்
நன்றினிய நகைமொழியின் ஈர நெஞ்சின்
நயந்துய்த்தார் நனியுணர்வர் நினது மென்மை
தென்றலைப்போல் இனிமை நலங் கெழுமி, என்றும்
தீந்தமிழ்போல் இளமை நலங் கனிந்து, நாளும்
மன்றுவக்கும் மணிவிழவின் திருநாள் ஒப்ப
மகிழ்சிறந்து, நலமார்ந்து நெடிது வாழி! 6

# அன்பர்க்கு அன்பன் வாழி

**வெ. சு. அழகப்பன்,** எம். ஓ. எல்.
(முதல்வர், கணேசர் செந்தமிழ்க் கல்லூரி, மேலைச்சிவபுரி)

திருவோங்கும் பெருங்குடியிற் செட்டி நாட்டில்
திலகமெனத் திகழ்ந்தோங்கும் தமிழாம் தோன்றல்!
ஒருமகனுய் இந்தியநல் வங்கி யோங்க
உவமையிலா வகையுதவி வளர்த்த செம்மால்!
பெருகியஅண் ணுமலையாம் அரசர் கண்டு
பேணியநல் வழிகளிலே செல்லும் நல்லோய்!
உருகிமனம் கல்விக்கே ஆக்கி வைத்த
உயர்வள்ளல் அழகப்பன் நெஞ்சு நேர்வோய்! 1

துன்றுபுகழ் அழகப்பன் காரை தன்னில்
தோற்றியவோர் கலைக்கடம், ஆல வித்து
ஒன்றுபல நூருகி யாண்டும் சென்று
ஒள்ளியதாய்த் தண்ணிழலைப் பரப்பு மாப்போல்
நின்றுபல கல்லூரி நிலைக்க வைத்தாய்
நித்தமதைக் கண்ணேபோல் கருதிக் காப்பாய்;
நன்றுநிறை ஆறுபத்து நலமும் பெற்றுய்
நானிலத்து வேங்கடவா மேலும் வாழி. 2

அன்பர்க்கு அன்பனுகி உதவி செய்வாய்
அஞ்சாமை அறிவூக்கம் ஈகை மிக்காய்;
என்றுமிகப் பொலிவான தோற்றம் கொண்டாய்;
எழிற்பதிகள் பலநூறும் வணங்கிக் கண்டாய்;
துன்றுநல வரம்பலவும் அருளிக் காக்கும்
துழாய்மாலைத் திருமாலை உளத்துள் வைத்தாய்;
பன்னுபுகழ் வேங்கடம்போல் விளங்கி என்றும்
பல்லாண்டு "தமிழ்த் தோன்றல்" வாழ்க வாழ்க. 3

# வெண்ணீற்றன்

வித்துவான் பூ. அமிர்தலிங்கம் பி.ஏ.
தமிழ் விரிவுரையாளர், அழகப்பா கல்லூரி.

விளங்குமணி விழாக்கொள்ளும்
வேங்கடா சலப்பெயரோன்

உளங்கொள்ளும் மலரமுதன்
உவந்தளித்த வாழ்த்துப்பா.

ஓங்குபெருந் திருவுருவன்;
உயர்ந்தகன்ற தடந்தோளன்,
ஒளிர்பொன் மேனி

தாங்குநுதல் வெண்ணீற்றன்,
தமிழ்க்கடலின் அமுதருந்தித்
தழைக்கும் நெஞ்சன்

ஊங்குவரும் பேரவையோர்
உளமகிழ நகைச்சுவையை
ஊட்டும் பண்பன்;

ஈங்குமணி விழாக்கொள்ளும்
எழில்வேங்க டாசலப்பேர்
இனியன் வாழ்க! 1

காணுடு காத்தானில் கடல்வணிகர்
பெருங்குலத்தின் கண்ணுய்த் தோன்றி

வானுடும் புகழண்ணு மலையரசர்
வரங்கிடக்க வந்து வாய்த்த

மீனுடும் அருள்விழிசேர் மீனுட்சி
ஆச்சியினை விரும்பி ஏற்றுத்

தேனுடும் இல்லறத்திற் செழித்தோங்கி
மகப்பெற்றுச் சிறந்தாய் வாழி! 2

கைம்மாறு கருதாத கடப்பாட்டு
    மாரியெனக் கணக்கே இன்றி
உய்மாறு காரைநகர் உயர்ந்தோங்க
    உயிரினையும் ஈந்த வள்ளல்
பெய்மாறு வைத்தருளும் அறநிலையைக்
    கண்ணெனவே பேணிக் காத்துச்
செய்மாறு வினைத்திட்பச் செயலாற்றிப்
    புகழ்கொள்ளும் செம்மால் வாழி! 3

ஏந்துபுகழ் அழகப்பன் கல்லூரி
    வட்டத்தில் இருந்து வாழும்
மாந்தர்தம துடல்பேணும் மருந்தகமொன்
    றின்மையைநீ மனத்தால் எண்ணிச்
சாந்திபெறும் தனவணிகர் கொடைவழங்கும்
    குலமரபு தவிரா வண்ணம்
ஆய்ந்துதவும் மருத்துவநல் மனையொன்றை
    அளித்தருளும் அண்ணல் வாழி! 4

இமிழ்கடலின் அலையெனவே எப்போதும்
    தமிழ்முழங்கும் இனிய ராய
அமிழ்தனைய சொக்கலிங்கத் தமிழ்க்கடலை
    அருகிருத்தி, அருள்பெற் றோங்கும்
கமழ்தெய்வத் திருத்தலத்தின் காட்சியெல்லாம்
    கண்டுவக்கும் பேறு பெற்றாய்
தமிழ்முருகன் தண்ணருளால் சாந்திபெற்றுப்
    பல்லாண்டு தழைத்து வாழி. 5

# என்றென்றும் வாழ்க

**மா. கண்ணப்பன்** எம்.ஏ.,பி.டி.
தமிழ் விரிவுரையாளர், டாக்டர் அழகப்ப செட்டியார் பயிற்சிக்கல்லூரி.

செம்மாந்த திருமேனி; செட்டி நாடு
செய்தவத்தால் வந்துதித்த செல்லப் பிள்ளை
கம்மாயில் சிறுவரெல்லாம் கால்பந் தாடும்
கடும்பஞ்ச நாட்டினிலே கல்வித் தேனை
அம்மாஎன் றழைக்கின்ற சிறுவர்க் கெல்லாம்
அள்ளிஅள்ளி ஈந்திட்ட அழகன் கண்ட
நம்முடைய கல்லூரி ஐந்தி னோடு
நனிசிறந்த வேங்கடத்தான் ஆறாய் ஆனான். 1

கல்லூரி செல்லாமல் கற்றான் கல்வி
கல்லூரி கண்டவர்கள் காணாக் கல்வி
சொல்லெண்ணிப் பேசிடுவான் சொல்லும் போதே
சொக்க வைப்பான் நம்மையெல்லாம் சிரிப்பி லாழ்த்தி
வெல்வதற்கு ஆளில்லை அவனை இங்கு
விரைந்தோடிச் செயலாற்றும் வேகந் தன்னில்!
நல்ல தமிழ்க் கடல்ராய சொக்க லிங்கன்
நட்பாலே நற்றமிழைப் பெற்றான் வாழ்க! 2

ஆறோடும் சிறுகுன்றம் அஞ்சி நாணும்
அணிசரிகை மேல் துண்டை அணிந்தான் இன்று
வீறோடு நடப்பதனை விழியால் கண்டு,
விண்புகழும் செயல்வீரன் வேங்க டத்தான்
நீறோடும் நெற்றியினான் நிறைந்த நெஞ்சான்
நிறைந்திட்டான் அறுபதினை இந்த நாளில்
நூறோடிப் பொருள்கோடி சேர்த்து மேலும்
நுவலரிய புகழ்க்கோடி பெற்று வாழ்க! 3

சீரோங்கும் நாட்டினிலே செட்டி நாட்டுச்
சீமையதன் சீரோங்கச் செல்வம் ஓங்கப்
பாரோங்கப் பிறந்தமகன் அழகன் என்னும்
பண்பாளன் பெயர்போல நாளும் ஓங்கி
ஏரோங்கும் தமிழ்க்கடலின் தமிழைப் போல
என்றென்றும் நீவாழ்க! மரபு காத்துப்
பேரோங்கக் குடிஓங்க அறுபான் ஆண்டு
பெற்றவனே பல்லாண்டு வாழ்க! வாழ்க! 4

# ஆளும் திறமுடையார்

ரெ. சிங்காரவடிவேலன் எம்.ஏ.,பி.டி.

*தமிழ் விரிவுரையாளர், அழகப்பா கல்லூரி.*

வெள்ளிப் பனிமலையின் வீறார்ந்த தோற்றத்தை
அள்ளிப் பிசைந்துருவம் ஆக்கி வடித்ததுபோல்
நீண்டபெரு மேனியினார் நெற்றி சிவம்பொலிய
வேண்டு வரமளிக்கும் வேங்கடவன் சீரடிகள்
ஆண்டுபல வாக அடைகிடந்த நெஞ்சத்தார்
பண்ணுண்ட செந்தமிழைப் பாராள வைத்ததிரு
அண்ணா மலையரசர் அன்பு மருமகனார்
கல்லார் பெருங்காட்டைக் கல்வி மணக்காடாய்
முல்லை மணம்பரப்பும் முத்தமிழின் பண்ணையதாய்
ஆக்கிச் சிறந்த அழகன் திருக்கோயில்
வாக்கு மறவாமல் வண்ணம் குலையாமல்
கண்ணை இமைபோலக் காக்கும் கருத்துடையார்
நுண்ணறிவாற் பள்ளிதரும் நூலறிவை வென்றிடுவார்
எத்துறையிற் சென்றாலும் எப்பொறுப்பை ஏற்றாலும்
அத்துறையில் மன்னரென ஆளும் திறமுடையார்
ஒப்பரிய சான்றோராய் உள்ளத்தில் உள்ளதனை
அப்படியே சொல்லிவிடும் அஞ்சாத நெஞ்சுடையார்
கண்ணாற் செயல்புரிவார் கற்கண்டுச் சொற்கேட்டால்
மண்ணும் சிரிக்கும் மரமும் தலையசைக்கும்
பொங்கு 'தமிழ்க்கடலின்' பொன்னான வாசகத்தில்
முங்கிச் சுவைதேர்ந்து முத்தமிழைக் காத்திடுவார்
வாழை இருபுறமும் வந்தார்க்குக் கைகூப்ப
வாழி எனவேத்தும் வாழ்த்தொலிகள் விண்ணிடிக்கச்
சங்கின் ஒலிமுழங்கச் சந்தனமும் பன்னீரும்
எங்கும் மணம்பரப்பி இன்பக் களியூட்டத்
தென்றல் தவழ்ந்துவரும் சித்திரப்பூங் காவணத்தில்
மன்றம் மகிழும் மணிவிழாக் காட்சியினைக்
கண்டு மகிழ்கின்றேன் கன்னித் தமிழ்த்தாயின்
தொண்டு நலங்கனிந்த தோன்றலுமை வாழ்த்துகிறேன்
விண்ணிற் கதிராய் விளங்கு மதியமதாய்ப்
பண்ணின் நயமதுவாய்ப் பல்லாண்டு பல்லாண்டு
செந்தமிழைப் போலச் சிறந்து வளர்ந்தோங்கிச்
சந்ததமும் வாழ்க தழைத்து!

# வித்தகக் குரிசில்


**வித்துவான் மீ. முத்துசாமி பிள்ளை**

*தமிழ் விரிவுரையாளர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்*


பொன்கெழு குடாஅது பொருப்பிடைத் தோன்றிக்
கோள்நிலை மாறிக் கோல்நிலை திரியினும்
தான்நிலை திரியாத் தன்மைத்து அன்றியும்
வேற்று அரசு அணுகா மேன்மைத்து ஆதலின்
"வையை என்னும் பொய்யாக் குலக்கொடி" என
இளங்கோ அடிகள் உளங்கொள உரைக்கும்
ஆறுமிகப் பெருகிப்பல் ஆறுப் பரவி
எவ்வகை வளனும் செவ்விதின் தரூஉம்
ஈண்டிய புகழ்மலி பாண்டிய நாட்டில்
கவின்பெறு சிறப்பெலாம் காண்டக விளங்கும்
மட்டிலாப் பொருள்சேர் செட்டிமார் நாட்டில்
தலைமைபெற்று ஒளிறும் தன்மைத்து ஆயது
கானாடு காத்தான் கவினார் பதியே;
அப்பதி வாழுநர் ஆற்றிய நோன்பால்
தோன்றின் புகழொடு தோன்றுக என்னும்
பொருள்உரைக்கு ஏற்ப வரும்ஒரு குரிசில்
தாவில் சேர்த்திச் சீவி சீடி
வேங்கடா சலப்பேர் தாங்கிய செம்மல்
பலகலை உணர்வும் உலகியல் அறிவும்
படைத்தவர் ஆதலின் வடக்கு முகவைமா
வட்டக் கழகத்து மாண்புறு தலைமை
மூன்றுபத்து ஆண்டினில் ஏன்று அப்பகுதி
கல்வி முதலாம் எல்லா வகையினும்
வளர்ச்சிபெற்று ஓங்கிட மனத்தகத்து எண்ணி
மாவட்டத்து இடந்தொறும் மருத்துவ மனைகளும்
கல்விச் சாலையும் கவின்மிகு பாலமும்
போக்கு வரவினுக்கு ஆக்குகற் சாலையும்
காலத்திற்கு ஏற்பக் கணக்கில அமைத்து அவ்
ஆங்கில அரசு பாங்குற மதித்து
மாண்புற வழங்கிய வரிசைபெற்று உயர்ந்தோர்

ஓங்குபேர் இசையால் வேங்கடா சலமால்;
சென்னை மாநில நன்னிதிக் கழகம்
திகழும்இந் தியசெஞ் சிலுவைச் சங்கம்
கல்விக் குழுமுதல் பல்வகைக் குழுக்கள்
என்னும் இவற்றின் மன்னும்உறுப் பினராய்ப்
பாரத நாட்டுச் சாரணக் குழுவும்
வானுடு வளம்பெறும் கானுடு காத்தான்
ஊராட்சி மன்றமும் உரைக்கும் அந்நகரில்
கூட்டுறவு ஆக நாட்டிய கழகமும்
முதலிய வற்றின் இதமுறு தலைவராய்
ஆற்றிய தொண்டுகள் சாற்றவும் கூடுமோ?
வாணிகத் துறையினும் பேணிய தொழிலினும்
நுண்மதி படைத்த ஒண்மை யாளராய்
இவ்விரு துறைகளில் இயங்குநர் பலர்க்கு
நுண்ணறிவு வழங்கிய வண்மை யாளர்
எங்கணும் யார்க்கும் இயற்றுதற்கு இயலாப்
பல்கலைக் கழகம் நல்கிய பெருங்கொடை
வள்ளல் அண்ணு மலைமன் னவரும்
அவர்தம் மைந்தர் ஆன்றநுண் அறிவினர்
ராஜா சர் எனப் பேசும்முத் தையப்பேர்க்
கோமான் தாமும் ஆமுறை கருதின்
மாதுலர் மைத்துனர்ஆத லாலே
அவ்விரு வோரும் செவ்விதின் சென்ற
வழிநனி பற்றிப் பழிதபு முறையில்
கல்வித் திறத்தினும் நல்லறத் துறையினும்
ஈடுபட்டு அரும்பணி இயற்றிய பெருமகன்
மதிநுட்பம் நூலுடன் வாய்ந்தவர் ஆகிக்
கல்வியின் நோக்கமும் கல்விக் கூடங்கள்
ஆற்றுசெயல் முறைகளும் அறிந்தவர் ஆதலின்
மாநிலம் பயன்உற வள்ளல் அழகப்பனுர்
நிறுவிய கல்வி நிலையம் பலவற்றின்
உறுப்பினர் ஆயும் உயர்செயலர் ஆயும்
நன்கனம் பேணிப் பின்னர்மற்று அவைகளின்
காவலர் ஆகியும் ஆர்வம் காட்டி
அறிவியல் பொறியியல் ஆய்வுத் துறைதொழில்
பல்வகைக் கலைஇவை பல்கிட இவர்தாம்
உழைப்பதுஇந் நாடுகள் ஒருங்குநன்கு அறியும்

மேம்படு கற்பின் மீனாட்சி ஆச்சி
என்னும்தம் மனைவி எழிற்பெயர் அதனால்
பயிலரங் கும், தம் இயலமை பெயரால்
வருத்துநோய் தணிக்கும் மருத்துவ மனையும்
வள்ளல்அழ கப்பரின் வட்டா ரத்திற்கு
அணிசெயும் நோக்குடன் அமைத்தனர் அன்றோ
இன்னணம் இளமை தொடங்கி மற்றிவர்
ஈரிரு பஃதாண்டு எல்லையிந் நாள்வரை
கல்வி சமூகம் பல்வகைச் சமயம்
வாணிகம் ஆட்சி பேணிய தொழில்மற்று
எல்லாத் துறையினும் இயற்றும் செயல்கண்டு
இமிழ்கடல் உலகில் தமிழகம் மதிக்கும்
இத்தகைச் சிறப்பெலாம் இயைதரப் பெற்ற
வித்தகக் குரிசில் வேங்கடா சலனார்க்கு
இருமுப் பானாண்டு இனிதுநிறை வெய்தும்
மணிவிழா இதனில் மாண்புறக் குழீஇ
அறிஞரும் செல்வரும் ஆன்றோர் பலரும்
உரிதினில் அவர்முனம் உவப்புற ஆற்றிய
பணியெலாம் பாராட்டும் பான்மை நன்றே;
மங்கல மணிவிழாப் போதுஇம் மணஅணி
தாங்கிய எங்கள் வேங்கடா சலனார்
செல்வமும் புகழும் மல்கிடப் பெற்றுச்
சுற்றமும் மக்களும் சூழ்தர மகிழ்ந்தே
ஆடக மன்றினில் நாடகம் நவிற்றும்
ஈடில் ஆனந்தக் கூத்தன் இன்னருளால்
நீடு வாழியர் இந் நிலமிசை யானே.

# வழி வழி வாழ்க!

ரா. ந. வரதராசன்
பேராசிரியர், அழகப்பா பொறியியற் கல்லூரி

அன்பும் அறமும் ஆற்றலும் பொருளும்
பண்பும் திறனும் பற்பல வளமுடை
மாபெரும் புகழ்மிகு மாத்தூர் அரும்பாக்
குடிகுலம் தழைக்கும் கொடியாய்த் தளிர்த்துத்
திரைகட லோடித் திரவியம் ஈட்டி
அறப்பணிக் கென்றே அள்ளிக் கொடுக்கும்
வள்ளல் நிறைந்த வளம்மிகு நகரம்
கானாடு காத்தான் கவின்பெறப் பிறந்தும்;
அரசிளங் குமரி அண்ணா மலைமகள்
கற்பினுக் கருங்கலம் கைத்தலம் பற்றியும்;
அரியக் குடிவாழ் அழகன் பெருமான்
வேங்கட வரதனை வேண்டி நின்று
வெள்ளித் தேரும் வேள்வி பலவும்
பள்ளிக் கிடக்கையும் பாங்காய்ச் செய்தும்;
திருவா சகத்தோன் திருப்பெருந் துறைமுதல்
ஆழ்வார் நவின்ற அரிமால் பதிகளும்
பத்தியொடு சென்று பரமனைத் தொழுதும்;
கோடி கொடுத்து வீடும் கொடுத்த
அழகப்ப வள்ளல் அறப்பணி நிலைக்கக்
கல்லூரி தோறும் கலைக்கூட மமைத்தும்;
அழகர் புரம்வாழ் ஆசிரியப் பெருந்தகை
அழகர் வட்ட விடுதி மாணவர்
அனைவரும் ஒன்றாய் அன்புடன் வாழ
அஞ்சல் நிலையமும் வங்கி வசதியும்
மக்கள் பிணிதீர் மருத்துவ சாலையும்
கள்ளர் பயம்தீர் காவற் கூடமும்
அனைத்தும் அமைய அரும்பணி யாற்றியும்
சென்னைப் பள்ளியும் செவ்வனே நடத்தியும்

அறுபது ஆண்டு நிறைவும் பெற்று
வேள்வி நடத்தும் வேங்கடா சலமெனும்
வள்ளல் பெருந்தகை வளம்மிகப் பெறவும்
இளமைப் பொலிவோடு இனிது வாழவும்
நாடும் தமிழும் நலம்பல பெறவும்
பற்பல ஆண்டு பொற்பணி யாற்றவும்
அங்கயற் கண்ணியின் அருள்மழை பொழிகென
வணங்குவன் வரதன் வழிவழி வாழ்கென.

# வேங்கடாசலனர் வெண்பாப் பத்து அந்தாதி

அரு. சோமசுந்தரம், எம். ஏ., பி. டி.
தலைமையாசிரியர், சண்முகநாதபுரம் உயர்நிலைப்பள்ளி

நல்ல குடிப்பிறந்து நாற்புறமும் தொண்டாற்றி
வல்ல தலைவனென வாழ்கின்றேன்—சொல்லமுதம்
உண்ணத் தெவிட்டா துவகை குறையாது
கண்ணின் கருமணியான் காண்! 1

காணின் கலைமணக்கும்; கண்டபின் நினைவினிக்கும்
சேணில் புகழ்மணக்கும் செட்டியார்!—தூணில்
திகழ்கின்ற தூய சிவபெருமான் பாதம்
புகழ்கின்ற நெஞ்சே புகழ்! 2

புகலாய் வரும் திருவைப் புண்ணியத்துக் காக்கி
அகலாய் இருள்தீர் அறிஞன்—பகலாய்
விளங்கி ஒளியூட்டும் வேங்கடா சலமே
வழங்கிப் பலஊழி வாழ்! 3

வாழ்வு கலைக்கென்றே வைத்ததனல் தொண்டுலகில்
தாழ்வு கருதாத் தலைமையனே!—சூழ்வுற்
றுதிரும் பகையெல்லாம் ஓடப் பணிசெய்
ததிரும் புகழ்கொண்டாய் ஆல்! 4

ஆலாய் நிலைத்தே அறுகுபோல் வேரோடி
வேலாய்த் திகழ்கின்ற வேங்கடவ!—பாலாய்
இனிக்கும் உளத்தில் இறையுணர்வும் சேர்ந்து
பணிக்குப் பெயர் பெற்றாய் பார்! 5

பாரில் கலைவளரப் பைந்தமிழும் சேர்ந்துயர
ஊரில் தொழிற்கல்வி உண்டாக—நேரில்
அயராமல் ஓடி அரும்பணிகள் செய்து
சுயமாக வென்றாய் சுழன்று! 6

சுழலும் உலகத்தில் சுக்கிரனுய் வாழ்ந்து
நிழலும் அறம்செய்த நேசன்—அழகன்
குலம்வளரும் காரைக் குடிவந்து காத்தாய்
தலம்வளரும் கல்வித் தரு! 7

தருவாய் இருந்து தமிழ்மணந்து கல்வி
உருவாய் வளர்ந்த உறவோய்!—குருவாய்
சிரம்தாழ்த்தி வாழ்த்தச் செயல்செய்து வந்தாய்
கரம் கூப்புகின்ருேம் கனிந்து! 8

கனியாய் முதிர்ந்து மணிவிழாவில் இன்று
தனியாய் அமர்ந்த தலைவ!—முனியா
முகங்கொண்ட செல்வ! முறுவல் கொள்வீர!
செகங்கொண்டு வாழ்க செழித்து! 9

செழிக்கின்ற பார்வை ; சிரிக்கின்ற பேச்சு
கொழிக்கின்ற செல்வக்குமர!—வழிக்கென்றும்
தோன்ருத ஈசன் துணையாலே பல்லூழி
சான்ருேய்நீ வாழ்க தழைத்து! 10

# தெய்வநெறிப் பித்தர்

**வித்துவான். செ. வேங்கடராமச் செட்டியார்**

விரிவுரையாளர், தமிழ் ஆராய்ச்சித்துறை, அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

வேங்கடா சலமென்னும் விழைவுறுநற் பெயருடையீர்!
தீங்கடாச் செயல்வல்லீர், தெய்வநெறி செலுநல்லீர்;
யாங்கடாச் செயலுறினும் எதிர்த்ததனைத் திருத்திடுவீர்;
பாங்கடாப் பண்பிலவர் பக்கத்தும் பயின்றறியீர். 1

பொதுப்பணியே யுயிர்நுமக்குப் பொதுப்பணியே விளையாட்டுப்
பொதுப்பணியே யுடல்வளர்க்கப் பொருந்தியநும் முடற்பயிற்சி;
பொதுப்பணியே யுயிர்வளர்க்கும் புகழ்மிக்க கடவுள்பணி;
பொதுப்பணியே நும்வாழ்வின் பொருவரிய குறிக்கோள்காண். 2

கலைபயின்று தெளிந்திடுநும் கவினார்ந்த வருளுள்ளம்,
கலைவளரத் தமிழ்நாட்டின் கவின்வளரக் கடைப்பட்டோர்
நிலைவளர உடல்வளர்க்கும் நெறிவளர மெய்ஞ்ஞானத்
தலையுணர்வு வளருமெனச் சமைந்திட்டீ ரப்பணிக்கே. 3

தமிழ்வளர்பல் கலைக்கழகந் தலைசிறக்க நிறுவியநும்
அமிழ்தனைய மாமனார் அறிவுநிறை குணக்குன்றம்
தமிழண்ணா மலைவள்ளல் தமைப்போலக் கலையறிவால்
தமிழ்நாடு வளமையுறத் தகுதொண்டு பலசெய்தீர். 4

பாங்குபெறு நும்முடைய பற்பலதொண் டினைக்கண்டே
ஆங்கிலவர் நுமக்களித்த அரியபெரும் பட்டமெலாம்
தீங்கினவா மெனத்துறந்தீர் தேயவிடு தலைக்குப்பின்
யாங்குளரே நும்போல்வார், இத்தேசப் பற்றுடையோர்? 5

வள்ளல்திரு அழகப்பர் வளர்த்தபல கலைநிலங்கள்
தள்ளவுறு துயிர்போலத் தழைத்தோங்க வளர்த்தோம்பும்
உள்ளமுறு முரனுடையீர் ; உயர்ந்தபெரும் குணனுடையீர்;
தெள்ளுதமிழ்ப் பற்றுடையீர்! தெய்வநெறிப் பித்துடையீர். 6

இத்தகைய பெருமையெலா மேய்ந்தறுப தாண்டுற்றீர்,
மெய்த்திருவாம் மீனாட்சி யாச்சியொடும் மேதினியில்
வைத்ததிருத் தலங்களெலாம் வணங்கிமிகப் பயனுற்றீர்;
மைத்தமணி மிடற்றனைப்போல் வாழ்ந்திடுக பலவாண்டே. 7

# வாழிய நலனே !

ச. விசுவநாதன் – ச. வேங்கடேசன் சகோதரர்கள்
காவேரிப்பட்டணம்

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயி
ரத்தாண்டு பண்பின் வாழ்ந்து,
கல்லாரும் புகழ்பரவிக் கைவணக்கும்
சிவநேசக் கருணைச் செம்மல்!
பொல்லாரும் இனியனெனும் சிவி. சிடி.
எனஅன்பால் புகழும் தூய
நல்லான்எம் திருவேங்க டாசலனார்
நலஞ்சிறக்க நவில்வேம் அம்மா! 1

தேனாடு சுரும்பிசைக்கும் துளவமலர்த்
திருமாலின் சிந்தை யானை,
கானாடு காத்தானை, கொடையானைத்
தமிழ்வளர்க்கும் காவ லானை,
வானாடு புகழ்டாக்டர் சர்அண்ணா
மலைமன்னன் மருக னானை,
தானாடும் தமிழானை, வாழ்த்துதுமே
பல்லாண்டு தழைக்க என்றே. 2

அருள்அமுதம் பொழிஅரனார்க்கு அன்புநிறை
நண்பனெனும் அளகை வேந்தன்
பொருள்அமுதம் பொழிஅனகன் போல்; எமது
பொருவரிய புகழ்சேர் தந்தை
உருள்அமுதத் திரைஎறியும் தமிழ்க்கடலுக்கு
உயிரனையான்; உவகை பூத்த
இருள்அமுத மதிநகையான்; சிதம்பரனார்
ஈன்றெடுத்த ஆற்றல் ஏய்ந்தோன். 3

அறம்தலைநின்று உலகளிக்கும் வள்ளல்அழ-
கப்பனெனும் அருளார் அண்ணல்
பிறந்ததிசைக்கு இசைநிற்பக் கலைக்கோயில்
பலஎடுத்தான் பிறங்க, நெஞ்சின்
மறந்தலைநின்று அவற்றைஎங்கள் வேங்கடா
சலக்குரிசில், வாய்த்த கண்போல்
சிறந்துஇமையில் காத்தருளும் சிறப்பனைத்தும்
எம் அளவில் செப்பற் பாற்றோ? 4

கொல்லாத விரதன்; இசைக் கோவேங்க
டாசலனார் குறிக்க, ஞாலத்து
எல்லார், "கம் பனும்சிவனும்" இன்தமிழ்,"வில்
லியும் சிவனும்" என்னும் நூல்கள்,
வல்லான்எம் தமிழ்க்கடல்ஆய்ந்து இனிதெடுத்து
வகுத்து எழுத வழுவாது இன்னேன்
சொல்லார்முன் வெளியிட்டு; தமிழ்க்கடலிற்
படிந்துபுகழ் தோய்ந்தான் அம்மா! 5

கலைமிளிரும் அழகப்பன் உடற்பயிற்சிக்
கல்லூரிக்கு அரங்கம் காண
குலமகளார் தங்கிழத்தி தம்பெயரால்
இருபதெட்டா யிரம் கொடுத்தான்
நலமலர மருத்துவநன் மனைக்கு இருபத்
தையாயி ரங்கள் நல்கி,
தலம்அரியக் குடிக்குமதே தொகைதந்தான்;
வேறுபல தருமம் செய்தான். 6

மூஇருபது ஆண்டகலும் முதுபெரிய
மரபின்இவன் மூப்புக் காணச்
சேவலுறும் கொடியன்; மணி விழாக்கண்டான்;
சென்னையில்;அச் சிறப்பைச் செப்பின்
நாவடங்கும்; நட்பினர்க்கும் உறவினர்க்கும்
பலகோடி உடுக்க நல்கிப்
பாவலர்கள் வாழ்த்தெடுப்பத் திருத்தலம்சேர்
பயணநூல் படைத்தான் வாழ்க! 7

எடுத்துரைக்க இயலாத இப்பெரியான்
இன்னும்பல் லாண்டு வாழ,
அடுத்துளவரும் வியந்துரைக்கத் திருப்பணிகள்
பலஆற்றி அறங்கள் பேண,
மடுத்தவிடக் கறைமிடற்று முழுமுதலின்
திருவருளை வழுத்து கின்றேம்!
கொடுத்தஅறக் கரம்வாழ்க! தமிழ் வாழ்க!
சிவம்வாழ்க! கொடையும் வாழ்க! 8

# A song of Five Capital letters

Mrs. Meena Arunachalam

Five Capital letters--Oh what could that be
An outstanding name called by all the authorities
A letter beginning in 'C' and ending in 'V'
It is! It is! that remarkable figure Mr.C.V.C.T.V.

On October 18th at Abbotsbury grounds
He celebrated his Shastiabdapurthi-this illustrious son
Relatives and friends came from far and near
To wish him the best for many more years
Sarees and Dhoties were given to one and all
At the Abbotsbury Grounds in that voracious hall
His daughter-in-law with the Veena entertained the guests of the day
With her song and her music the audience was thrilled and they stayed.

The next morning the function was carried on well
The priests were all singing and ringing the bells.
Every meal-Oh! I should say was better than the best
And there was a chaperon besides each and every guest.

Everything was grand right from the start
But when the picture was garlanded --I felt a pang in my heart
My eyes were filled with untold tears when I saw her
She Oh! She Raja Sir Annamalai's Stately daughter
Leaving her betterhalf two daughter and her only son
This humble lady cannot be forgotten by anyone.

A small para of the Rajah's son-in-law I must say
This kindhearted man always active and gay
Brave and Brilliant, gracious and galliant
This eminent man is the most predominant
Secrets with him Ha, Ha, Ha, are always frank
This former Director of the Indian Bank
Donations he has given to numberless people
And he has helped his relations and friends in every circle.

This mighty man the C.V.C.T's steeple
The Alagappa Colleges praise him for their progress
And they must thank him for his untiring services one-the-less,
Built he a gymnasium in the College premises
As a memory of his wife so loving and precious.

MAY GOD BLESS HIM FOR MANY MORE YEARS TO COME
MAY GOD GRANT HIM GOOD HEALTH
As that is his wealth
And with this I finish my song which I will always rum.

# The Amusing Entertainer

Mrs. Seetha Chidambaram.

C. V. CT.— Ah! if these words could only speak, they would tell many an interesting tale about the person behind them. Any way, let me try it. These very words make every heart flutter with joy and to seek the best medicine laughter. Who can dream of a better source than him!

Innocent darlings, sturdy youth, respectable maturity and the wise old eagerly surround him for he knows how to drop the pleasing word for all ages. Infants forget that mingling of inarticulate cries on seeing him, young kids love him for their fancies are materialised through him, youth adores him for he is their match-maker, maturity honours him for he is called in to make compromises and the old thank him for relieving them from distresses by giving expert advice at the spur of the moment.

A match to all ages, he is an optimist, a lover of life and amuse everyone by playing upon the merry health of the heart. Mirth and wit accompany his words—"I have studied up till second form half-yearly examination" is the ready answer when he is asked about his studies. But what powerful stores of knowledge are hidden behind this phrase. Experiance has equipped him with such high learning that today he holds a responsible place in the University. In a happy-go-lucky manner he performs his work with excellence.

His keen intelligence shines forth in his speeches. One may even wonder whether Mark Antony has come to life. With what ease he holds the mike and lets forth his oratorical splendours. The thunderous cheer of claps hardly seem to disturb him. There is not a single pause but a continuity as a waterfall and with his particular brand of English rhetoric reigns at its best.

Not only in rhetoric is he skilled but in music too. Having been a good violinist in his youth, still there is not a single moment when his fingers are quiet without keeping to the beat. He encourages musicians enthusiastically and while travelling in his stately caravan he may miss anything but never his transistor. Music to him is a soft rumble of thunder, a glorious sunset and it is this ecstacy that makes him see the world not as merely existing but with decorated forms, sounds and colours where that blissful music flows through them.

Can he be missed at a wedding? No; never; for he is the master of Ceremonies. If he is a relative of the brides party, he is a good friend of the bridegroom's side. There is hardly anyone whom he does not know or the proper way to put it—there is hardly anyone whe does not know him. There is nothing worth the wear of winning but laughter and the love of friends. On the wedding stage he is so busy and active that the priest has hardly any work to do. He creates fun and cheer amidst the crowd by making the bride and groom shakehands. How wonderful it would have been if we could have done the same on his Shastiabthapurthi !! but the furies of fate had too soon snapped that glory, that heavenly light.

Wit, humour and fun distinguish him as the "only Mappillai" (as he is affectionately called). Robert Browning's words come to my mind—"a happy man is a good man" and Mr. C. V. CT. is a living testimony. His happiness completely overpowers him and creates in him a natural tendency to radiate happiness. This kindly light brings a cheer to every heart and when we laugh with him and think he is all fun we can hear the angels laugh at the good he has done.

# மொழியின் ஓர் இயல்பு

டாக்டர் மு. வரதராசனுர்

தமிழ்ப்பேராசிரியர், சென்னைப் பல்கலைக் கழகம்.

தமிழ், மலையாளம், கன்னடம், தெலுங்கு ஆகிய நான்கு திராவிட மொழிகளுள் தமிழும் மலையாளமும் மிக நெருங்கிய தொடர்பு உடையவை; அவ்வாறே தெலுங்கும் கன்னடமும் நெருங்கிய தொடர்பு உடையவை. எடுத்துக் காட்டாக, ஞாயிற்றுக்கிழமை, திங்கட்கிழமை, செவ்வாய்க்கிழமை முதலிய ஏழு கிழமைப்பெயர்களும் தமிழிலும் மலையாளத்திலும் ஒரே வகையாக உள்ளன. தெலுங்கிலும் கன்னடத்திலும் வேறு வகைப்பெயர்கள்—ஆதிவாரம், சோமவாரம் முதலியன உள்ளன. ஆயினும் வாக்கிய அமைப்பு, பெயர்ச் சொல்லாக்கம், வினைச் சொற்றிரிபு முதலியவற்றில் நான்கு மொழிகளும் ஒரே வகையாக உள்ளன, ஆயிரக்கணக்கான பெயர் வினை அடிச்சொற்கள் பொதுவாக உள்ளன.

திங்கட்கிழமை என்று வழங்குவது தெலுங்கிலோ கன்னடத்திலோ இல்லை; சோமவாரம் என்று வழங்குவது தமிழிலோ மலையாளத்திலோ இல்லை. சோமன் என்ற சொல் தமிழ்ப்பொது மக்கள் அறிந்த சொல் அன்று; இலக்கியத்தில் மட்டும் சந்திரனைக் குறிக்கவரும் வடசொல்லாகச் சில இடங்களில் வழங்கப்படுதல் உண்டு; அவ்வாறே மலையாளத்திலும் மக்கள் அறிந்த சொல்லாக வழங்கவில்லை; இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளது. தமிழில் உள்ள திங்கள் என்ற சொல் தெலுங்கில் இல்லை; தெலுங்கு இலக்கியத்திலும் இல்லை. ஆயினும் கன்னடத்தில் மாதத்தைக் குறிக்கும் சொல்லாக வழங்குவது இந்தத் 'திங்கள்' என்ற சொல்லே ஆகும்.

மதி என்ற சொல்லின் அடிப்படையாகப் பிறந்ததே மாதம் என்பது. தமிழ் மக்களும் மலையாள மக்களும் பெருவழக்காக வழங்குவது இதனையே ஆகும். சந்திரனைக் குறிக்கும் தமிழ்ச் சொல்லாகிய திங்கள் என்பதே பழங்காலத்தில் மாதத்தைக்

குறிக்கவும் வழங்கியிருந்தது. இன்று கன்னடத்தில் மட்டுமே மாதத்தைக் குறிக்கத் திங்கள் என்ற சொல் வழங்குகிறது. கன்னடத்தில் 'மாதம்' என்ற சொல் கன்னடப் பொது மக்கள் அறியாததாக உள்ளது. ஒரே குடும்பத்து மொழிகளுள் இவ்வாறு வேறுபாடுகள் வளர்தல் இயல்பே ஆகும்.

தமிழ்ப்பொதுமக்கள் வானத்து வெண்கதிரைக் குறிக்க, நிலா' சந்திரன் என்ற இரு சொற்களையும் வழங்குகின்றனர்; ஆண்டின் பகுதியைக் குறிக்க மாதம் என்ற ஒரு சொல்லையும், கிழமையில் ஒன்றைக் குறிக்கத் திங்கள் என்ற ஒரு சொல்லையும் பயன் படுத்துகின்றனர். கற்றறிந்த தமிழருள் தமிழ்ப்பற்று உடையவர்கள் மூன்றினையும் திங்கள் என்ற ஒரு சொல்லாலேயே குறிப்பிட்டு எழுதி வருகின்றனர். 'வானத்தில் திங்கள் பரப்பிய தண்ணிலவு', 'கார்த்திகைத் திங்களில் விளக்கேற்றினர்', 'சென்ற திங்களன்று பள்ளி தொடங்கியது' என்று எழுதும் வழக்கத்தை அவர்களிடம் காணலாம். பழைய இலக்கியங்களிலும் இத்தகைய வழக்கமே இருத்தல் காணலாம்.

> "திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்........."
> (சிலப்பதிகாரம்-மங்கல வாழ்த்துப் பாடல்)
>
> "மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்"
> (ஆண்டாள்–திருப்பாவை)

என்று பழைய பாட்டுக்களில் வெண்கதிரைக் குறிக்கவும் மாதத்தைக் குறிக்கவும் திங்கள் என்னும் சொல்லே ஆளப் பட்டிருத்தல் காணலாம்.

அவ்வாறு இருந்த வழக்கு எவ்வாறு மாறியது? வானத்து வெண்கதிரைக் குறிக்க நிலா என்ற சொல் பயன்பட்டது. வாரத்திற்கு ஒருமுறை மாறி மாறி வரும் ஒருநாளைக் குறிக்கத் திங்கள் என்னும் சொல் மிகுதியாகத் தேவைப்பட்டது. அதனால் நிலா என்னும் சொல் வெண்கதிரைக் குறிக்கும் வழக்குப் பெருகியது. ஆண்டில் ஒரு பகுதியைத் திங்கள் என்னும் சொல் தனியே உதவும் தகுதியை இழந்தது. அவ்வாறு தனியே அதை மட்டும் குறிப்பதற்கு மாதம் என்னும் வட சொல் வந்து உதவியது. அதன் தனி உதவி பொதுமக்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

போர் என்ற சொல் அரசர்களிடையே மூளும் பகையால் விளைவதைக் குறித்து வந்தது. பழைய நூல்களில் அந்த ஒரு

சொல்லே வழங்கியிருக்கக் காண்கிறோம். வைக்கோல் முதலிய வற்றைக் குவித்த குவியல் அக்காலத்தில் போர்வு என்று குறிக்கப் பட்டிருந்தது. நெல் முதலியவற்றின் குவியலுக்கும் போர்வு என்ற சொல் வழங்கியது.

"கயலார் நாரை போர்வில் சேக்கும்" (ஐங்குறுநூறு, 9)
"விண்டு வன்ன வெண்ணல் போர்வு" (ஷை 58)

போர்வை என்ற சொல் அன்றும் இன்றும் மேலே போர்க்கப் படும் துணி முதலியவற்றைக் குறிக்க வழங்கி வருகிறது.

"வேய்வை காணு விருந்தின் போர்வை" (புறநானூறு:369)

இவ்வாறு, போர், போர்வு, போர்வை என்ற மூன்று சொற்கள் வெவ்வேறு பொருளில் வழங்கி வந்தன. போர்வை என்ற 'வை' விகுதி பெற்ற சொல் மட்டும் இன்றும் வழங்கி வருகிறது. போர், போர்வு என்ற இரு சொற்களுக்குள் குழப்பம் ஏற்பட்டது. நெற் போரினைப் போர் என்ற சொல்லால் வு-விகுதி இல்லாமல் வழங்கத் தொடங்கினர். உடனே குழப்பம் தொடங்கியது.

"போரிடை உறங்கும் அன்னம்"
(கம்பராமாயணம், நாட்டுப்படலம், 6)

பிறகு அரசர்களின் போர்களைவிட உழவர்கள் குவிக்கும் வைக்கோற்போர்களைக் குறிப்பிடும் தேவை மிகுதியாகிவிட்ட போது, போர் என்ற ஒரு சொல், அந்த இருபொருளில் ஒன்றைக் கைவிட நேர்ந்தது. யுத்தம் என்ற வட சொல் அரசர் களின் போரைக் குறிப்பதற்கு வந்து உதவியது; வைக்கோற் குவியலை மட்டும் தனியே குறிப்பதற்குப் போர் என்ற சொல் பயன் படுவதாயிற்று. இன்று போர் அந்த ஒரு பொருளை மட்டும் உணர்த்த, யுத்தம் சண்டை என்ற சொற்கள் நாட்டுப் பகைமை யால், வினையும் போரை உணர்த்தி வழங்கி வருகின்றன. போர், போர்வு என்ற வடிவ வேறுபாடுகள் தெளிவாக நின்றிருந்தால், அவை இருவேறு சொற்களாய் இருவேறு பொருளை உணர்த்த வழங்கியிருக்கும். போர் என்ற சொல் வேறு சொற்களோடு சேர்ந்தது. இன்றும் சண்டையை ஒட்டிய பொருள்களை உணர்த்தி வரும் உண்மையை, போராட்டம், அக்கப்போர் முதலிய சொற்களில் காணலாம்.

மீன் என்ற சொல், நீரில் பிறழ்ந்து மின்னும் கயல் வாளை முதலியவற்றையும் உணர்த்தி, வானத்தில் மின்னும் உடுக் களையும் உணர்த்தி வந்தது.

"முதலைப் போத்து முழுமீன் ஆரவும்" (ஐங்குறுநூறு, 5)
"பன்மீன் நடுவண் திங்கள் போலவும்" (மதுரைக்
காஞ்சி, 769)

இரண்டும் மின்னுவன; மின் என்னும் வேர்ச் சொல்லின் அடியாகப் பிறந்த சொற்களே இரண்டும்; ஆயினும், ஒரே வடிவினை உடைய சொற்கள், இருவேறு பொருள்களை உணர்த்துதல் இடர்ப்பாடாயிற்று. சொல்வடிவம் ஒன்றாயிருத்தலால், ஒரே பொருளை மட்டும் உணர்த்தும் உரிமைமேலோங்கவே மற்றொரு பொருளுக்கு வேறு சொல் தேவையாயிற்று. குளத்திலும் ஆற்றிலும் கடலிலும் உள்ள மீனை உணர்த்தும் சொல்லுக்குத் தேவை மிகுதியாயிற்று; ஆகவே வானில் மின்னும் பொருளை உணர்த்த நட்சத்திரம் என்னும் வடசொல் வந்து உதவியபோது, அது ஏற்றுக்கொள்ளப்பட்டது. விண் என்னும் அடை கொடுத்து, விண்மீன் என வழங்கச் செய்த முயற்சியும் வெற்றி பெறவில்லை. இன்று பொதுமக்கள் மீன் என்ற சொல்லை நீர் வாழ் உயிர்க்கு மட்டும் உரியதாக வழங்கி, வானில் மின்னுவதற்கு நட்சத்திரம் என்ற சொல்லை வழங்குகின்றனர். (விதி விலக்காக, மலைப்புறத்தே வாழும் பழந்தமிழர் சிலர் விண்மீனையும் மீன் என்ற சொல்லால் குறிக்கின்றனர். அவர்களின் சொல்லாட்சியும் அருகி வருகின்றது. தமிழ்ப் பற்று மிக்க அறிஞர் மட்டுமே விண்மீன் என்ற தொடரை விடாமல் வழங்கி வருகின்றனர்.)

நீர் என்ற சொல் தண்ணீரையும் குறிக்கின்றது; முன்னிலைப் பன்மையையும் (முன்நின்று பேசும் சிலரையோ ஒருவரையோ) குறிக்கின்றது. அன்று முதல் இன்றுவரையில் இலக்கியத்தில் இருவகைப் பொருளும் அச்சொல்லால் உணர்த்தப்பட்டு வருதலைக் காண்கிறோம். அதனால் பொதுமக்களின் பேச்சு வழக்கில், இரு பொருளையும் ஒரே சொல் வடிவம் உணர்த்தும் நிலைக்கு இடம் இல்லை. ஆகவே, நீர் என்ற சொல்லால் முன்னிலைப் பன்மையை மட்டும் உணர்த்தி, ஆற்றிலும் குளத்திலும் உள்ள நீரை உணர்த்த வேறு சொல்லைத் தேடினர். குளிர்ந்த நீரைக் குறிக்கும் தண்ணீர் என்ற தொடரைப் பயன்படுத்தினர். தண்ணீர் என்பது பொதுவாக நீருக்குப் பயன்படவே, குளிர்ந்த நீரை, குளிர்ந்த தண்ணீர் (அல்லது குளிர்ந்த நீர்) என்றும், சூடான நீரைச் சுடுதண்ணீர் அல்லது வெந்நீர் என்றும் குறிக்கின்றனர். பொதுவாக நீர் என்றால் முன்னிற்பவரை மட்டுமே குறிக்கும் நிலை வந்தது. தெலுங்கில் இன்னும் நீர்லு—நீளு என்ற சொல்லையே பயன்படுத்துகின்றனர்.

முன்னிலைப் பன்மைக்குத் தெலுங்கில் 'மீரு' என்ற வேறு சொல் வடிவம் இருத்தலால், தமிழில் ஏற்பட்ட குழப்பம் அங்கு ஏற்படவில்லை. குளிர்ந்த நீரைக் குறிப்பதற்கு மட்டுமே தண்ணீர்—தண்ணிரு என்ற சொல்லை மலையாளம், கன்னடம், தெலுங்கு ஆகிய மொழிகள் வழங்குகின்றன.

ஆகவே, சொற்பொருள் உணர்த்தும் முறையில் மொழிக்கு ஓர் இயல்பு இருத்தல் காணப்படுகின்றது. இலக்கிய மொழியில் ஒரே சொல் பல பொருள் உணர்த்தலாம்; ஒரே பொருளைப் பல சொற்களால் உணர்த்தலாம்.

ஆயின் மக்களின் பேச்சு மொழியில், ஒவ்வொரு பொருளும் தனக்கென்று ஒரு சொல் வடிவை—பிறிதொரு பொருளுக்குப் பங்கு இல்லாத வகையில்—பெற விரும்புகிறது. ஒரே சொல் வடிவிற்குப் பல பொருள்கள் அமையும்போது பல பொருளுக்கு ஏற்ப அந்தச் சொல் திரிந்து பல வடிவு பெறவேண்டும். (போர், போர்வை; நடப்பு, நடக்கை; நடை, நடத்தல் முதலியன போல); அல்லது ஒரு பொருளுக்கு உரியதாய்ப் பழைய சொல் நிற்க, மற்றப் பொருள் புதிய ஒரு சொல்லைத் தேடிக் கொள்ளுதல் வேண்டும். பேச்சு வழக்கில் இத்தகைய 'ஒருவன்—ஒருத்தி முறை' சொல்லுக்கும் பொருளுக்கும் இடையே அமைந்துள்ளது.

பிற மொழியிலிருந்து சொற்களைக் கடன் வாங்குவதற்குக் காரணங்கள் பல உண்டு. புதிய பொருள்கள் வந்தபோது அவற்றோடு புதிய சொற்கள் வந்து புகுதல் உண்டு. (சைக்கில், மோட்டார் முதலியன போல) பிற மொழியினர் ஆட்சித் துறையிலோ சமயத் துறையிலோ வாணிகம் முதலிய துறையிலோ ஓங்கியிருந்தால், அம் மொழிச் சொற்களைக் கடன் வாங்குதல் உண்டு. (இராணுவம், அருச்சனை, ரூபாய் முதலியன போல) ஒரு மொழி பேசுவோர் தாழ்வு மனப்பான்மையால், தம் மொழிச் சொற்களை வழங்குவதற்குத் தயங்கி, பிற மொழிச் சொற்கள் மீது மோகம் கொண்டு அவற்றை வழங்குதல் உண்டு. (சோறு என்ற சொல்லை விட்டுச் சாதம் என்றல் போல) இக் காரணங்களோடு மேலே குறித்த மொழியின் இயல்பும் ஒரு பொருளுக்கு ஒரு சொல் எனப் பேச்சு வழக்கில் உள்ள வரையறுத்த இயல்பும்—ஒன்று என்று கொள்வது பொருத்தம் ஆகும்.

# பெய்யெனப் பெய்யும் மழை போல்பவளா?

டாக்டர் மொ. அ. துரைஅரங்கசாமி

*தமிழ்ப் பேராசிரியர், மதுரைப் பல்கலைக் கழகம்*

உரிமை எய்திவிட்ட பிறகு, நம் தமிழ்நாட்டில், தமிழ்மொழி அடைந்துவரும் வளர்ச்சியும் சிறப்பும் அளவிடற்கு அரியனவாகும். உரிமைக்கு முன்பு, படித்தவர் தொகை நூற்றுக்கு ஏழு அல்லது எட்டேயாகும். ஆனல் இன்ருே, தமிழ் மொழியைத் படிக்கத் தெரியாதவர் நம் நாட்டில் ஒருவர்கூட இல்லை எனலாம். இளமையிற் கல்வி கற்கும்பேறு பெருதவர்கூட முதியோர் கல்விக் கூடங்களிற் சேர்ந்தோ, தாமாகவே முயன்ருே தமிழ் மொழியைப் படிக்கும் ஆற்றல் பெற்றுத் திகழ்கின்றனர். அம் மட்டோ? நாள்தோறும் ஏதாவதொரு நாள் வெளியீட்டைப் படிக்கவும், அதில் வந்துள்ள பொருள்களைப் பற்றித் தடை விடை செய்து பேசவும் எல்லோரும் முன்வந்துள்ளனர். இவற்றையெல்லாம் பார்க்கும்போது தமிழறிஞர்க்கெல்லாம் மட்டற்ற மகிழ்ச்சி உண்டாகும் என்பது கூருமலே விளங்கும்.

ஆனல் ஒன்று! தமிழை எழுத்துக் கூட்டிப் படிக்கத் தெரிந்தவுடனேயே ஆராய்ச்சித் துறையில் குதிக்கின்றனர். உரிமை எய்திவிட்ட நாட்டில் வாழும் அவரைத் தடுக்க வல்லவர் யார்? படிப்பதையும் கேட்பதையும் ஆராய்ச்சிக்கண்கொண்டு நோக்கி ஏற்றுக்கொள்ளவேண்டுமே யொழிய அப்படியே ஏற்றுக் கொள்ளல் ஆகாது என்பது சான்ருேர்தம் அறிவுரையாகும் என்பது உண்மையே. ஆனல் ஆராய்ச்சிக்கண் பெறுவதற்குரிய அடிப்படையே இல்லாமலும், ஆராயும் துறைக்கு வகுத்த நெறிமுறைகளைக் கருத்தில் கொள்ளாமலும் யார் வேண்டுமானுலும் நுனிப்புல் மேய்தலாக எதையும் ஆராய்ச்சிமுடிபாகக் கூறிவிடலாம் என்று எண்ணுவது பொருந்துமா? முறையாகக் கற்றுப் புலமை எய்தியவரும் கூட ஏதாவது புத்துரை கூறுவது தமக்குப் பெருமை தருவதாகும் என்று கருதித் தம் மனம் போனவாறு கூற முற்படுகின்றனர். அவ்வாறு அவர் முற்படுவது பொருந்துமா என்பதை மற்றவர் எண்ணிப்பார்க்காமல் அவர் கூறும் புத்துரையைத் தாமும் எடுத்துக் கூற முற்படுகின்றனர்.

இம்முறை ஒரு தொத்துநோய் போல் மிகுதியாகப் பரவி வருகின்றது. இந்த நோய்க்கு அனைவரும் ஆளாவது தகுதியாகுமா? இதைத் தடுப்பதற்கு ஏதாவது வழியுண்டா?

இன்று எல்லார் நாவிலும் எளிதாகத் தவழ்ந்து நிற்பது திருக்குறள் என்றால், அதை எவரும் மறுக்க முற்படார். நம் தமிழ்நாட்டில் மட்டுமல்லாமல் நம் பாரதநாட்டின் எல்லாப் பகுதிகளிலும், அயல்நாடுகள் பெரும்பான்மையானவற்றிலும் நம் அரும் பெருந் திருக்குறள் பரவிப்படர்ந்து தனிச்சிறப்புப் பெற்றிலங்குகின்றது. இதற்குச் சிறந்தோர் பதின்மர் பண்டைக் காலத்திலேயே சிறந்த உரை கூறிச் சென்றுள்ளனர். அரும்பாடு பட்டுப் பல்லாண்டுகள் பயின்ற நூற்கல்வியறிவுடன் தம் மதி நுட்பத்தையும் துணையாகக் கொண்டு திருக்குறளைப் பலகால் முழுதும் ஓதிப் பயின்ற பின்னரே அன்னோர் உரை எழுதிச் சென்றுள்ளனர் என்பது அவர்தம் உரையைப் பயில்வார்க்கு நன்கு தெளிவாகும். அவ்வாறு எழுதிய அவர்தம் உரையுள்ளும் பரிமேலழகர் உரையே மிகமிகச் சிறந்ததாகும் என்பது சான்றோர் துணிபு.

அப்பதின்மரும் உரைத்த உரையைப் பயின்று அவர் தம்முள் பரிமேலழகர் உரைத்த உரையைச் சிறப்பாகப் பயின்று பின்னர் வேண்டுமானால் ஒருவர் திருக்குறளைப்பற்றி ஆராயப்புகலாம். அவ்வாறு பயின்றவர் தாம் புதுவதாக ஆராய்வதற்கு ஒன்றுமில்லை என்ற முடிவிற்கே பெரும்பான்மையாக வருவர். அறியாமை அடிப்படையாகத் தவறு ஏற்படுதல் எவர்க்கும் இயல்பே யாதலால் அவர்தம் உரையுள்ளும் தவறு இருக்கலாம் என்றாலும் அது மிகமிகச் சிறுபான்மையாகவே இருக்கும். காலம், சூழ்நிலை இன்ன பிற காரணமாகச் சிறுபான்மை பிறழ்ச்சியான கூற்றுக்களும் அன்னார் உரையிற் காணப்படலாம். அவையெல்லாம் சான்றோரால் எளிதில் திருத்தி யமைத்துக் கொள்ளப்படும். எனவே, புத்தம் புதுவதாக, அப் பழையவுரைகாரர் கூறியதற்கு வேறாகக் கூற ஒன்றுமிராதென்றது மிகையன்றாம்.

இஃது இவ்வாறாகவும், இன்று, நூல் முழுதும் ஒருகால் கூடப்பயிலாமலும், பண்டையோர் உரையைக் கண்ணெடுத்தும் பார்க்காமலும் பார்த்தாலும் விளங்கிக்கொள்ளமாட்டாமலும், நூலைத் திறந்தவுடனே தம் கண்ணெதிர்ப்படும் ஒரு குறளை எடுத்துக்கொண்டு அதை ஆராய முற்பட்டுவிடுகின்றனர். இவ்வாறு ஆராய்பவர்தம் ஆராய்ச்சி எவ்வாறிருக்கும் என்பது

கூருமலே விளங்கும். புத்துரை காண்பதுதான் அறிவுடை யோர்க்குச் சிறப்பாகும் என்ற கருத்து எப்படியோ வேரூன்றி விட்ட இக்காலத்தில் கல்வி கேள்விகளால் சிறந்த அறிவுடை யோரும் இந்நெறியிற் செல்ல விழைகின்றனர் என்ருல் அவர் கூறும் புத்துரையின் இயல்பை எடுத்துக்காட்டி அவரையும் அவரொடு பிறரையும் நன்னெறிப்படுத்தல் தக்கதேயன்ரே!

அறிவுடையோரும் மதிமருண்டு கூறும் புத்துரைக்கு எடுத்துக்காட்டுக்கள் எத்தனையோ தரலாம். பானைச்சோற்றுக்கு ஒருசோறு பதம் என்பதுபோல் ஈண்டு ஓர் எடுத்துக்காட்டை மட்டும் நோக்குவோம்.

தெய்வப்புலமைத் திருவள்ளுவர், அறத்துப்பால் இல்லற வியலின் இரண்டாம் அதிகாரத்தில், வாழ்க்கைத்துணைநலம் பற்றிப் பத்துக் குறள் கூறியுள்ளார்.

அவற்றுள் ஐந்தாம் குறளாக நிற்பது,

> ‘தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
> பெய்யெனப் பெய்யும் மழை”.

என்பதாகும்.

பல்லாற்ருனும் பலகாலும் நுணுகி நுணுகிச் சிந்தித்த பிறகே இதன் பொருளை ஓராற்ருன் உரைலாம். இதன் முழுப்பொருளை யும் தெளிய உணர்வதற்கு நூலறிவு, மதிநலம் இவற்றுடன் சமய நூலறிவும், ஓர்த்து உள்ளம் உள்ளது உணரும் பயிற்சியும் இன்றியமையாது வேண்டப்படும். இவையெல்லாம் உடையவர் பரிமேலழகர் கூறியுள்ள உரையே சிறந்த உரையாகும் என்று பாராட்டி அமைவர். மற்றவரோ தம் புத்துரையைக் கூறித் தம் அறியாமையை வெளிப்படுப்பர்

இத் திருக்குறளுக்கு, “நூலிற் பரித்த வுரையெல்லாம் பரிமேலழகன் தெரித்தவுரை யாமோ தெளி” என்ற சிறப்புப் பெற்ற பரிமேலழகர் உரை யாது?

“பிறதெய்வம் தொழாது தன் தெய்வமாகிய கொழுநனைத் தொழாநின்று துயிலெழுவாள் பெய்யென்று சொல்ல மழை பெய்யும்”, என்பது இதற்குப் பரிமேலழகர் கூறியுள்ள உரையாகும்.

மேலும் அவர், “தெய்வம் தொழுதற்கு மனம் தெளிவது துயிலெழுங் காலத்த தாகலின் தொழுதெழுவாள் என்ருர்.

தொழா நின்றென்பது தொழுதெனத் திரிந்து நின்றது. தெய்வந் தான் ஏவல் செய்யும் என்பதாம். இதனுல் கற்புடைய வளது ஆற்றல் கூறப்பட்டது" என்று கூறியிருத்தலே நோக்குக.

மனைவி தன் கணவனையே தன் வழிபாட்டுத் தெய்வமாகக் கொண்டொழுகுவாள் என்பதும், அவனுக்கு வேருகப் பிறதெய்வம் கொள்ளாள் என்பதும், அவனையே அல்லும் பகலும் இடைவிடாமல் வழிபடுவாள் என்பதும், அவன் வழிபாட்டோடேயே உறங்கச் செல்வாள் என்பதும், இடைவிடாது வழிபடும் அவ்வழிபாட்டின் முதிர்ச்சியால் கணவனையே தொழுது கொண்டு எழுவாள் என்பதும், தொழுது கொண்டு எழுபவள் அப்போது சிறப்பாக அவனுக்கு வழிபாடு ஆற்றுவாள் என்பதும், இவ்வாற்ருல் தன் கணவனுகிய தெய்வத்தை இடைவிடாமல் வழிபடும் ஒருமை மனம் உடையவள் ஆதலினுல் அவள் தன் ஒருமை மனத்தால் கூறியது கூறியவாறே நடைபெறும் என்பதும், தெய்வங்களெல்லாம் ஒருமை மனம் உடைய அவள் ஏவல் வழி நின்று செயலாற்றும் என்பதும், எனவே அவள் மழைத்தெய்வத்தை நோக்கி மழைபெய் என்று கட்டளையிட மழைபெய்யும் என்பதும் இக்குறளின்கண் அமைந்துள்ள திரண்ட பொருளாகும்.

ஒருமை மனத்தால் செயற்கரிய செயலெல்லாம் செய்யலாம் என்பதும், ஒருமை மனத்தோடு கடவுள் வழிபாடு செய்தால் அவ்வாறு செய்பவர் சொன்னது சொன்னவாறு நிகழும் என்பதும் உளநூலும் கடவுள் நூலாகிய சமய நூலும் ஓதியுணர்ந்தவர் தம் மெய்யுணர்வால் கண்ட உண்மைகளாகும். இத்தகைய மெய்யுணர்வு இல்லாதவர்க்கோ, அவர் கூறுவதில் நம்பிக்கையில்லாதவர்க்கோ இக்குறளுக்குப் பரிமேலழகர் கூறும் பொருள் எவ்வாறு உணரவல்லதாகும்?

இத்தெய்வத் திருக்குறளே எடுத்துக்கொண்டு ஆராயும் புத்துரைகாரர்கள் முதற்கண், "கொழுநன் தொழுது எழுவாள்" என்று திருவள்ளுவர் கூறியிருப்பது எங்ஙனம் பொருந்தும் என்று திருவள்ளுவர் மீதே ஒரு பாய்ச்சல் பாய்வர். "துயிலுணர்ந்து எழுந்த பிறகன்ருே தொழுதல் கூடும்? தொழுதுபின் துயிலுணர்வாள் என்பதுபோல அன்ருே திருவள்ளுவர் கூறியுள்ளார்! இக்கூற்று எவ்வாறு பொருந்துவதாகும்?" என்று புத்துரைகாரர் கேட்கும் கேள்வி பொருந்துவதுபோலவே எவர்க்கும் தோன்றும். தொழுதுபின் எழுதல் எங்ஙனம் என்பதை உணர்தற்கு அனுபவம் வேண்டும். எந்த நினைவோடு துயிலுள் ஆழ்கின்றனரோ அந்த நினைவோடேயே எழுவர். துயிலுக்குச்

செல்லும்போது கணவனையே தொழுத தொழுகை நினைவு நெஞ்சத்திலேயே நிலைபெற்று நிற்கிறது. எனவே தொழுகை நினைவு காலத்தால் முந்தியதாகும். எழுகை நினைவு அதன் பின்னரே நிகழ்வதாகும்.

எண்ணம் முன்னும் அதன் விளைவாகிய செயல் பின்னும் நிகழ்வனவாகும். எனவே, காலத்தால் முந்திய தொழுகை நினைவிற் செயலாகிய தொழுதல் காலத்தால் முந்தியும், எழுகை நினைவின் செயலாகிய எழுதல் பிந்தியும் நிகழ்தலே முறையா தலால் திருவள்ளுவர் 'தொழுதெழுவாள்' என்று உணர்ந்தே கூறினர் எனலாம். நுட்பமாகிய இத்தொழுதெழலைத் தருக்க நூலுணர்வுடையார் எளிதில் உணரவல்லவர் ஆவர்.

தொழுதல் முன்னும் எழுதல் பின்னும் நிகழ்வனவேனும், எது முன், எது பின் என்று தோன்ருதபடி விரைவில் இரண்டும் நிகழ்தலால் இரண்டும் ஒரே காலத்தில் நிகழ்வனபோலத் தோன்றும் என்று மக்களுடைய நாடோறும் நிகழும் நிகழ்ச்சியை முன்னிட்டு விளக்கப் புகுந்த பரிமேலழகர் தொழா நின்று என்பது தொழுதெனத் திரிந்து நின்றது என இலக்கணக் குறிப்பும் தந்து உணர்த்தலாயினர்.

எழுந்து தானே தொழவேண்டும் என்று பிடிவாதம் பிடித் தாலும் எழுந்தவுடன் தோன்றும் முதல் நினைவு தொழுகையும் அதன் விளைவு தொழுதலும் ஆதலால் அப்போதும் இடைவிடா மல்கணவனைத் தொழும் ஒருமை எண்ணம் அவள் உடையளாதலை அறிவித்தலால், தொழுதெழுவாள் என்பதை விகுதி பிரித்துக் கூட்டி எழுந்துதொழுவாள் என்றே அப்பிடிவாத முடையார் கொள்ளட்டும். அப்போதும் இழுக்கொன்றும் வந்து விடாது. இது நிற்க.

இனிப்புத்துரைகாரர் எழுப்பும் மற்ருேர் ஐயம் கொழுநன் தொழுது எழுவாள் பெய்யென மழைபெய்யும் என்பது எவ்வாறு பொருந்தும் என்பது.

பழைய பண்பாட்டைப் பின்பற்றிக் கொழுநனைத் தொழு தெழும் மனைவிமார்கள் சிலராதல் இக்காலத்திலும் இருப்பார்கள் அல்லரோ? மழை பெய்யாத பஞ்சகாலம் அடிக்கடி நாட்டில் ஏற்படுகின்றதே! கொழுநனைத் தொழுதெழுவார் பெய்யென மழை பெய்யும் என்பது உண்மையாயின், அன்னேர் தம் வாய்திறந்து, "மழையே பெய்" என்று சொல்லட்டுமே! மழை பெய்யட்டுமே!

ஊருக்கு ஒருவராதல், நாட்டுக்கு ஒருவராதல், அன்னோர் இல்லாமல் இருக்க முடியாதே! அங்ஙனமாயின் வறண்ட வறட்சிக் காலத்தில் அன்னோர் தம் ஆற்றல் உணர்ந்து ஏன் சொல்லவில்லை? அதனால் ஏன் மழைபெய்யவில்லை? என்று அன்னோர் மடக்கி மடக்கிக் கேள்வி கேட்கலாம்.

எனவே, கொழுநன் தொழுது எழுவாள் பெய்யென மழை பெய்யும் என்று பொருள்கூற முற்படாமல் பெய்யெனப் பெய்யும் மழைபோல்வாள் என்று பொருள்கூற முற்பட வேண்டும். அதுவே சிறந்த பொருத்தமான உரையுமாகும் என்று அவர் கூறுவர்.

வறண்ட வறட்சிக் காலத்தில் மழை பெய் என்று நாம் வேண்ட உடனே மழை பெய்யுமானால் அஃது எவ்வாறு சிறப்புடையதாக மதித்துப் பாராட்டப்படுமோ அதுபோல் கொழுநனைத் தொழுது எழுவாள் சிறப்புடையவளாக மதித்துப் பாராட்டப் பெறுவாள் என்று பொருளை விரித்துக்கொள்ளலாம் என்றும் அவர் கூறுவர். இவ்வாறு உரை கூறிக்கொள்வதால் எந்தக் கற்புடைய மாதர்க்கும் இழுக்கு ஏற்படாது என்பது அவர்தம் கருத்தாகும். கற்புடையவளாகக் கருதப்பட்ட ஒருத்தியை வலுக்கட்டாயம் செய்து "மழை பெய்" என்று வாய் திறந்து சொல்லவைத்த காலையில் அவளும் அவ்வாறே சொல்ல மழை பெய்யவில்லை என்றால் அவளுடைய கற்புடைமையில் ஐயம் ஏற்பட அவளுக்கு இழுக்கு ஏற்படுமன்றோ! இத்தகைய இழுக்கைப் போக்க வேண்டியே "பெய்யும் மழைபோல்வாள்" என்று உரை கூறுவது தக்கதாம் என அவர் கூறுவர்.

இவ்வாறு அவர் கூறும் புத்துரையைப் பேராசிரியர்களும் மதித்துப் பாராட்டவும், அவரைப் பின்பற்றித் தாமும் அவ்வுரை கூறவும் யாம் கேட்டிருக்கிறோம்.

ஆனால் அவர் கூறும் புத்துரையில், குளிக்கப் போய்ச் சேற்றைப் பூசிக்கொள்ளும் தன்மை இருத்தலை அவர் அறியார் ஆயினமையைக் காணாதது ஏனோ தெரியவில்லை.

"பெய்யென வேண்டுமிடத்துப் பெய்யும் மழை போல்வாள்" என்று கூறும் உரையிலும், ஒருவர் பெய் என வேண்டுதலும் அவ்வாறு வேண்டியவிடத்து மழை பெய்தலும் நிகழ வேண்டியுள்ளன. யாதோராற்றலும் இல்லாத ஒருவர் மழை பெய் என்ற

வுடன் மழை பெய்ய வேண்டும் என்று கருதுவாராயின். கணவனையே தெய்வமாகக் கொண்டொழுகும் ஒருமை மனம் பெற்ற பேராற்றலுடையவள் மழை பெய் என்றால் பெய்யுமா பெய்யாதா என்று ஐயுறாமல், பெய்தே தீரும் என்று ஏன் கொள்ளலாகாது?

எனவே, பெய்யென மழை பெய்யும் என்று கூறுவது பொருத்தமேயன்றிப் பெய்யெனப் பெய்யும் மழைபோல்வாள் என்று கூறுவது பொருத்தமில்லை எனலாமன்றோ!

திருவள்ளுவரோடு சமகாலத்தில் வாழ்ந்தவர் இதுபற்றி ஏதாவது தெரிவித்திருக்கிறார் என்பதறிந்தால் உண்மையுரையை முடிவு செய்வது இன்னும் எளிதாகும்.

திருவள்ளுவர் காலத்திற்குச் சற்று முன்பின்னான சமகாலத்து நூல்களாகச் சங்க இலக்கியங்களையும் சிலப்பதிகார மணிமேகலைகளையும் நாம் கொள்ளலாம்.

அவற்றுள் மணிமேகலையின் 22-ஆம் காதையான சிறைசெய் காதையில், மேற்காட்டிய திருக்குறள் முழுதையும் அப்படியே எடுத்தாண்டிருத்தலை நாம் காணலாம்.

> "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
> பெய்யெனப் பெய்யும் பெருமழை என்றவப்
> பொய்யில் புலவன் பொருளுரை தேறாய்"

என்று வரும் இவ்வடிகளில், திருவள்ளுவர் கூறிய "பெய்யெனப் பெய்யும் மழை" என்பதற்குமேல், "பெய்யெனப் பெய்யும் பெருமழை" என்று கூறப்பட்டிருத்தலைக் காணலாம். ஈண்டும் "பெய்யெனப் பெய்யும் பெருமழை போல்வாள்" என்று பொருள் விரித்துக்கொள்ளலாமே என்று புத்துரைகாரர் கூற முன் வரலாம். ஆம்! மேலும் தொடர்ந்து சில அடிகள் இவ்வடிகளின் கருத்தை ஒட்டிக் கூறப்படாதிருப்பின் புத்துரைகாரர் கருத்தே பொருத்தமாம் என்று முடிவு செய்யவே நேரும். ஆனால் மணிமேகலையோ தொடர்ந்து,

> "பிசியும் நொடியும் பிறர்வாய்க்கேட்டு
> விசிபிணி முழவின் விழாக்கோள் விரும்பிக்
> கடவுட் பேணல் கடவியை யாகலின்
> மடவரல் ஏவ மழையும் பெய்யாது

நிறையுடைப் பெண்டிர் தம்மே போலப்
பிறர் நெஞ்சு சுடூஉம் பெற்றியு மில்லை
ஆங்கவை ஒழிகுவை யாயின் ஆயிழை
ஓங்கிரு வானத்து மழையும்நின் மொழியது''

என்ற அடிகளைக் கூறுநிற்கின்றது.

"பிசியும் நொடியும் பிறரிடம் கேட்டுப் பொழுதுபோக்கி நின்கணவனையே தெய்வமாகத் தொழுதெழாது விழாக்கோள் விரும்பிப் பிறகடவுளை வழிபடுதலைக் கடப்பாடாக உடையை நீ ஆதலினாலே, மடப்பம் பொருந்திய மங்கையே, நீ ஏவ மழையும் பெய்யாது. நிறையுடைப்பெண்டிர் தம்மை நினைத்தவர் நெஞ்சைச் சுடுதல் போல, நீ நின்னை நினைத்தவன் நெஞ்சைச் சுடும் பெற்றியை ஆகாது போனாய். இனியாதல் அவற்றை விட்டு ஒழிந்து நின் கணவன் ஒருவனையே தெய்வமாகக் கொண்டு ஒழுகுவாயாயின் உயர்ந்த பெரிய வானத்தில் நின்று பெய்யும் மழையும் நீ ஏவிய வழிப்பெய்யும் தன்மையதாகும்,'' என்பது இவ்வடிகளின் திரண்ட பொருளாம்.

இதனால் மணிமேகலைக் காப்பியம், கற்புடைமகளிர் மழை பெய் என்றவிடத்து மழை பெய்யும் என்பதுணர்த்தும் கருத்தினரேயாதல் வெளிப்படை. எனவே, திருவள்ளுவர் கருத்து அதுவேயாகும். அதையே பரிமேலழகர் உணர்த்தியுள்ளார் எனலாமன்றோ!

இனிச் சிலப்பதிகாரம் மதுரைக் காண்டத் திறுதியில்,

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுவாளைத்
தெய்வந் தொழுந்தகைமை திண்ணிதால்—தெய்வமாய்
மண்ணக மாதர்க் கணியாய கண்ணகி
விண்ணகமா தர்க்கு விருந்து''

என்ற ஒருவெண்பா இருத்தலை நாம் காணலாம். அவ்வெண்பாவில் நாம் எடுத்துக்கொண்ட குறளும் அதன் உண்மைப் பொருளும் விரவிநிற்றலைக் காண்கின்றோமன்றோ!

"இவ் உலகத்தில் கற்புடை மகளிர்க்கு அணிசெய்வாளாகிய கண்ணகி தெய்வமாய், வானின்கண் உறையும் தெய்வ மகளிர்க்கு விருந்தாயினாள். ஆதலால் வேறு தெய்வம் வணங்காளாய்த் தன் கணவனையே தெய்வமாக வணங்குவாளைத் தெய்வமும் வணங்கும் தன்மையை உடைத்தாம்'' என்பது இதன் திரண்ட பொருளாகும்.

பரிமேலழகர் கூறிய கருத்தே இவ் வெண்பாவிலும் இருத்தலை நாம் காணலாம். "தெய்வம் தொழும் தகைமை திண்ணிதால்," என்பதால், தெய்வம் தொழுது ஏவல் செய்யும் என்பது பெறப் படும். பரிமேலழகர், "தெய்வந்தான் ஏவல் செய்யும் என்பதாம்", என்று குறித்திருத்தல் காண்க. ஏவல் இட்ட வழி மழைத் தெய்வம் மழைதரும் என்பது சொல்லாமலே விளங்குமன்றோ! எனவே, கற்புடையாள் மழை பெய் என்றவுடன் மழை பெய்யும் என்பதே சிலப்பதிகாரத்தில் கருத்தாதலும் பெறப்படும்.

இவ்விரண்டு நூல்களும் திருக்குறளுக்குக் காலத்தால் சற்றுப் பிந்திய நூல்களாகும். திருக்குறளோ சங்க காலத்தைச் சார்ந்தது அல்லது அதற்கு முந்தியது எனலாம். அப்படியானால் சங்க நூல்களுள் பரிமேலழகர் உரைக்கு அரண் செய்வதான இடம் உண்டோ என்று கேட்கலாம்.

கலித்தொகையின் இரண்டாம் பகுதியான குறிஞ்சித் திணைப் பாடல்களுள் மூன்றும் பாடல் ஒன்றே போதும் பரிமேலழகர் உரைக் கருத்திற்கு அரணுவனவாம் சங்க நூல்கள் என்பதை வலியுறுத்தற்கு.

அகத்திணைப் பொருள் பற்றிய பாடல்களெல்லாம் கலிப்பா வாகவோ, பரிபாடலாகவோ இருத்தல் வேண்டும் என்பது தொல்காப்பியர் வகுத்த ஆணை. கலித்தொகை அவர் ஆணையின் வழி அமைந்ததாதலின் சங்க நூல்களுள் அதனைத் தலையாய தாகவே கொள்ளலாம். அங்ஙனமாகவும் புராணக் கதைகள் அதன்கண் மிகுந்திருத்தல் காரணமாக அதைச் சங்க நூல்களுள் காலத்தால் பிந்தியதென்றும், சங்க நூல் அன்று என்றும் முறையே கருதுவாரும் உளர். ஆனால் புராணக் கதைகள் ஏனைய சங்க நூல்களிலும் உண்டு. புராணக் கதைகள் சில இருந்தாலும் பல இருந்தாலும் ஒன்றுதான். கலப்பாலில் ஒரு துளி நஞ்சு இருந்தாலும் ஒரு படி நஞ்சு .இருந்தாலும் அப் பால் நஞ்சு கலந்ததுதானே! ஆகவே புராணக் கதைகளின் கலப்பு மிகுதியால் சங்கநூல் அன்று கலித்தொகை என்று கூறுவது பொருந்தாது.

குறிஞ்சிக் கலி ஈடெடுப்பற்ற கபிலர் பாடிய பகுதியாகும். கலிப்பாவெல்லாம் ஒருவகைச் சந்தத்தோடு இயைவன ஆதலாலும், தளை முதலிய இலக்கண வரம்பு உடையன ஆதலாலும் ஒரே வகையான இசையமைப்புடையன போலவே

தோன்றும். அது காரணமாக நல்லந்துவனார் என்ற ஒருவரே கலிப்பா முழுதும் பாடினார் என்று கூறுவாரும் உளர். இவ்வாறு கூறுவதும் பொருந்தாது. கபிலர் பாடிய ஏனைய பாடல்களோடு குறிஞ்சிக் கலிப் பாடல்களை ஒப்பிட்டுப் பார்த்தால் குறிஞ்சிக் கலி கபிலர் பாடிய பகுதியே என்பது தெற்றென விளங்கும்.

எனவே, ஒப்புயர்வற்ற கபிலர் பரிமேலழகர் உரைக்கருத்திற்கு அரணான கருத்தைச் சொல்லியுள்ளார் என்றால் திருவள்ளுவர் கருத்தும் அஃதே யாகும் என்று துணிந்து கூறலாம் அன்றோ!

கபிலர் கூறியிருப்பது யாது? குறிஞ்சிக் கலி கூறுவது யாது? தோழி செவிலிக்கு அறத்தோடு நிற்குங் கருத்துப் பாட்டின் (கலி 39) முதற்கண்ணேயே வருகிறது. தோழி செவிலியிடம் கூறுகிறாள்.

"எம்மோடு தலைவி புனலாடிக் கொண்டிருந்தாள்; திடீரென்று புனல் பெருகி அவளைத் தன்னோடு இழுத்துச் சென்றது. அப்போது ஒருவன் விரைந்து புனலில் பாய்ந்து அவளை மார்புறத் தழுவி எடுத்துக் கொணர்ந்து கரை சேர்த்தான். அவன் மார்பைத் தன் மார்பு புணர்ந்தது எனபது கண்ட தலைவி அவனையே தன் கணவனாக முடிவு செய்து கற்புக் கடன் பூண்டு விட்டாள். பெற்றார் அவளுக்கு வேற்று வரைவு கருதுதல் தவறாகும். கற்பில் உறுதி பெற்று நிற்கும் அவள் அருமழை தரல் வேண்டின் தருகிற்கும் பெருமையளாகத் திகழ்கின்றபடியால், "கொண்டால் அவனையே கணவனாகக் கொள்வாள்; இல்லையேல் இறந்துபடுவாள்", என்றெல்லாம் பொருள் செய்யுமாறு அவள் கூறியுள்ளமை காணலாம்.

கலித்தொகைப் பாடலின் அடிகளையே ஈண்டு நினைவு கூறலாம்.

> "காமர் கடும்புனல் கலந்தெம்மோடு ஆடுவாள்
> தாமரைக்கண் புதைத்தஞ்சித் தளர்ந்ததனோடு
> ஒழுகலான்
> நீள்நாக நறுந்தண்தார் தயங்கப்பாய்ந்து அருளினால்
> பூண் ஆகம் உறத்தழீஇப் போதந்தான் அகன்அகலம்
> வருமுலை புணர்ந்தன என்பதனால் என்தோழி
> அருமழை தரல்வேண்டின் தருகிற்கும் பெருமையளே."

இதன்கண் அமைந்த இறுதியடியைப் பல்கால் ஓதி இன்புறுக.

இதுகாறும் கூறியவாற்ருல் ஒருமை மனம் பெற்ருர் தெய்வத்தை ஏவல் கொள்ளும் ஆற்றல் உடையவர் ஆவர் என்பதும், கணவனைத் தெய்வமாகக் கொண்டொழுகும் ஒருமை மனம் பெற்ற கற்புடை மகளிர் தெய்வத்தை ஏவல் கொள்ளும் ஆற்றல் உடையவராதலின், மழை பெய்யென்ருல் பெய்யும் என்பதும், பரிமேலழகர் உணர்ந்து கூறிய அக்கருத்தே திருவள்ளுவர் கருத்தாம் என்பதும், அக்கருத்துக்கு அரண் செய்வனவான கருத்துக்கள் திருவள்ளுவர் காலத்துச் சமமான காலத்தும் அண்மைக் காலத்தும் எழுந்த நூல்களில் அமைந்திருத்தலால் அக்கருத்தே உண்மைக் கருத்தாம் என்பதும், அக்கருத்துக்கு வேருகத் தாந்தோன்றியாகப் புதுமை உரை கூறுவார் கருத்துப் பொருந்தா என்பதும், புதுமையுரை கூறுவார் இங்ஙனம் பல்லாற்ருனும் ஆராயாது தம் விருப்பம்போல் உரை கூறுவது அடாது என்பதும், இக்காலத்தும் கணவனைத் தெய்வமாகத் தொழுதெழும் கற்புடை மகளிர் தாமே முன்வந்து மழை பெய்ய வேண்டும் என்று கூறினுல் மழை பெய்யும் என்பதும், அஃது ஆகாத செயலன்று என்பதும் பிறவும் பெறலாம். எனவே, கற்புடை மகள் பெய் என மழை பெய்யும் என்று கூறுவதே பொருத்தமாம்; பெய்யெனப் பெய்யும் மழைபோல்வாள் என்று கூறுவது பொருத்தமன்ரும் என்று இப்போது துணிந்து கூறலாமன்ருே!

# Industrialization In Madras State

K. S. Sonachalam,

*(Professor & Head of the Department of Economics, Annamalai University*

Industrial development in Madras State in the sense of application of modern technology to processing and manufacturing industries is of extremely recent origin. The tempo of industrialization gained distinct momentum only in the early 1930s almost coinciding with the commissioning of the earliest of the hydel projects, the Glen Morgan, which was a pilot to the well-known Pykara Project.

## INDUSTRIALIZATION UPTO 1930

2. The annals of industrialization in the nineteenth century and upto 1930 in Madras State are indeed short and can be briefly told. More than a century ago, in 1845, Messrs. Parry and Company, the pioneer and still one of the leading entrepreneurial firms in Madras State, set up a sugar factory at Nellikuppam, about 40 miles north of Annamalai University. Another solitary instance of a textile factory, run by by water power which redounds to the credit of of Messrs. A. & F. Harvey Bros., dates back to 1883.

## THREE MAJOR EVENTS

3. This single pair of "Swallows" could hardly produce the 'industrial summer' of Madras State. The Swadeshi Movement which swept over the entire country in the first decade of the present century, the World War I and the policy of discriminate protection of the early twenties were three major events which gave considerable impetus to industrialization in Bombay and Bengal as well as U. P. and Bihar. But they hardly produced more than a ripple in Madras State and that ripple was the famous but short-lived Swadeshi Steam Navigation Company, an indigenous enterprise that was all too soon extinguished by cut-throat foreign competition.

4. In the fiirst three decades of the present century, Madras remained industrially stagnant. The innovating enterprise of the Harvey and later the B. & C. Mills did, of course, lead to a few imitative entrepreneurs, mainly in Coimbatore district. In 1930 there were 19 textile mills with 7,00,000 spindles. The spinning mills of Coimbatore helped the emergence of the hosiery industry at Karur and Salem, comprising 11 factories employing 659. persons, one the earliest instances of vertical linkage. Another notable development in the early years of the century was the growth of the tanning industry. The name of Charles D 'Souza, a French Eurasian, deserves to be remembered as the 'father of tanning industry' which later made Madras famous for its South India kipps. By 1929 there where two modern chrome factories in Madras and more than 100 country tanneries in Tiruchi, Salem, Erode as well as the vicinity of Madras. The growth of cottage industries for the manufacture of matches in and around Sivakasi in Ramanathapuram District and the establishment of the giant Wimco constitute another fresh line of industrial development. Mention must also be made of a score of tea and coffee estates a few of which showed high enterprise in generating their own hydel electricity, blazing a new trail in power generation. A small beginning in the development of agro-industries was also witnessed in the emergence of about 100 rice mills and decorticators. These few lines of industrial development sum up the total achievement in the long period of about 100 years upto 1930 since the establishment of Parry's Sugar Factory at Nellikuppam.

5. During this period of feeble and lagging private enterprise, the provincial Government of Madras, anxious to force the pace of industrialization, started a pencil factory and an aluminium manufacturing unit in the public sector. However, these nascent public-sector enterprises were snuffed out by Viscount Morley, the then Secretary of State for India, an ardent advocate of the laissez-faire doctrine, when he ordered that these factories should be sold away to the private sector.

## INSIGNIFICANT ACHIEVEMENT

6. Thus even so recent a date as 1930 all that the modern industrial sector of Madras State could boast of was limited to 19 textile-mills, one factory each in sugar, match, pencil and aluminium

industries, two chrome factories, a few P.W.D. engineering work-shops, a score of tea and coffee estates and about 100 rice mills and decorticators There was of course a vast "Pre-Newtonian" sector with a few millions of industrial population engaged in handloom and brassware match weaving and other handicrafts. But all these belonged non-power traditional sector.

## RAPID INDUSTRIAL DEVELOPMENT SINCE 1930

7. Compared with the quasi-stagnation of the period upto 1930, the next three decades witnessed rapid industrialization in Madras State.In the sixties,the industrial sector has grown amazingly in magnitude,range as well as diversification. There are today 159 spinning and weaving mills with 3,900,000 spindles and more than 8,000 looms. Much more important, several new lines of industrialization are seen in the cement and refractories, rubber and paper industries; automobiles and components, cycle and scooters, road-rollers and engines, typewriters and calculators; in the chemical complex caustic soda, fertilizers and sulphuric acid; in the field of electrical industries manufacture of transformers, switch gears, cables, meters and insulators radios and fans; again an aluminim smelter plant, the Neyveli Lignite Corporation, photo films, surgical instruments, tele-printers, integral-coach and heavy vehicles, high pressure boilers and small arms, mining and quarrying of magnetite, limestone, limenite etc.; a rich and widely diversified industrial base has emerged in this span of 30 and odd years.

## ECONOMIC INDICES

8. An appraisal of the place of Madras State in the industrial map of the country may well be made on the basis of some well-known economic indices; (1) industrial population to the total population industrial workers to the total working force, (3) degree of urbanizaition,(4)number of large scale industrial establishments based on the definition of the All India Survey of Industries (ASI), (5) number of factories, work-shops and worksheds as enumerated in 1961 census,(6) productive capital used, (7) persons employed, (8) man-hours worked (9) salaries and wages earned, (10) inputs and output and (11) value added by manufacture.

## RANKING OF MADRAS STATE

9. With an area of 50,155 square mile or 4. 1% and population of 33,700,000 or 7.6% of the Indian Union, Madras State has an inudstrial working population of 20,560,000 against an All-India total of 199,870,000 or 10.3%. In respect of percentgae of industrial to total population, Madras ranks second with 6.1% compared with 5.4% in Maharashtra, 5.3% in Gujarat, 5.1% in West Bengal and 4.4% in Punjab, 3.5% in U.P. and 4.5% in all-India. The percentage of industrial workers to the total working population is 13.4 in Madras State and it occupies the third rank among the States next to Kerala with 18.1% and West Bengal with 15.6%, followed by Gujarat with 12.9, the Panjab 12.6, Andhra 12.3 and Maharashtra 11.3. An index of the level of industrialization, the share of the national income by industrial income deserves our first consideration. However, the percentage share of income from "Manufacturing Enterprises" to national income, in Madras State is 15. 3, below the All India average of 18.8 in 1962-63.

10. Industrial progress may also be assessed by means of the estima ted per capita productive capital, working capital, wage income, out put and value added by manufacture. These per capita figures worked out for Madras State are compared with figures for the rest of India (Indian Union minus Madras State) [vide table next page]

These per capita figures reveal the peculiar-structure of industrialization in Madras State. Denied of heavy iron and steel industries which are highly capital intensive, the Madras per capita production as well as working capital fall far short of the 'rest of India' average. However in respect of the other variables, Madras is on a par with or slightly above the "rest of India" average.

11. Significant among the economic indices of industrial progress is the per capita electric energy consumed for industrial purposes. In 1963-64, the per capita consumption of electric energy for industrial use in Madras State was 33.4 kwh. against 31.3 kwh for "rest of India". The degree of diversification of industries adds strength to the industrial base. Due to the conspicuous absence of minerals and extremely limited number of giant public sector enter-

| | ALL INDUSTRIES, 1961 | | | Per capita | | |
|---|---|---|---|---|---|---|
| | INDIA | MADRAS | REST OF INDIA | MADRAS | INDIA | REST OF INDIA |
| | | | | in rupees | | |
| Factories No. | 9,161 | 805 | 8,356 | | | |
| Productive capital crores | 2,374 2 | 145 5 | 2,228 7 | 43 19 | 54 06 | 54 95 |
| Working capital crores | 899 9 | 46 6 | 853 3 | 13 84 | 20 50 | 21 04 |
| Persons employed 000s | 3,049 7 | 227 3 | 2,822 4 | | | |
| Man Hours worked m. m. | 6,133 2 | 479 4 | 5,653 8 | 14 2 | 13 9 | 13 9 |
| Salaries and wages Rs. crores. | 535 7 | 39 6 | 496 1 | 11 76 | 12 18 | 12 25 |
| Input-Rs. Crores. | 2,705 4 | 199 6 | 2,505 8 | 59 25 | 61 59 | 61 79 |
| Output-Rs. crores. | 3,693 3 | 280 2 | 3,413 1 | 83 18 | 84 08 | 84 16 |
| Value added by manufacture-Rs. crores. | 987 9 | 80 6 | 907 3 | 23 93 | 22 49 | 22 37 |

prises, some basic industries do not at all figure in Madras; the most significant among these great absentees are coal mining, iron and steel. Yet on the whole, Madras has as many as 126 categories out of 195 belonging to the three-digit Indian Industrial classification.

12. The accelerated industrialization in the past 35 years owes not a little to the development and rapid extension of electricity which is emulated but never excelled by other states. It is also due to the emergence of a large number of entrepreneurs in Madras city, Coimbatore and Madurai-Ramanathapuram Districts from the traditionally most enterprising communities of which the Nattukottai Chettiars have always stood foremost, formely in finance but now in finance as well as industry,

# Digital Computer use in Engineering and Science Education

M. K. Venkataraman, *M.A., M.Tech.*

*Professor of Mathematics,*

*A. C. College of Engineering and Technology, Karaikudi.*

The twentieth century will be remembered in the years to come as the century which saw two developments of the first magnitude in human affairs. The first of these was the capture of atomic energy, typified by the atom bomb dropped at Hiroshima, Japan in August'45. The second of these was the harnessing of machinery to handle information in reasonable ways and has been appropriately called the "Second Industrial Revolution". This revolution is similar to the First Industrial Revolution that began in England in the late 1700's and which harnessed energy from steam and coal. Like the first, it has its varied aspects—automatic control over processes, automatic handling of materials, robbots (machines with sensing, thinking and acting apparatus), automatic computing machinery etc. Of all these, the automatic computing machinery is the major part of the second Industrial Revolution.

Computing is a new and vast field where both mathematics and engineering have made contributions. There are two main divisions of the automatic computing machinery-the digital computers and the analogue computers. The digital computers are also called electronic brains but their electronic nature is only incidental. Their importance lies more in the fact that they are automatic. In digital computers, information is put in the machine in a digital way. The quantities which they handle are represented by integral numbers of electric pulses. Since the effective number of electric pulses representing a quantity is of the order of a million, high precision is achieved.

In an analogue computer, the electrical or mechanical connections of the computer are set up in such a way that these quantities satisfy the same relationships as govern the variables in the problem to be solved. Thus an analogue is set up in the machine itself and information is put in the machine in an analogue way. The slide rule is one of the simplest analogues devices, in which the numbers of a problem are represented by lengths proportional to the logrithms of the numbers. In the electronic analogue machines, the analogue quantities are commonly the voltages which correspond in some predetermined manner with the quantitiesin the problem. Analogue machines are generally less accurate than digital machines.

A simple everyday example of a small machine that can receive and record information in a digital way is the ordinary date stamp that can stamp, October 18, 1966 for instance. The date stamp is made up of a frame, four rollers and four little rubber belts. One of the belts contains in raised reversed letters the month symbols January, February etc. to December; two more little belts contain each of the digtis 0, 1, 2, upto 9 and the fourth belt contains the years 1960, 1961, 1962. . ...The date stamp at the beginning of a day is set by hand so that it records and thereby stores the date, which that day is. Then the user of the date-stamp without himself remembering the date, can impress it on any sheet of paper and the machine will immediately state the date. On the next day, the date shown by the stamp can be advanced by changing the position of one or more of the rubber belts. In fact, if we should so desire, we could connect the date stamp to an electric alarm clock set to go off each midnight, thereby providing an impulse which would caue the date stamp to be changed automatically from one date to the next date. We would then have a rudimentary automatic computer, able not only to take in and record information but also to manipulate it logically.

We encounter many simple analogue computers everyday, although we may not have considered them as such. An example of an analogue computer is the speedometer of an automoblile, together with the mileage counter (called odometer). The speedometer-odometer furnishes an example of an analogue computer which does addition, multiplication and differentiation. The measurement of speed is analogue differentiation, as the speed is the mathematical derivative of the distance travelled.

We shall now consider a little about the types of problems that can be solved on these computers.

**1. Problems in Linear Algebra.**

Most engineering calculations are concerned with linear systems, built up from elements which obey Hook's or Ohm's law and in such systems there are usually two kinds of variables which are related in a linear manner. In an elastic structure, for instance, the displacements are linear functions of the applied loads, while in an electrical network currents are similarly related to applied voltage The calculations in these can be formulated as (i) simultaneous linear equations (ii) the inversion of a matrix (iii) extraction of the latent roots of a matrix. In fact there are many practical problems that can be reduced to the mathematical common denominator of the inversion of a matrix. All these three standard mathematical forms are very suitable for caluation by a digital computer.

**2. Problems in Non-linear Algebra:**

Nonlinear problems, in general,are more difficult than linear ones and hence the possibility of solving them by computers is correspondingly greater.

**3. Ordinary differential equations:**

Computers have been applied successfully to many problems involving numerical integration of differential equations.

**4. Nonmathematical problems.**

One important application of computers is to commercial data-processing and accountancy calculations. On the more frivolous side, machines have been programmed to play chess and to make opening bids at bridge. They have not however evinced any marked superiority over human beings in these games. Lingustic translation has been effectively accmplished by automatic computers.

**Partial Differential Equations:**

A large number of partial differential equations which arise in physics and engincreing cannot be treated by the orthodox theoretical

methods. Recourse must be made to numerical methods. A very good example which illustrates these points is that of numerical weather forecasting. The differential equations governing the pressure, density and velocity distributions are extremely complicated and can be solved only by numerical methods. A more improtant point, however, is the question of the speed of solving the equations, for if the solutions are to be used in a weather forecast, then they must be obtained before the physical situation has developed. Thus if the solutions are to be of any use at all, the time to obtain, say, a twelve hour forecast must not be greater than about an hour from the time that the initial data are available to the presentation of results. Such a speed can only be realised with modern automatic Computer.

The military applications of computers are more vast than civilian applications, The military have special reasons of their own for using computers. For instance, the problems which they must solve are often very complicated and yet solutions must be found rapidly, repeatedly and with adequate accuracy. Solutions are necessary for the complicated mathematical problems which have arisen in the design of military equipment.

Thus the subject of computers is a new, large and extensive one and it will take many years before the last word has been said about their applications. Moreover there are problems of interest to engineers, such as scheduling, layout and operatianal problems which are essentially digital in nature. Such problems can be lifted from the drawing board and conference table and explored through the digital computer. It is important that an engineering student should know something of the mathemaitcal techniques most useful in computer work so that later on he will be in a position to judge whether his own particular problems are suitable for machine solution. Our country is only a newcomer to the computer field and it is hoped that ere long, a computing laboratory will be set up in every engineering college of our country.

# Structure Study by Magnetic Methods

**Dr. Sriraman**, *M.A., M.Sc., Ph.D , F. Inst. P.,*
*Prof. & Head of the Department of Physics, Annamalai University*

Of the techniques that are useful in determining the molecular structure, the magnetic methods are often employed partly because of their comparative ease of application and partly because they lend themselves well to a purely empirical approach. Magnetic methods can be successively employed to structural problems only if a set of standard values for ions, atoms and bonds under different environment is readily available. But the most disappointing feature in diamagnetic studies is the lack of such standard values. In the following pages a critical analysis is made on the existing data--both theoretical and experimental.

A very useful preliminary study for applying the static magnetic methods to molecular structure of chemical compounds is the study of ions. Unfortunately the ionic values are experimentally determined by assuming that the magnetic susceptibility of a truly ionic compound is the sum of the susceptibilities of the cation and anion. Therefore, evaluation of the magnetic susceptibity for one ion depend largely on the value of the other ion and any error in the evaluation of that ion introduces inconsistent values for the other ion. Therefore the present values need a critical analysis.

Reichneder[1] assumed that the hydrogen ions $H+$ has zero susceptibility since it has got no orbital electrons and calculated the ionic values of the halogen ions from his measurements of the halogenated acids. However the polarisation effects of $H+$ on the solvent molecules due to the intense electric fields surrounding it should change the susceptibility value and therefore has to be modified. But any experimetally derived value, being obtained from substances in which the ions cannot be free, must be less than the theoretical value and variable according to the nature of the substance and therefore unsuitable as a standard.

On the theoretical side the well known Langevin's[2] theory has been employed for the determination of ionic susceptibility. But the calculation of Er$^{-2}$ required for the evaluation of the magnetic suceptibility by Pauling[3] Slater[4] and others showed that the susceptibility thus obtained did not conform to actual values. Angus[5] modified Slaters' screening constant values required for the calculation of Er$^{-2}$ and this when applied yielded better results.

About 1910, Pascal[6] showed that the magnetic susceptibilities of organic compounds could be expressed as a additive function of, contributions from each atom in the molecule with some constitutive corrections, and this correction term is determined by the nature of the linkages between atoms. Later Pacal[7] modified the whole scheme and proposed a unique set of values for chemical bonds instea d of,for atoms which lend itself for easier calculations just like molar refractions.

Trew[8] on the other hand, employing Pascals' data of atomic susceptibility along with Slater's theoretical method and by a proportionality rule was able to obtain a set of standard values for ionic susceptibilities which are by for the best standard values and can be applied sucessfully to structural problems. In fact, Trew[9] was able to predict and verify the ionic characters of SO; CO bonds in certain inorganic compounds. A smilar way of calculating the thoretical susceptibility was extended by Yang[10] to organic compounds. He regarded the two unshared electrons of a covalent bond as forming a doubly charged negative ions. and the molecule as consisting of positive and negative ion. The diamagnetic susceptibilities thus assigned to the constituent parts of the molecule gave the theoretical susceptibility as an additive value of ions. But the method yielded several anamolous results and was sujected to strong criticisms by authors like Selwood.[11]

Gray and Cruinckshank[12] developed a new procedure by linking up diamagnetism with bond moments and other properties. They found that the experimental diamagnetic standards of Pascal and Pauling's theoretical standards are reconcilable. Pople[13] recently devised an independent electron molecular orbital theory for diamagnetism; the theory provides a convenient basis for the Pascal's constants. But the theoretical calculations of complex molecules are not easy due to lack of knowledge about reliable wave-functions.

Recently, Dorfman [14] correlated the bond polarisability and diamagnetism following Kirkwood [51] and proposed a set of bond values. This method has a significant advantage in contrast to purely arbitrary values of Pascal since the values were obtained by a semi-empirical approach and therefore approximately true values. The additional advantage is that, the Van-Vleck Paramagnetism can be separated from the core diamagnetism for all organic compounds. This is particularly helpful in understanding the conjugative effects of chemical bonds. For example, the formation of hydrogen bonds can be considered as arising due to an electrostatic force, and the presence ofsuch a force is equivalent to an electric field between the two groups orming the hydrogen bonds and therefore its contribution to diamagnetism. is Paramagnetic. Hence the formation of hydrogen bonds introduces an additional parmagnetic contribution to the Van-Velck's term. Therefore the magnetic exaltations should be a measure of the hydrogen bonding ability of the group and hence it should be possible to correlate these exaltations with spectroscopic manifestations-like frequency shifts, etc. The potentiality of the method is not yet fully realised but when once the bond values that are proposed are modified in the light of new experimental investigaions, probably it will move the branch of magnetochemistry of diamagnetic substances off the dead centre, as the author claims.

REFERENCES


1 Reichneder, Ann. Physik., 1, 169, 1929
2 Langevin, Am. Chim Phys., 4, 678, 1905
3 Pauling Proc. Roy. Soc., 114A, 181, 1927
4 Slater, Phy. Rev., 36, 57, 1930
5 Angus, Proc. Roy Soc, 136A, 569, 1932
6 Pascal, Ann. Chim. Phys., 19, 56, 1910
ibid, 25, 289, 1912
ibid. 29, 218, 1913
7 Pascal, Pacault and Horau, Compt. rendus., 233, 1078, 1951
8 Trew, Trans. Faraday. Soc., 37, 476, 1941
9 Trew ,, ,, 37, 482, 1941
10 Yang. J. Chem. Phys., 16. 865, 1948
11 Selwood,'Magnetochemistry,' Inter Science publishers Inc. New York, 1956
12 Gray and Cruinckshank, Trans Faraday Soc., 49, 604, 1953.
13 Pople, J. Chem. Phys. 37, 53, 1962
14 Dorfman 'Diamagnetism and Chemical Bond" American Elseviers Publishing Co., New York
15 Kirkwood, Phy. Z, 33, 57, 1931
16 Van Vleck, Phy. Rev. 29, 349, 1927

# இளம்பூரணரும் பன்னிருபடலமும்

வித்துவான் மு. அருணுசலம் பிள்ளை

தொல்காப்பியத்திற்கு உரையெழுதிய ஆசிரியர்கள் பலர். அவர்களில் காலத்தால் முற்பட்டவர் இளம்பூரணர். இவர் தொல்காப்பியப் புறத்திணையியலின் தொடக்கத்தில் பன்னிரு படலம் என்னும் நூலைக்குறித்துப் பல குற்றங்கள் கூறியுள்ளனர். அவையெல்லாம் குற்றமெனக் கொள்ளத்தக்கன அல்ல என்பது பற்றி ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம். எனவே இளம் பூரணர் காட்டும் குற்றங்களையும் அவை பொருந்தாமைக்கு உரிய காரணங்களையும் முறையே காண்போம்.

> "ஆன்ற சிறப்பின் அறம்பொருள் இன்பமென
> மூன்றுவகை நுதலியது உலகம் ; அவற்றுள்
> அறமும் இன்பமும் அகலா தாகிப்
> புறன் எனப்படுவது பொருள்குறித் தன்றே"[1] 1

என்னும் பன்னிருபடலச் செய்யுளுள் புறப்பொருள், அறமும் இன்பமும் அகலாதாகி எனக்கூறினர்.அவர் கூறுதல் வாகைத் திணையின் 'கட்டில் நீத்தபால்[2] முதலாகக் 'காமம் நீத்தபால்' ஈறுக அறங்கூறுதலில் அச் சார்பாகக்[3] கூறியது மயங்கக் கூறுதலாம்'' என்பது இளம்பூரணர் பன்னிரு படலம் பற்றிக் கூறிய முதற்குற்றம்.

### குற்றம் காணும் முறை இதுவா?

அறமும் இன்பமும் அகலாதாகிப் பொருள் குறித்து வருவது புறம் என்று நூலின் தொடக்கத்தில் கூறிய பன்னிருபடலத்தார்

---

1. தொல்காப்பியப் பொருளதிகாரம்-புறத்திணை இயலின் முன்னுரை-இளம்பூரணர் மேற்கோள்.
2. 'கட்டில் நீத்தபால்'என்பது நச்சினர்க்கினியர் கொண்ட பாடம்.இளம் பூரணர் 'கடிமனை நீத்தபால்' எனப் பாடங்கொண்டு அதற்குப் 'பிறர்மனைநயவாமை' என உரையெழுதியுள்ளார். தொல்-பொருள் -புறத்திணையியல்-சூ-17
3. இவ்வுரைப் பகுதியில் ஏதோ பிழைபட்டிருத்தலால் பொருள் தெளிவாக இல்லை. 'அவர் கூறுதல்' என்றிருப்பது, அவ்வாறு கூறுதலால் எனவும், 'அச்சார்பாக' என்றிருப்பது, அகச்சார்பாக எனவும் இருக்கலாம் போலும்.

அக்கூற்றுக்கு மாருகத் துறைகள் கூறியிருப்பாராயின் அப் பன்னிருபடலத்திலிருந்து அத்துறைகளை எடுத்துக் காட்டி, இவை இன்ன இன்ன காரணங்களால் மயங்கக் கூறுதலாகும் என்று விளக்கந் தருதலே முறை. அவ்வாறன்றித் தொல் காப்பியப் புறத்திணையியலில் வாகைத்திணைத் துறைகளை வகுத்துக் கூறும் 'கூதிர் வேனில்'* என்னும் நூற் பாவிற் கூறப் பட்டுள்ள' 'கட்டில் நீத்தபால்' முதல்' காமம் நீத்த பால்' ஈருகிய துறைப்பகுதிகளைச் சுட்டிக்காட்டிப் பன்னிருபடல நூலார் மயங்கக் கூறினுர் என்பது குற்றங்காணும் முறையன்று. இஃது இளம்பூரணர் தம் கருத்திற்கு மாருகத் தொல்காப்பிய நூற் பாவிற் குற்றங்காண்பது போன்றுள்ளது.

புறப்பொருள் வெண்பாமாலையில் வாகைப்படலத்தில் கட்டில் நீத்த பால், காமம் நீத்த பால் என்ற துறைகள் கூறப் படவில்லை. அதனுல் அந்நூலின் முதல் நூலாகிய பன்னிரு படலத்திலும் இத்துறைகள் கூறப்பட்டிருக்க மாட்டா என்று துணிந்து கூறலாம். கூறியிருப்பதாகவே கொண்டாலும் அதில் உள்ள மயக்கம் என்ன? 'அறமும் இன்பமும் அகலாதாகி' என்று எடுத்துக் கொண்டதற்கு மாருக, அறங்கூறுமிடத்து இன்பப் பகுதி கூறப்பட்டதா? அல்லது அறமும் இன்பமும் முறையாகக் கூருமல் விரவிக் கூறப்பட்டனவா? என்ன குறைபாடு கண்டு இளம்பூரணர் இவ்வாறு கூறியுள்ளார். என்று அவர் உரை கொண்டு அறிய முடியாமையால் இக்குற்றம் பற்றி ஒன்றும் கூருமல் விடுதலே தக்கதாகும்.

"புறப்பொருள் பன்னிரு வகைப் படக்கூறில் அகமும் பன்னி ரண்டாகி மாட்டேறு பெறுதல் வேண்டும். அகத்திணை ஏழா யிருக்கும்போது புறத்திணை பன்னிரண்டு என்றல் பொருந்தாது" என்பது இளம் பூரணர் காட்டும் இரண்டாவது குற்றம்.

தொல்காப்பியர் அகத்திணை புறத்திணை என்னும் இரண்டிற் கும் இலக்கணங் கூறுபவர் ஆதலின் இன்னதற்கு இன்னது புறம் என ஒருசார் இயைபு தோன்ற மாட்டேற்றிக் கூறினர். பன்னிரு படலத்தார் புறத்திணை ஒன்றற்கே இலக்கணங் கூறுபவர் ஆகலின் அகத்திணைகளோடு புறத்திணைகளைத் தொடர்புபடுத்திக்கூறும் கடப்பாடு அவர்க்கு இல்லையாயிற்று. அன்றியும், அகம் புறம் இரண்டனையும் இயைத்துக்கூறும் முறை தொல்காப்பியர்க்கு

---

* தொல்-புறத்திணையியல்-சூ-17

முன்பும் இருந்தது என்றால், 'வெட்சிதானே குறிஞ்சியது புறனே'[1] என்பது முதலாக 'பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே'[2] என்பது ஈறாக மாட்டேற்றிக் கூறிய ஏழுநூற்பாக்களில் ஒன்றிலேனும் தொல்லாசிரியர் இவ்வாறு கூறுவர் என்பது தோன்ற 'என்ப' 'என்மனார்' என்னும் இவை முதலாய வாய்பாடுகளில் ஒன்றனை அவர் அமைத்திருப்பர். அவ்வாறு இல்லாமையால், தொகுத்து நூல்[3] செய்த தொல்காப்பியரே அகத்தையும் புறத்தையும் இயைத்துக் கூறும் இந்நெறியைப் புதுவதாக மேற்கொண்டார் எனக்கருத இடம் உண்டு. புறத்திணைகள் பன்னிரண்டாக வழங்கியதே பழைய மரபு என்பதையும், அகத்திணைகள் ஏழ் என்பது தொல்காப்பியர்க்கு உடன்பாடன்று என்பதையும் அடுத்துவரும் பகுதிகளில் காணலாம்.

### புறத்திணைகள் பன்னிரண்டு என்றல் பொருத்தமே

நிரைகவர்தல் நிரைமீட்டல் என்பனவும், மேற்செலவு எதிரூன்றல் என்பனவும், மதில் முற்றுதல் மதில் காத்தல் என்பனவும் தம்முள் மறுதலை வினையாகலானும், மாறுபட்ட இருதிறத்தாரும் தமர் பிறர் என அறிந்து கோடற்கு வேற்றுப் பூச்சூடும் வழக்கு உண்மையானும் இம் மூன்று வகைகளை 'வெட்சியும் கரந்தையும் தம்முள் மாறே,'[4] 'வஞ்சியும் காஞ்சியும் தம்முள் மாறே',[5] 'உழிஞையும் நொச்சியும் தம்முள் மாறே'[6] எனக் கொண்டு பன்னிருபடலத்தார் இம் முறையே ஆறு படலங்கள் அமைத்தார். பின்னர் இருதிறத்துப் படைகளும் எதிர்நின்று பொருதலைத்தும்பை என்றும், போரினும் பிற தொழில்துறைகளினும் வென்றியெய்துதலை வாகை என்றும் வீரம் ஈகை முதலியவற்றால் மேம்பட்டோரைப் புகழ்ந்து பாராட்டுதலைப் பாடாண் என்றும் கொண்டு மூன்று படலங்கள் வகுத்தார். வெட்சி முதலிய திணைகளிற் கூறப்படாது எஞ்சியவற்றையும், புறத்திணைகள் அனைத்திற்கும் பொதுவான விதிகளையும் கூறுதற்குப் பொதுவியல் என ஒரு படலம் கொள்ள வேண்டியதாயிற்று. இவையேயன்றி, ஒத்த அன்புடையராய ஒருவனும் ஒருத்தியும் உளங்கலந்து உடனுறைவு கொள்ளும் உயர்ந்த ஐந்திணைக் காதல் உறவு போல் அல்லாமல், ஒருதலைக் காமமும் ஒவ்வாக்

---

1. தொல் - புறத்திணை - சூ - 1.
2. தொல் - புறத்திணை - சூ - 20
3. ''மூந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப் புலந்தொகுத்தோன்' - தொல்காப்பியப் பாயிரம்.
4. 5. 6- யாப்பருங்கல விருத்தி-சூ-96- உரை மேற்கோள். பக்கம் 562. பவானந்தம் பிள்ளை பதிப்பு.

காமமும் உடையராய இருபாலாரின் இழிதகவான உறவுகளும் உலகியலிற் காணப்படுதலால் இக் கைக்கிளை பெருந்திணைகளை அகப்புறம் எனக் கொண்டு மேற்கூறிய பத்துடன் சேர்த்துப் புறத்திணைகள் பன்னிரண்டு எனக் கூறினர். இம் முறை மிக்க பொருத்தமுடையதேயாகும்.

இங்ஙனம் புறத்திணையிலக்கணம் ஒன்றனையே அதன் கூறுபாடுகள் எல்லாம் தோன்ற விவரித்துக் கூறும் பன்னிருபடலத்தார்க்குப் புறத்திணை பன்னிரண்டனையும் அகத்திணைகளோடு மாட்டேற்றிக் கூறவேண்டும் என்ற இன்றியமையாமை இல்லையாயிற்று. எனவே இப்புறத்திணைகள் அகத்திணைகளோடு மாட்டேறு பெறாத குற்றம் அவரைச் சாராது ஆதலால் இவ்விரண்டாவது குற்றம் குற்றம் எனக் கொள்ளத் தக்கதன்று.

"பெருந்திணைப் புறமாகிய காஞ்சி, நிலையாமையை உணர்த்தும் அன்றி வஞ்சித் திணைக்கு மறுதலைத் திணையாகாது. எனவே காஞ்சியை வஞ்சிக்கு மறுதலையாகக் கொண்டது தவறு," என்பது மூன்றாவது குற்றம்.

வஞ்சித் திணைக்கு மறுதலையாய் எதிரூன்றலாகிய காஞ்சித் திணை வேறு; இளமை செல்வம் யாக்கை முதலிய உலக நிலையாமையுணர்த்தும் காஞ்சி வேறு எனக் கொள்ளவேண்டும். இதனைப் புறநானூற்றுச் செய்யுட்கள் முதலியவற்றாலும், தொல்காப்பியர் காஞ்சித்திணைத் துறைகளைப் பகுத்துக் கூறும் முறையாலும் அறியலாம்.

"அடங்காத் தானை வேந்தர் உடங்கியைந்து
என்னொடு பொருதும் என்ப; அவரை
ஆரமர் அலறத் தாக்கித் தேரொடு
அவர்ப்புறங் காணேன் ஆயின் சிறந்த
பேரமர் உண்கண் இவளினும் பிரிக'

என்பது முதலாக வஞ்சினக் காஞ்சித் துறைப் புறப்பாட்டுகள்[1], எதிரூன்றலாகிய காஞ்சித் திணையைச் சாருமன்றிப் பெருந்திணைப்புறமாய் நிலையாமை யுணர்த்தும் காஞ்சியைச் சாரமாட்டா. இவையும் நிலையாமைக்காஞ்சியில் அடக்கப்படுமாயின் 'ஊர்கொலை'[2] "வாள்வாய்த்துக்கவிழ்தல்"[3], "இருவர்

1. புறநானூறு-செய்யுள்-71, 72, 73
2. தொல்-புறத்திணை-சூ-2.
3. தொல்-புறத்திணை-சூ-5

தலைவர் தபுதிப்பக்கம்"[1] "களிறெறிந்து எதிர்ந்தோர்பாடு"[2]. வாள் வாய்த்து இருபெரு வேந்தர் தாமும் சுற்றமும், ஒருவரும் ஒழியாத் தொகைநிலை,[3] முதலியனவாய்ப் போர்வீரரின் இறந்து பாடு குறித்துவரும் துறைகள் எல்லாம் நிலையாமைக் காஞ்சியிற் கூருமல் வெட்சி முதலிய பிறதிணைகளில் கூறப்பட்டிருத்தல் குற்றம் எனப்படும். ஆகலின் மேற்காட்டிய புறப்பாட்டுக்களுக்கு உரிய வஞ்சினக் காஞ்சி, வஞ்சிக்கு மறுதலையான காஞ்சித் திணைத் துறைக்குள் ஒன்ருகவே கொள்ளத் தகும்.

## தொல்காப்பியர் காஞ்சித் துறைகளைப் பகுத்துக் கூறும் முறை

தொல்காப்பியர் பெருந்திணைப் புறமாகக் கொண்ட காஞ்சித் திணையில் இருபது துறைகள் கூறியுள்ளார். அவ்விருபது துறைகளையும் ஒருசேரக் கூருமல், 'மாற்றருங் கூற்றம் சாற்றிய பெருங்காஞ்சி"[4] முதல் 'தலைக்காஞ்சி'யீருகப் பத்துத் துறைகள் கூறி, இப்பத்தினையும் ஒருவகை என்பர் முன்னையோர் என்பது தோன்ற, 'ஈரைந்தாகும் என்ப' என்று அந்நூற்பாவின் இடையில் ஒரு முடிவு கொடுத்துப் பின்னர்ப் 'பூசல் மயக்கம்' முதல் 'காடுவாழ்த்து 'ஈருகப் பத்துத் துறைகள் கூறி, இக்காஞ்சித் திணை இவ்வாறு இரண்டு கூறுபட்ட துறைகளையுடையது என்பாராய், 'நிறையருஞ் சிறப்பின் துறையிரண்டுடைத்தே' என முடித்திருக்கிருர். இஃது ஆராய்தற்குரியது.

இந்நூற்பாவிற்கு உரை எழுதிய இளம்பூரணர், 'முன்னைய பத்தும் காஞ்சித்துறை என்பர் சிலர். பின்னைய பத்தும் உட்பட இருவகைப்பட்ட துறையையுடையது இக்காஞ்சித்திணை' என்று கூறினர்.

நச்சினர்க்கினியர் வேறு காரணங்காட்ட முற்பட்டு முன்னைய பத்தும் ஆண்பால் தொடர்புடையன: பின்னைய பத்தும் பெண்பால் தொடர்புடையன என்று ஒருவகையிற் பொருத்தங் கூறினர். எனினும் அவர், கருத்தின்படி எல்லாத் துறைகளும் அடங்காமல், ஆண்பாற் பிரிவினுள் பெண்பால் தொடர்பும், பெண்பாற் பிரிவினுள் ஆண்பால் தொடர்பும் விரவி வருதல் கண்டு தம் மனச் சான்றுக்கு மாருக ஒவ்வொருவகையில் அவற்றிற்கு இயைபு காட்டுவராயினர். ஆனல் தொல்காப்பியர் கருதியது அது அன்று.

---

1. 2. 3. தொல்-புறத்திணை-கு-14

4-தொல்-புறத்திணை-கு-19.

பன்னிருபடலத்தின் வழிநூலாகிய வெண்பாமாலையின் துணைகொண்டு நோக்கினல், தொல்காப்பியர் காஞ்சித் திணைத் துறைகளை இரண்டு கூறுகப் பகுத்துக் கூறியதன் காரணம் புலனுகும்.

## வெண்பாமாலேயும் காஞ்சித்துறைகளும்

வஞ்சித்திணைக்கு மறுதலையான காஞ்சித் திணையில் இருபத்திரண்டு துறைகள் கூறி முடித்த வெண்பாமாலையார், பொதுவியற் படலத்திலும் பதினேழு காஞ்சித் துறைகள் கூறியுள்ளார். இவ்வாறு இரண்டு படலங்களில் காஞ்சித்துறைகளைக் கூறியிருப்பது மிகையெனத் தோன்றவில்லை. பொருத்தமாகவே தோன்றுகின்றது. காஞ்சிப் படலத்திற் கூறப்பட்டிருப்பவையனைத்தும், மண்ணசையால் வந்த வேந்தனை எதிர்நின்று தடுத்துப் போர்புரியும் மறவர் சார்பானவை. அவை:—வஞ்சினக் காஞ்சி, தலைக்காஞ்சி, தலைமாராயம், தலையொடு முடிதல், மறக்காஞ்சி, பேய்நிலை, மன்னைக் காஞ்சி [1] முதலியன. பொதுவியற் படலத்திற் கூறப்படும் காஞ்சித்துறைகள் எல்லாம் போர்ச்செய்திகள் குறித்துக் கூறியன அல்ல. மக்கள் எல்லோர்க்கும் பொதுவான நிலையாமையும் அறிவுரையும் கூறுவன அவை:- முதுபாலை- சுரநடை, தபுதாரநிலை, தாபதநிலை, தலைப்பெயல்நிலை முதலியனவும்,[2] முதுமொழிக்காஞ்சி, பெருங்காஞ்சி, பொருள் மொழிக்காஞ்சி, முதுகாஞ்சி முதலியனவும்[4] ஆம். இங்ஙனம் வெண்பாமாலையார் பகுத்துக் கூறியமுறை, முதல் நூலாகிய பன்னிருபடலத்திற் கூறப்பட்ட முறையைப் பின்பற்றியது என்றே கொள்ளவேண்டும்.

## தொல்காப்பியமும் காஞ்சித்துறைகளும்

தொல்காப்பியத்தில், வெண்பாமாலையிற் கூறியவாறு பலபட விரித்துக் கூருமல் காஞ்சித் துறைகள் கூறும் நூற்பாவின் முற்பகுதியில், எல்லோர்க்கும் பொதுவான அறிவுரைகள் போர்வீரர் சார்பான செய்திகள் பற்றிய பத்துத் துறைகளும், பிற்பகுதியில், மக்கள் எல்லோர்க்கும் பொதுவான நிலையாமைபற்றிய பத்துத் துறைகளும் கூறப்பட்டுள்ளன. இதனல் வஞ்சியின் மறுதலையாகிய போர்ச்செய்தி கூறும் காஞ்சி வேறு. உலகியல் நிலையாமைபற்றிக் கூறும் காஞ்சி வேறு என்ற கொள்கை தொல்

1. பு. வெ. மாலை-காஞ்சிப்படலம்-9, 11, 12, 13, 14, 16, 20
2. பு-வெ. மாலை-பொதுவியற்படலம்-சிறப்பிற்பொது-1
3. பு-வெ-மாலை-சிறப்பிற் பொதுவியல்-2, 3, 4, 5.
4. பு-வெ-மாலை-பொதுவியல்-காஞ்சிப் பொதுவியல்-1, 2, 3, 5.

காப்பியர்க்கும் உடன்பாடு என்பது அவர் இயற்றிய நூற்பாவின் அமைப்பால் தெரிகின்றது. ஆயினும், வேறு வேறு வகைப் பட்ட காஞ்சித் துறைகளை ஒரு நூற்பாவில் அடக்கிக் கூறியதனால் இவையனைத்தும் பெருந்திணைப்புறம் என உரையாசிரியர்கள் மயங்குதற்கு இடனுண்டாயிற்று.

இனி, தொல்காப்பியர் காஞ்சித் திணையில் இரு பிரிவாகக் கூறியவற்றையே பின்வந்த பன்னிருபடலத்தார் காஞ்சிப் படலத்திலும் பொதுவியற் படலத்திலும் விரித்துக் கூறினர் எனக் கொள்ளலாமே எனில், அவ்வாறு கொள்வதாயின் ஏனைய புறத்திணைத் துறைகளைத் தொகுத்து, "கழிபெருஞ் சிறப்பின் துறை பதின்மூன்றே"[1], 'புல்லித் தோன்றும் பன்னிரு துறைத்தே'[2], என்று அவ்வந் நூற்பாக்களின் இறுதியிற் கூறிமுடித்தாற்போல இக் காஞ்சித் திணையின் இருபது துறைகளையும் ஒருசேரக் கூறி "நிறையருஞ் சிறப்பின் இருபது துறைத்தே" என முடித்திருத்தல் வேண்டும். அவ்வாறன்றி, மாற்றருங் கூற்றம் சாற்றிய பெருமை முதல் பத்துத் துறைகள் கூறி, இப்பத்தனையும் ஒருசார் காஞ்சித் துறைகள் என்பர் முன்னையோர் என்பதை அறிவித்தற்கு அந் நூற்பாவின் இடையில் 'ஈரைந்தாகும் என்ப' எனத் தொகை கொடுத்து, அத்தொகையினைப் பின்னுங் கூட்டிக் கொள்ள வேண்டி அரிமாநோக்காக அங்கு நிறுத்தி, மேலும் பத்துத் துறைகள் கூறி, இக் காஞ்சித் திணை பத்துப் பத்தான இருபது துறைகளைக் கொண்ட இரு வேறு நெறியினையுடையது என்பாராய், 'நிறையருஞ் சிறப்பின் துறையிரண்டுடைத்தே' என முடித்துள்ளார். இதனால், இவ்விருபது துறைகளும் நிறைவும் அருமையும் சிறப்பும் உடையன என்பதும், இத்துணைச் சிறப்பில்லாதனவாய துறைகளும் உள என்பதும், அவை ஆசிரியராற் கூறப்படவில்லை யென்பதும் நன்கு புலனாகின்றன. இவராற் கூறப்படாத துறைகளைப் புறப்பொருள் வெண்பாமாலைக் காஞ்சிப் படலத்திலும் பொதுவியற் படலத்திலும் காணலாம். எனவே, தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே வஞ்சிக்கு மறுதலையான காஞ்சியும் பொதுவியற் காஞ்சியும் நூல் வழக்கில் வேறு வேறாகக் கூறப்பட்டிருந்தன என்பதற்கு இந் நூற்பாவே மறுக்க முடியாத சான்றாயுள்ளது. இதனை அறிவித்தற்கே ஆசிரியர் இவ்வாறு பகுத்துக் கூறினர் எனக் கொள்ளவேண்டுமன்றித்

---

1. தொல்-பொருள்-புறத்திணை-சூ 7.
2. தொல்-பொருள்-புறத்திணை-சூ 14.

தொல்காப்பியத்தைப் பின்பற்றிப் பன்னிருபடலத்தார் இரு படலங்களில் காஞ்சித்துறைகளை விரித்துக் கூறினர் எனக் கொள்ளுதல் பொருந்தாது.

வாகைத்திணைத் துறைகளை வகுத்துக் கூறும் 'கூதிர் வேனில்'[1] என்னும் நூற்பாவில் பதினெட்டுத் துறைகள் கூறி அதன் இறுதியில், 'இருபாற்பட்ட ஒன்பதிற்றுத் துறைத்தே' என முடித்திருத்தலைக் கண்ட நச்சினார்க்கினியர், இந்நூற்பா, மறத்திற்கு ஒன்பதும அறத்திற்கு ஒன்பதுமாக இருவகைப் படுத்துத் துறை கூறுகின்றது, என்று உரை கூறியுள்ளார்.

'மாத்திரை எழுத்தியல்'[2] என்னும் செய்யுளியல் தொடக்க நூற்பாவில் செய்யுளுக்குரிய உறுப்புக்கள் முப்பத்து நான்கினையும் ஒருங்கு கூறாமல் 'ஆறுதலை யிட்ட அந்நா லைந்து' எனவும், 'எட்டு' எனவும் வேறு வேறாகத் தொகை கூறியிருத்தலைக்கண்ட உரையாசிரியர்கள், முன்னைய இருபத்தாறும் தனிநிலைச் செய்யுட்கு உரியனவாய் ஒன்றனையொன்று இன்றியமையாது தொடர்ந்து வரும் எனவும், பின்னைய எட்டும் தொடர்நிலைச் செய்யுட்கு உரியனவாய் ஒரு செய்யுளில் ஒன்றே வரும் எனவும் உரை எழுதியுள்ளனர். எனவே நூற்பாவின் இடையில் 'ஈரைந் தாகும் என்ப' என்றும், இறுதியில் 'நிறையருஞ் சிறப்பின் துறையிரண் டுடைத்தே' என்றும் கூறியிருத்தற்கு, மேலே கூறியவாறு பொருள் கொள்ளாக்கால் ஆசிரியர் கருத்தறிந்து பொருள் கூறியதாகாது.

மேலும், வெண்பாமாலைக் காஞ்சிப் படலத்தில் 'தலைக் காஞ்சி,' 'தலை மாராயம்,' 'தலையொடு முடிதல்'[3] என மூன்று துறைகள் தலையோடு தொடர்புபடுத்திக் கூறப்பட்டுள்ளன. தொல்காப்பியக் காஞ்சித் திணையில், 'மூலையும் முகனுஞ் சேர்த்திக் கொண்டோன், தலையொடு முடிந்த நிலை'[4] என்னும் துறை ஒன்றே கூறப்பட்டுள்ளது. வெண்பா மாலையில், 'பேய் நிலை', 'பேய்க் காஞ்சி', 'தொட்ட காஞ்சி', 'தொடாக் காஞ்சி'[5] எனப் பேயொடு சார்த்திக் கூறப்பட்டுள்ள நான்கு துறைகள், தொல் காப்பியக் காஞ்சித் திணையில் 'பேய்ப் பக்கம்', 'தொடாக் காஞ்சி'[6]

---

1. தொல்-புறத்திணை-சூ 17
2. தொல்-செய்யுளியல்-சூ 1
3. பு-வெ-மாலை-காஞ்சிப் படலம்-11, 12, 13
4. தொல்-புறத்திணை-சூ 19
5. பு-வெ-மாலை-காஞ்சிப் படலம்-16, 17, 18, 19
6. தொல்-புறத்திணை-சூ 19

என்னும் இரண்டு துறைகளாகக் கூறப்பட்டுள்ளன. இவை போல்வன பல.

ஒன்றற்கு ஒன்று மறுதலையான போர்ச் செய்திகளைக் குறிக்கும் இரண்டிரண்டு திணைகளை ஒவ்வொன்றில் அடக்கியும், அவற்றுள்ளும் பல துறைகளைக் கூறுமல் விடுத்தும் தொல்காப்பியர் தொகுத்து நூல் செய்தார் என்பதற்கு இவையெல்லாம் தக்க சான்றுகளாகும்.

எனவே, பெருந்திணைப் புறமாய் நிலையாமையுணர்த்தும் காஞ்சியைப் பன்னிருபடலத்தார் வஞ்சித் திணைக்கு மறுதலையாகக் கொண்டது குற்றம் என இளம்பூரணர் கூறியது ஏற்கத் தக்கதன்று.

4. "மறத்திற்கு முதலாய வெட்சியையடுத்து பொதுவியல் கூறுதது ஒரு குற்றம்" என்ருர் இளம்பூரணர். இதனையும் காண்போம்.

பன்னிரு படலத்தில் பொதுவியலுக்குக் கூறிய இலக்கணம்,

"பல்லமர் செய்து படையுள் தப்பிய
நல்லாண் மாக்கள் எல்லாரும் பெறுதலின்
திறப்பட மொழிந்து தெரிய விரித்து
முதற்பட எண்ணிய எழுதிணைக்கும் உரித்தே"*

என்பது.

பல்லாற்ருனும் போர் செய்து இறந்துபட்ட வீரர்கள் எல்லோரும் கல் நாட்டி வழிபடப் பெறுவர் ஆகலின், இப்பொதுவியல் வெட்சிமுதல் தும்பையீருகிய எழுதிணைக்கும் உரித்து என்பது இந் நூற்பாவின் பொருள். எனவே, தும்பைத் திணையை அடுத்துப் பொதுவியல் கூறப்படவேண்டும் ஆயினும், அவ்வெழுதிணைகளைச் சார்ந்துவரும் வென்றிவகை புகழ்ச்சிவகை கூறும் வாகை பாடாண் என்னும் இரண்டு திணைகளிற் கூறப்படாது எஞ்சி நின்றவற்றிற்கும் இலக்கணங் கூறவேண்டிப் பொதுவியற் படலத்தைப் பாடாண்டிணைக்குப் பின் வைத்தார். இது குற்றமா?

---

* தொல்-புறத்திணையியல்-முன்னுரை-இளம்பூரணர் மேற்கோள்

தொல்காப்பியர் சொல்லதிகாரத்தில், முன்னைய இயல்களிற் கூறாமலும் கூறப்பட்டவற்றுள் அடங்காமலும் எஞ்சிநின்ற விதிகளை எச்ச இயலிற் கூறியுள்ளார். இவ்வியல் சொல்லதிகாரத்தின் இறுதியில் ஒன்பதாவது இயலாக உள்ளது. யாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை என்னும் நூல்களில் ஒழிபியல் என்னும் பகுதி அந்நூல்களின் இறுதியிலும், நன்னூலில் பொதுவியல் என்னும் பகுதி சொல்லதிகாரத்தின் நடுவிலும் அமைக்கப் பெற்றுள்ளன. தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் ஐந்தாவது இயலாக உள்ள பொருளியல் என்பது, அகத்திணை புறத்திணை என்னும் இரண்டிலும் கூறப்படாது எஞ்சிய சில விதிகளைக் கூறுவதாகக் கொண்டு இவ்வியலை "ஒழிபியல் எனினும் இழுக்காது"[1] என்று இவ்விளம்பூரணரே எழுதியுள்ளார்.

இவற்றையெல்லாம் நினைந்து பாராமல், பன்னிருபடலத்துப் பொதுவியற்படலம் முதல் திணையாகிய வெட்சித் திணையை அடுத்துக் கூறாதது குற்றம் என்றது பொருந்தாக் கூற்றாகும்.

புறத்திணைகள் பன்னிரண்டனையும் ஏழாகத் தொகுத்தும் அடக்கியும் கூற வேண்டிய நிலையைத் தொல்காப்பியர் மேற்கொண்டமையால் அவருக்குப் பொதுவியலைத் தனியே கூற இடம் இல்லையாயிற்று; அதனால் வெட்சித் திணையை அடுத்து ஒரு நூற்பாவிற் கூறினார். பன்னிருபடலத்தார் தாம் கூறும் பொதுவியற் படலம், 'முற்பட எண்ணிய எழுதிணைக்கும் உரித்து'[2] என்று தொடக்கத்திற் கூறியதனால் எழுதிணைகளும் கூறிமுடித்த பின்னர் அப்பொதுவியற் படலம் அமைத்ததே முறை. அவ்வாறன்றி இளம்பூரணர் கூறியவாறு வெட்சித் திணையை அடுத்து அமைத்திருப்பாரேல் அவர் தொடக்கத்திற் கூறியதற்கு முரணாம் ஆதலின் அது குற்றமாகவே கருதப்படும். எனவே இந்நான்காவது குற்றமும் குற்றமாகக் கொள்ளத் தக்கதன்று.

5 "கைக்கிளையும் பெருந்திணையும் புறம் என்றால் அகத்திணைகள் ஏழ் என்னாது ஐந்து எனல் வேண்டும். ஆதலால் அவ்விரு திணைகளையும் புறத்திணைகளுடன் சேர்த்தது குற்றம்" என்றார் இளம்பூரணர்.

"கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்
முற்படக் கிளந்த எழுதிணை என்ப"[3]

---

1. தொல்-பொருளியல்-சூ 1-உரை
2. தொல் - புறத்திணையியல் முன்னுரை. இளம்பூரணர் காட்டிய மேற்கோள்.
3. தொல - அகத்திணை—சூ. 1

என்னும் நூற்பாவிற் கூறப் பெறும் ஏழு திணைகளும் ஒருநிகரான அகத்திணைகளே என்று தொல்காப்பியர் கருதவில்லை. கருதியிருந்தால் 'முற்படக்கிளந்த எழுதிணை என்ப' எனப் பொதுப் படக் கூறுமல் 'முற்படும் அகத்திணை ஏழெனமொழிப' என்ருற் போல இவ்வேழும் அகத்திணைகளே என்பதனைத் தெளிவாகக் கூறியிருப்பர்.

ஒத்த அன்புடைய இளையரான இருபாலாரின் காதல் ஒழுக்கம் ஒன்றனையே 'நடுவண் ஐந்திணை',[1] 'மக்கள் நுதலிய அகன் ஐந்திணை',[2] 'அன்பொடு புணர்ந்த ஐந்திணை',[3] என விதந்துரைத்து, இவ் வைந்திணைக்கே முதல், கரு, உரிப்பொருள் பற்றிய விதிகளை வகுத்தும் விரித்தும் விளக்கியும் கூறியுள்ளார். கைக்கிளை பெருந்திணைகளை அகத்திணைகள் என்று தொல்காப்பியர் யாண்டும் கூறிஞரல்லர். இவற்றிற்கு விரிவான விதிகளும் கூறப்படவில்லை. பாக்களிற் சிதைந்தவற்றை இனத்திற் சேர்த்தல் போல நடுவண் ஐந்திணை ஒழுக்கத்தில் மிக்கும் குறைந்தும் பிறழ்ந்தும் சிதைந்தவற்றைக் கைக்கிளை பெருந்திணைகளிற் சேர்த்துள்ளார்.

"காமஞ் சாலா இளமையோள் வயின், ஏமஞ் சாலா இடும்பை யெய்தி .....சொல்லெதிர் பெருது சொல்லியின்புறும்"[4] ஒருதலைக் காமத்தைக் கைக்கிளை என்றும், "ஏறிய மடல்திறம் இளமை தீர்திறம்"[5] முதலிய ஒவ்வாக் காமத்தைப் பெருந்திணை என்றும் ஆசிரியர் கூறியிருத்தலை யாவரும் அறிவர். 'அடியோரும் வினைவலரும்' மேற்கொள்ளும் இழிதகவான இன்ப உறவுகளைக் கைக்கிளையாகவும் பெருந்திணையாகவுங் கொண்டு 'அகப்புறம்'[6] என்று கூறுகின்றனர்.

மேலும், "மக்கள் நுதலிய அகனைந் திணையும்
சுட்டி யொருவர் பெயர்சொலப் பெருஅ"[7]

என்னும் நூற்பாவில்; அகன் ஐந்திணையில் தலைமக்களின் இயற் பெயர் கூறலாகாதென விதித்த ஆசிரியர், அகப்புறமாகிய கைக்கிளையும் பெருந்திணையும், பாடாண்டிணையைச் சார்ந்து

---

1. தொல் - அகத்திணை — சூ. 2
2. தொல் - அகத்திணை — சூ. 57
3. தொல - களவியல் — சூ. 1
4. தொல் - அகத்திணை — சூ. 53
5. தொல் - அகத்திணை — சூ. 54
6. தொல் - அகத்திணை — சூ. 25
7. தொல் - அகத்திணை — சூ. 57

வரும் காமப் பகுதியும் இன்பத் துறை பற்றியன ஆகலின் இவற்றில் தலைமக்களின் இயற்பெயர் கூறலாமோ கூறலாகாதோ என எழும் ஐயம் நீக்குதற் பொருட்டு,

> "புறத்திணை மருங்கிற் பொருந்தின் அல்லது
> அகத்திணை மருங்கின் அளவுதல் இலவே"[1]

என்றார். இதனால் புறத்திணையின் மருங்காகிய பாடாண்டிணைக் காமப் பகுதியில் இயற் பெயர் கூறலாம் என்பதும், அகத்திணையின் மருங்காகிய கைக்கிளை பொருந்திணைகளிலும், இயற்பெயர் கூறலாகாதென்பதும் தெளிவாக்கப்பட்டன. நடுவண் ஐந்திணையின் இருமருங்கும் நிற்றல் பற்றிக் கைக்கிளை பெருந்திணைகளை 'மருங்கு' என்று இந்நூற்பாவிற் குறித்துள்ளார். இவ்வாறே "வேட்கை மறுத்துக் கிளந்தாங் குரைத்தல், மரீஇய மருங்கின் உரித்தென மொழிப"[2] என்னும் நூற்பாவில் அகப்புறக் கைக்கிளை பெருந்திணைகளை 'மரீஇய மருங்கு' என்றும், "மெய்ப் பெயர், மருங்கின் வைத்தனர் வழியே"[3] என்னும் நூற்பாவில் பாடாண்டிணைக் காமப் பகுதியைப் புறத்திணை 'மருங்கு' என்றும் ஆசிரியர் கூறியிருத்தலும் உய்த்துணரத் தகும். எனவே கைக்கிளை பெருந்திணைகளை அகப்புறம், அகத்திணை மருங்கு, புறத்திணை மருங்கு என்று கூறுதலன்றி அகம் என்று யாண்டுங் கூறாமையால் அகத்திணைகள் ஐந்தே என்பது ஆசிரியர் கருத்தாகும். ஆதலால் ஒத்த அன்பு இல்லாத கைக்கிளை பெருந்திணைகளை அகப்புறம் எனக்கொண்டு புறத்திணைகளுடன் சேர்த்துக் கூறியது குற்றம் ஆகாது.

6. "கைக்கிளையும் பெருந்திணையும் புறத்திணைகளாயின் எண்வகை மணத்துள் யாழோர் மணம் ஒழிந்த பிரமம் முதலிய ஏழு மணமும் அகம் ஆகாது புறம் எனப்படும். எனவே கைக்கிளை பெருந்திணைகளைப் புறத்திணைகளுடன் சேர்த்து எண்ணியது தவறு" என்பது மற்றொரு குற்றம்.

அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கிற் காமக்கூட்டம் ஒன்றே, மறையோர் தேயத்து நிகழும் மன்றல் எட்டனுள் யாழோர் கூட்டம் போலும் இயல்பினது[4] என்று கூறிய ஆசிரியர், ஏனைய ஏழு மணங்களின் நிலை பற்றிய நும் கருத்து என்னை?

1. தொல் - அகத்திணை—சூ. 58
2. தொல் - பொருளியல்—சூ. 17
3. தொல் - புறத்திணை—சூ. 26
4. தொல் - களவியல்—சூ. 1

என்னும் வினவிற்கு விடை கூறுதல் போன்று, பிரமம் முதலிய நான்கு மணமும் பெருந்திணையிலும் அசுரம் முதலிய மூன்று மணமும் கைக்கிளையிலும் அடங்கும் என்பாராய்,

> "முன்னைய மூன்றும் கைக்கிளைக் குறிப்பே"[1]
> "பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே"[2]

என்று ஐயத்திற்கு இடமின்றிக் கூறியுள்ளார். இதனால் யாழோர் மணம் ஒழிந்த ஏழு மணங்களும் அகப்புறம் எனப்படும் அன்றி அகமெனப்படா என்பது தெளிவாயிற்று. அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கினையும் அகம்புறம் என்னும் இரண்டனுள் அடக்கிக் கூறுதல் போலப் பிரமம் முதலிய எண் வகை மணங்களையும் கைக்கிளை ஐந்திணை பெருந்திணை என்னும் மூன்று பிரிவினுள் அடக்குதல் தமிழ் மரபு என்பதும் புலனாயிற்று. எனவே, கைக்கிளை பெருந்திணைகளைப் புறத்திணைகளுடன் சேர்த்து எண்ணியது தவறாகாது. ஆதலால் இவ் ஆறாவது குற்றமும் குற்றமெனப்படாது என்பதாம்.

இதுகாறுங் கூறியவற்றால் பன்னிருபடலம் பற்றி இளம்பூரணர் காட்டிய குற்றங்களெல்லாம் உண்மையிற் குற்றங்களாகக் கொள்ளத்தக்கன அல்ல என்பது பெறப்பட்டது.

இவ்வாறிருப்பவும் இளம்பூரணர் குற்றம் கூறியதற்குக் காரணம், இப் பன்னிருபடலம், தொல்காப்பியத்திற்கு நெடுங் காலம் பிற்பட்டுத் தோன்றியது என்றும், பின்னர்த் தோன்றிய இந்நூல், தொல்காப்பியத்துடன் மாறுபட்டுச் செல்கின்றது என்றும் அவர் கருதியமையேயாகும். இளம்பூரணர் கருதியது போலப் பன்னிருபடலம் தொல்காப்பியத்திற்குப் பிற்பட்டுத் தோன்றியதா? அல்லது தொல்காப்பியம் தோன்றிய காலத்தில் தோன்றியதா? அல்லது அதற்கு முற்பட்டுத் தோன்றியதா? இவற்றுள் எது பொருந்தும் என்பதனை, "தொல்காப்பியமும் பன்னிருபடலமும்" என்னும் கட்டுரையிற் காண்போம்.

---

1. தொல் - களவியல்—சூ. 14
2. தொல் - களவியல்—சூ. 15

# பேராசிரியர் சுந்தரம்பிள்ளை

தமிழ்ப் பெரும் புலவர், பேராசிரியர்,
வித்துவான்
சரவண ஆறுமுக முதலியார், எம்.ஏ பி.ஓ.எல்., எல்.டி.,
முதல்வர், ஸ்ரீ பழனியாண்டவர் இந்தியப் பண்பாட்டுக் கல்லூரி. பழனி.

பத்தொன்பதாம் நூற்றுண்டின் இடை, கடைகளில், தமிழ்க் கல்விக்குப் புத்துயிரளிக்கும் பெரும் பணியில் ஈடுபட்ட பலருள்ளும், பல வகைகளிலும், பேராசிரியர் சுந்தரம் பிள்ளையவர்கள் மிகச் சிறந்தவராவர் என்பதற்குப் பல காரணங்கள் காட்டலாம். முதலாவதாக இவர் கல்லூரியில் மெய்யுணர்வு நூற்புலவரா யிருந்தும் தம் தாய்மொழியாகிய தமிழ் மொழிக் கல்வியிலும், அதன் முன்னேற்றத்திலும் பெரிதும் ஈடுபட்டவராய்ச் சிறந்த புலவரானதோடு, பல துறைகளிலும் நூல்கள் யாத்தனர். தமிழ் மக்கள் எத்துறையில் ஈடுபட்டிருப்பினும், தாய்மொழி முன்னேற்றத்தை மறந்துவிடக் கூடாது என்பதை அறிவுறுத்த இக் கால மக்களுக்கு இவர் ஒரு சிறந்த எடுத்துக்காட்டன்றே? மேலும் நாடகத் தமிழின் முன்னேற்றத்துக்கு உழைத்தவர் இயல், இசை, நாடகம் ஆகிய மூன்று தமிழுக்கும் உழைத்தவராகாரோ? முத்தமிழ்த் துறை போகிய புலவர்களே உத்தமப் புலவர்களென இந்நிலத்துப் புகழப்படுகின்றனர். என்னை? இயற்றமிழும் இசைத்தமிழும் நாடகத் தமிழில் அடங்குதலாலும், இயல், இசைகளுக்கில்லாத சில சிறப்பியல்புகள் நாடகத் தமிழுக்குள்ளனவாதலாலும் என்க. பாலில் வெண்ணெய் திரண்டு வருவதுபோல, இயல், இசையடியாகப் பிறக்கும் நாடகத் தமிழ் இவையிரண்டின் தெளிவும், முதிர்ந்த வளர்ச்சியும், பயனுமாகும். இவ்விரண்டும் கூடிய வழியே நாடகம் பிறக்குமாதலின் அது கருதி அது ஈற்றில் வைக்கப்பட்டுள்ளது. கையில் நூலெடுத்துப் படிக்கத் தெரியாதோரும், படித்தற்குரிய காலமில்லாதோரும் நாடகத்தினால் நல்லறிவு வாய்க்கப் பெறுவர். உலக இயல்பையும், மக்களியற்கையையும் உள்ளபடியே படம் பிடித்து நாடகம் காட்டும்; இயல் இசைகளைப்போல் கேள்வி இன்பத்தோடு நின்றுவிடாது காட்சியின்பமும் உடன் அளிக்கும். காட்சி

இன்பமே காதால் கேட்பதைவிட உளத்தில் நன்ருய் அமைக்கப் படும். செவி வழிச்சென்று சிந்தையிற்றங்குவதைவிட, கண் வழிச்சென்று கருத்திற்றங்குவது, தெளிவானதும் நீடித்து நிற்ப தானதும் ஆகும். உலகத்தின் சாயலாக இருக்கும் நாடக மேடையில் மக்கள் ஒழுக்கத்தின் விழுப்பத்தை நேரில் கண்டு கொள்ளலாம். நல்லதன் நலனும், தீயதன் தீமையும் கண்ணுக் கெதிரே நாடகத்தில் காணப்படுகின்றன. உழைத்த உள்ளத் திற்கு ஊக்கம் பிணைத்து, மன எழுச்சிகளாகிய உளச்சுவைகளைப் பயன்படுத்திக் கற்பனையை வளமுறச் செய்து, சிந்தனை அனுமானங்களையும் செம்மையாகப் பேசி, உரையாடும் ஆற்றல் களையும் வளர்த்துப் பயன் விளைவிக்கும் இன்னேரன்ன இயல்பு களால் தலைசிறந்து விளங்கும் நாடகம்.

இச் சிறந்த கலை, கடைச்சங்க நாட்களுக்குப் பிறகு நம் தமிழ் மொழியில் வளர்ச்சியுருது போனதோடன்றி அதற்கு முன் னெழுந்த எண்ணிறந்த நாடக இலக்கியங்களும், அகத்தியம், பரதம், முறுவல், சயந்தம், குணநூல், செயிற்றியம், மதிவாணர் நாடகத் தமிழ்நூல், கூத்த நூல் முதலிய நாடக இலக்கணங் களும் அழிந்தொழிந்தன.

சென்ற நூற்ருண்டில் நாடகத் தமிழின் மறுமலர்ச்சிக்கு அடிகோலி நாடகத்துக்கே சிறந்த இலக்கியமாய் என்றும் விளங் கும்படி சிறந்த நாடக இயல்புகள் எல்லாம் செகப்பிரியர் நாடகங் களிற் போல் இடம் பெறவும், ஒன்பான்சுவைகளும் ஒருங்கே பொருந்தவும், பத்து வகை அழகுகளும் பாங்குடன் அமையவும், சிறந்த தலைவியை அமைத்து ஏற்ற மாந்தர்களையும் சேர்த்துச் சிறந்த நாடகமாகிய "மனேன்மணீயத்தை" உலகிற்களித்த பெருமை பிள்ளையவர்களுக்கே உரியது.

அன்றியும் பாயிரத்தில் அமைத்த தமிழ்த் தெய்வ வணக்கம் தமிழ் நாடெங்கும் இன்று ஒலித்துக்கொண்டிருப்பதோடு, தமிழன்னையின் திருச்செவிகளிலும் திருவுள்ளத்திலும் இனிது ஒலித்துக்கொண்டிருக்கிறது. மணிவாசகப் பெருந்தகை, இறைவனை, முன்னைப் பழம் பொருளுக்கும் முன்னைப்பழம் பொருளாயும், பின்னைப் புதுமைக்கும் பெயர்த்தும் அப்பெற்றி யனுயும் ஆக்கினுர். முன்னைப் பழமொழிக்கு முன்னைப் பழமொழி யாகவும் விளங்கும் நந்தம் செந்தமிழ் மொழி 'உயர் தனிச் செம் மொழி' எனற்பாலது என்று கருதிய பிள்ளையவர்கள் அதற்குக் கடவுளையே உவமை கூறினுர்.

"பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினும் ஓர்
எல்லையறு பரம்பொருள்முன் னிருந்தபடி இருப்பதுபோல்
கன்னடமுங் களிதெலுங்கும் கவின்மலையா ளமுந் துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே ஒன்றுபல ஆயிடினும்
ஆரியம்போல் உலகவழக்கு அழிந்தொழிந்து சிதையாவுன்
சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே".

என்பது அவர் அருள்வாக்கு.

சிறந்த நாடகப் புலவராகிய இவர் இவ் வாழ்த்தின் வாயிலாய். மொழிநூற் புலவர்களுக் கெல்லாம் அறிவுறுத்தும் சிறந்த மொழிநூல் உண்மைக்காகவும் தமிழ் மக்களாகிய நாம் கடமைப்பட்டுள்ளோம். "சதுமறை ஆரியம் வருமுன்" இந்திய நாடாகிய "பெருநிலவுலகின் இருநிலப் பரப்பையும்" திராவிட மொழியாந் தமிழ் ஆண்டு வந்தது என்னும் மொழிநூல் உண்மை யாகவும், சிறப்பாகக் "கன்னடமும் களிதெலுங்கும் கவின் மலையாளமுந் துளுவும்" தமிழாகிய தாயினின்றும் தோன்றின என்னும் திராவிட மொழிநூல் உண்மையாகவும் எடுத்துக் காட்டி மொழிநூலாராய்ச்சிக்கும் அடிகோலியுள்ளார் இவர்.

இன்னும் இவர் தமிழ் இலக்கிய ஆராய்ச்சியிலும், தமிழ் நாட்டுத் திருவாங்கூர் நாட்டு வரலாற்று ஆராய்ச்சியிலும் "அறிவியல்களின் வகைகளும் முக்கிய முறைமையும் பொருளும்" என்னும் அறிவியல் துறையிலும் ஒருங்கே சிறந்தவர் என்பதை இவர் எழுதிய பத்துப்பாட்டு ஆராய்ச்சி, திருஞானசம்பந்தர் கால ஆராய்ச்சி, திருவிதாங்கூர் பண்டை மன்னர் கால ஆராய்ச்சி, நூற்றொகை விளக்கங்கள் காட்டிக்கொண்டு நிற்கின்றன. இங்ஙனம் பல துறைகளிலும் சிறந்த இவர் இன்றைய தமிழ் மக்கள்,

"நீங்கரும் பீன்ற திரள்கால் உளையலரி
தேங்கமழ் நாற்ற மிழந்தாஅங்—கோங்கும்
உயர்குடி யுட்பிறப்பின் என்னும் பெயர்பொறிக்கும்
பேராண்மை யில்லாக் கடை"

என்றதற்கு இலக்காயிராமல், நம் பண்டைப் பெருமைகளை மட்டும் பேசி நின்றுவிடாமல், ஒவ்வொருவரும் தமிழ் மொழியின் நிலையையும் நாட்டின் நிலைமையையும் நம்மாலியன்ற அளவு உயர்த்த வேண்டும் என்று அறைகூவியதோடு நில்லாமல் தாமே தொண்டாற்றிச் செயலிலும் காட்டியிருக்கிறார். இவர் பூதவுடம்பு அழியினும் "மன்னு வுலகத்து மன்னுதல் குறித்தோர் தம்புகழ் நிறீஇத் தாமாய்ந்தனரே" என்றதுபோல புகழுடம்பு என்றும் நிலவும்.

# ஏரகம் எது?

டாக்டர் மா. இராசமாணிக்கனார்,
துணைத் தமிழ்ப்பேராசிரியர், சென்னைப் பல்கலைக் கழகம்

திருமுருகாற்றுப்படையுள் முருகன் எழுந்தருளியுள்ள இடங்கள் சில குறிக்கப் பெற்றுள்ளன. அவற்றுள் பரங்குன்றம், அலைவாய், ஆவிநன்குடி, ஏரகம் என்பன குறிக்கத்தக்கவை. இவற்றுள் முன்னவை மூன்றும் யாவரும் அறிந்தனவே. ஏரகம் எது என்பது இதுகாறும் தெளிவுபடவில்லை.

பத்துப்பாட்டிற்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர் கி. பி. 14-ஆம் நூற்றாண்டினர் அல்லது அதற்கும் பிற்பட்டவராவர். அவர் திருப்பரங்குன்றம் முதலிய இடங்கள் இன்ன நாட்டின என்று கூறாமல், ஏரகம் பற்றி வரும் இடத்தில் மட்டும், "ஏரகம்-மலைநாட்டகத்தொரு திருப்பதி"[1] என்று கூறியிருத்தல் கவனத்திற்குரியது.

"திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி என்னும் மூன்றும் தமிழ்நாட்டவை; அவை எங்கு உள்ளன என்று தமிழர்க்குக் கூறவேண்டும் தேவை இல்லை. தமிழகத்திற்கு அப்பாற்பட்டது -- ஏரகம் ஆதலின், அது இன்ன நாட்டகத்தது என்று கூறுதல் நமது கடமை' என்று கருதியவர் போல நச்சினார்க்கினியர், "ஏரகம்-மலைநாட்டகத்தொரு திருப்பதி" என்று கூறினர்போலும்!

சிலப்பதிகாரம் குன்றக் குரவையுள், "சீர்கெழு செந்திலும்,[2] செங்கோடும் வெண்குன்றும் ஏரகமும் நீங்கா இறைவன்" என முருகன் திருப்பதிகளுள் அக்காலச் சிறப்புப் பெற்றவை குறிக்கப்பெற்றுள. சிலப்பதிகார அரும்பத உரையாளர் வெண்குன்றைச் சுவாமிமலை எனக் கூறியுள்ளார். சிலப்பதிகாரத்திற்கு முதலில் அரும்பதவுரையும் பின்பு அடியார்க்கு நல்லார் விரிவுரையும் தோன்றியிருத்தலே இயல்பு. எனவே, அடியார்க்கு

---

1. பத்துப்பாட்டு, ஐந்தாம் பதிப்பு, பக்கம் 62.
2. தெய்வம் பராஅயது, வரி 1-2.

நல்லார்க்கு அரும்பதவுரை யாசிரியர் முற்பட்டவர் எனக் கொள்வதே பொருந்தும். அடியார்க்கு நல்லார் நச்சினார்க் கினியருக்கு முற்பட்டவர்.[4] நச்சினார்க்கினியர்காலம் கி பி. 14 அல்லது **15** ஆம் நூற்றாண்டு என்னலாம். எனவே அடியார்க்கு நல்லார் காலம் ஏறத்தாழக் கி. பி. 13-ஆம் நூற்றாண்டு என்னலாம். அரும்ப தவுரையாளர் அவர்க்கு முற்பட்ட வராதலின், அவர்காலம் ஏறத்தாழக் கி பி. 12-ஆம் நூற்றாண்டு என்னலாம். ஆகவே கி பி. 11 அல்லது 12-ஆம் நூற்றாண்டினை ரான அரும்பதவுரையாசிரியர் சுவாமிமலை வேறு-ஏரகம் வேறு என்பது தெளிவாகக் கூறியுள்ளார் என்பது இங்கு அறியத்தகும்,

ஆயின், கி. பி. 15-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த அருணகிரி நாதர், 'சுவாமி மலைதான் ஏரகம்' என்று பலபாக்களில் குறித் துள்ளார்.[5]

இனி நக்கீரர் ஏரகத்தைப்பற்றி யாது கூறியுள்ளார் என் பதைக் காண்போம். "ஓதல், ஓதுவித்தல். வேட்டல், வேட்பித் தல். ஈதல், ஏற்றல் எனும் ஆறுதொழிலில் வழுவாதவரும் நற்குடிப்பிறந்தவரும் நாற்பத்தெட்டியாண்டு வரையில் பிரமசாரிய விரதம் காத்தவரும் அறம் கூறும் கோட்பாட்டினையும் முத்திச் செல்வத்தையும் உடையவருமாகிய அந்தணர் முருகப் பெருமானை வழிபடும் காலமறிந்து மந்திரங்களைக் கூற (அருச்சகர்) நீராடுங்கால் தோய்க்கப்பட்ட ஆடை உடம்பிலே கிடந்து காயும்படி உடுத்து முருகனைத் தலைமேற்குவித்த கையினராய்த் துதித்து. ஆறெழுத்து மந்திரத்தை நாவால் உச்சரித்து, நறிய மலர்களை எடுத்து அருச்சனை புரிவர். முருகன் அந்நிலையில் மகிழ்ந்து ஏரகம் என்னும் ஊரில் இருப்பன்.[6]

இது நச்சினார்க்கினியர் உரையின் கருத்து. இதனில் கூற, உச்சரித்து எனவரும் இரண்டும் வினைகள். இருதிறத்தாரைக் குறிப்பவையாகக் கொள்வதே நேரிது. அங்ஙனம் கொள்ளின்,

---

3. சிலப்பதிகாரம், ஏழாம் பதிப்பு, பக்கம் 17.
4. ௸
5. "காவிரியாற்றுக்கு ளேவரு,
   வளமை சோழநன் னாட்டுக்குள் ஏரக, நகரிற்
   சீர்பெறு மோட்சத்தை யேதரு பெருமாளே"
   "யாவும் அலைகொண் டுகைத்த காவிரி புறம்பு சுற்றும்
   ஏரகம் அமர்ந்த பச்சை மயில்வீரா".
6. திருமுருகாற்றுப்படை, வரி 177-189

(1) மந்திரங்களைக் கூறுவோர் வேறு; (2) ஆறெழுத்துச் சொல்லி மலர் தூவி அருச்சிப்பவர் வேறு என்பதை அறியலாம். பெரிய கோவில்களில் இங்ஙனம் இருதிறத்தினர் இருந்து வழிபாடு செய்தல் உண்டு.

இரு செயல்களையும் அருச்சகரே செய்தனர் எனக்கொள்ளின், 'கூற' என்பதைக் 'கூறி' என மாற்றிக்கொள்ளல் வேண்டும். இங்ஙனம் இரு செயல்களையும் ஒருவரே செய்தல் சிறிய கோவில்களில் உண்டு.

ஏரகத்தில் அருச்சனை புரிந்தவர் நீராடி ஈரத் துணியுடனே இருந்து அருச்சனை செய்தனர்* என்பது, "புலராக் காழகம் புலர உடீஇ" என்னும் நக்கீரர் வாக்கால் அறியலாம்.

இங்ஙனம் அருச்சகர் நீராடி ஈரத்துணியுடன் அருச்சனை புரிதல் மலைநாட்டில் இன்றும் இருந்துவரும் வழக்கமாகும். தமிழ் நாட்டில் இவ்வழக்கம் இல்லை. மலையாள நாட்டில் உள்ள பெரிய கோவில்களில் அருச்சனை செய்பவர் "போற்றி" என்று அழைக்கப்பெறும் துளுநாட்டுப் பிராமணராவர். இவர்கள் கன்னடம் பேசுவர். இவர்கள் தாங்கள் பணிபுரியும், ஊர்களில் பெரும்பாலும் குடும்பத்துடன் இருப்பதில்லை; தங்கள் ஊரைவிட்டுக் குறிப்பிட்ட காலம் வரையில் தாம் பணிபுரியும் கோவில் உள்ள ஊரில்-கோவிலை அடுத்த சத்திரத்தில்-தங்கியிருப்பர்; அப்பொழுது கடுமையான பிரமசரியம் காப்பர். இவர்களை இன்றும் இந்நிலையில் நாகர் கோவிலில் உள்ள நாகராசர் கோவிலிலும் திருவனந்தபுரம் பதுமநாப சுவாமி கோவிலிலும் மலையாள-கன்னட நாடுகளில் உள்ள பிறகோவில்களிலும் காணலாம்.

இவ்வாறு ஈர ஆடையுடன் அருச்சனை புரியும் அருச்சகர் முருகனுக்குரிய ஆறெழுத்து மந்திரத்தை உச்சரித்து மலர் தூவி அருச்சிப்பர் என்று நக்கீரர் கூறியுள்ளார். ஆறெழுத்து மந்திரம் 'நமோகுமாராய' என்பது என்று நச்சினார்க்கினியர் குறித்துள்ளார். 'நமக்குமாராய' என்பதும் பாடமாகும். பின்னதே இலக்கணமுடையது. மெய்யெழுத்துக் கணக்கில் வராது எனவே. அது ஒழிந்த ஆறு எழுத்துக்களே கணக்கிடப்பெறும்.

மலை நாட்டில் உள்ளதும் 'நமக்குமாராய' என்னும் மந்திரப் பெயருக்கு மிகப் பொருத்தமாகவுள்ளதுமாகிய தலம் யாதெனக் கண்டறிதல் நல்லது.

---

*கோவிலில்வழிபடும் பொதுமக்கள் ஈரத்துணியுடன் சென்று வழிபடுவதை ஆசிரியர் குறித்தார் எனச் சிலர் பொருள் கொள்வது பொருந்தாது. திருக்கோவில், மாலை 1 மணி 2, பக். 5 (958)

தென் கன்னட மாவட்டத்தில் புத்தூர் வட்டத்துக்குக் கிழக்குக் கோடியில் மேற்கு மலைத்தொடரின் மேற்குப் பக்கத்தில் சஹ்யாத்ரி மலைகளில் ஒன்றான குமாரபருவதம் இருக்கிறது. இப் பகுதி துளு நாட்டைச் சேர்ந்தது. அதனை அடுத்துக் குமார க்ஷேத்திரம் அல்லது சுப்பிரமணிய க்ஷேத்தரம் என்னும் சிற்றூர் உள்ளது. அதில் கோவில் கொண்டுள்ள பெருமானுக்குக் குமாரசுவாமி என்பதே பெயர். குமாரசுவாமி எழுந்தருளியுள்ள இடம் குமாரக்ஷேத்திரம் என்றும், அந்தஇடத்தை அடுத்துள்ள மலை குமாரமலை என்றும், அம்மலையிலிருந்து வரும் சிற்றாறு, குமாரதாரை என்றும் பெயர் பெற்றுள்ளன.[7] இங்ஙனம் கடவுள் பெயர் அவருள்ள இடத்திற்கும் இடத்தை யடுத்த மலைக்கும் அம்மலையில் தோன்றிய ஆற்றுக்கும் பெயராக அமைந்துள்ளமை பிற இடங்களில் காண்டல் அருமையினும் அருமை.

இங்குள்ள புற்றில் ஒரு சிவலிங்கம் உள்ளது. அது 'குக்கெ லிங்கம்' எனப்படுகிறது. அதனால், இத்தலம் 'குக்கே' என்றும் வழங்கப்படுகிறது. குக்கெ-கூடை (கன்னடம்). கூடையில் வைக்கப்பெற்ற லிங்கம் 'குக்கெ லிங்கம்' எனப்பட்டது. இடத்திற்கும் இப்பெயரே சுருங்கி வழங்கப்படுகிறது. இப்புற்று ஆதிசேடனுக்கு உரியதென்று தலபுராணம் கூறுகிறது. இத் தலத்தைப் பற்றிக் கி. பி. 8-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சங்கரர் தமது புஜங்கதோத்திரத்திற் பாடியுள்ளார்; இங்கு ஒரு மடத்தையும் நிறுவினர்; உடுப்பிக்கு அருகில் 13-ஆம் நூற்றாண்டிற் பிறந்த மத்துவாச்சாரியாரும் இவ்விடத்தில் ஒரு மடத்தை நிறுவினர். ஹொய்சள மன்னருள் காலத்தாற் பழமையானவர்கள். இத்தலத்தையே தங்கள் தலைநகராய்க் கொண்டிருந்தனர்.[8] இத் தலத்தைப் பற்றிய விவரங்கள் வடமொழியிலுள்ள கந்தபுராணம் சநத்குமார சம்ஹிதை-சஹ்யாத்திரி காண்டத்தில் 'தீர்த்த க்ஷேத்திர மஹிமா நிரூபணம்' என்னும் பகுதியில் கூறப் பெற்றுள்ளன.[9]

இத்தலத்தில் உள்ள முருகப்பெருமானுக்கு ஒருநாளில் நடைபெறும் பூசைகள் பல. ஒவ்வொரு பூசையின் போதும் அருச்சகர் நீராடி ஈர ஆடையுடன் இருந்தே அருச்சனை புரிதல் வழக்கம். அவரும் அவருடைய உதவியாளரும் நீராடிய பின்பே ஈரவுடையுடன் கருவறையுள் நுழைவர். உதவியாளர் மந்திரங்

---

7. ஸ்ரீ சுப்பிரமணிய க்ஷேத்திரம் (ஆங்கில நூல்) pp. 9, 11, 12.
8. ஷை. பக்கம் 1-2
9. ஷை. பக்கம் 9.

களைக் கூற, அருச்சகர் அருச்சனை புரிவர்.[10] குமாரமலையடிவாரத்தில் குமாரதாரையின் பக்கத்தில் உள்ள குமாரசுவாமியை அருச்சிப்பவர் அப்பெருமானுக்கு உரிய 'நமக் குமாராய' என்னும் மந்திரத்தை உச்சரித்து அருச்சனை புரிதல் இயல்புதானே!

நக்கீரர், ''பிரமசரிய விரதம் காத்த நற்குடி மறையவர் மந்திரம் கூற, ஈர ஆடையுடன் (அருச்சகர்)ஆறெழுத்து மந்திரம் கூறி மலர் தூவி அருச்சிப்பர்'' எனக் கூறுதலைக்காண, மந்திரம் கூறுவோர் வேறு, அருச்சனை புரிவோர் வேறு என்பது தெளிவாகிறது. குமாரக்ஷேத்திரத்தில் இந்த இருதிறத்தாரையும் இன்னும் காணலாம்.

கன்னடம், குடகு, துளு, மலையாள நாடுகளிலும் பெல்லாரி மாவட்டத்திலும் உள்ள மக்கள் இத்தலத்திற்கு வந்தபடி இருக்கின்றனர். மைசூர், இந்தூர் மன்னர்கள் பல அறங்களைச் செய்துள்ளனர். இக்கோவில் கல் வெட்டுக்கள் விசய நகர வேந்தரான இரண்டாம் புக்கர் காலமுதல் (கி. பி. 1407) காணப்படுகின்றன. அவை 17ஆம் நூற்றாண்டோடு (கி. பி. 1681) முடிகின்றன''[11]

இங்குக் கூறப்பெற்ற குமார க்ஷேத்திரம் மலைநாட்டகத்தது ஆதலாலும், க்ஷேத்திரம்-மலை-ஆறு-மூர்த்தி 'குமார' என்றே தொடங்கப் பெறுவதாலும், ஏரகத்து அருச்சகர் 'நமக்குமாராய' என்னும் மந்திரத்தை உச்சரித்து அருச்சனை புரிந்தனர் என்று நச்சினார்க்கினியர் கூறுதல் இத்தலத்திற்கு மிகவும் பொருத்தமாக அமைந்துள்ளது என்பதாலும், ஈர ஆடையுடனே இருந்து அருச்சித்தல் இங்கு இன்றும் நடைபெறுதலாலும், இத்தலமே நக்கீரரால் குறிக்கப்பெற்ற ஏரகமாக இருக்கலாம் என்று கருதுதல் பொருத்தமாகும்.[12]

---

10. ஷை பக்கம் 5-8

11. ஷை பக்கம் 48

12. நாகர் கோவிலுக்கு அண்மையிலுள்ள வேழிமலை (வேள்மலை?)யை 'ஏரகம்' எனச் சிலர் கருதுவர். குமார க்ஷேத்திரம் வேழிமலையினும் பன்மடங்கு சிறப்புற்றதாகும். நாளும் யாத்திரிகரை மிகப் பலராக வுடையது; நாளும் நடைபெறும் பூசைகளிலும் உயர்வுடையது. மந்திரம் ஓதுவோரையும் அருச்சகரையும் தனித்தனியாகப் பெற்றது. மேலும், குமாரக்ஷேத்திரம், 'குமாரமலை, குமாரதாரை என்னும் பெயர்கள் அமையப்பெற்ற (ஊரும், மலையும், சிற்றாறும் ஒரே பெயரில் அமைந்த) இடமே, 'நமக்குமாராய' என்னும் மந்திரத்திற்கு ஏற்ற தலமாகக் கருதுதல் பொருத்தமாகத் தோன்றுகிறது.

ஏரகம்-அழகிய அகம் எனப்பொருள் கொள்வர் சிலர் ஏரகம் என்பது வடமொழியில் கோரைப்புல்லைக் குறிக்கும். காஞ்சி மரங்கள் செடிகள் நிறைந்த இடம் காரைக்காடு என வழக்குப் பெற்றாற் போலவும், 'ஏரகம்' (கோரை) மிகுதியாக இருந்த காரணத்தால் இத்தலம் 'ஏரகம்' என வழங்கப்பட்டிருக்கலாம்.

'தமிழராகிய நக்கீரர் துளு நாட்டிலுள்ள ஏரகம் பற்றிப் பாடியிருத்தல் கூடுமா? என்று சிலர் ஐயுறலாம். சங்க காலத்திலும் பின் நூற்றாண்டுகளிலும் துளுநாடு தமிழர் அறிந்ததே யாகும். "தோகைக்காவிற் துளுநாடன்ன" என்று அகநானூற்றில் (செய். 15) துளுவநாடு கூறப்பட்டுள்ளது. 'தொண்டை நாட்டைக் கைப்பற்றிய கரிகாலன், காடு கெடுத்து நாடாக்கிய பின்பு அங்கு வேளாளரைக் குடியேற்றினான். அவ்வேளாளர் துளுநாட்டு வேளாளர் எனப்பட்டனர் என்று செவிவழிச் செய்தி செப்புகிறது. மேலும் பழந்தமிழ்ச் சொற்கள் துளு மொழியில் மிக்குள்ளன. இவை அனைத்தையும் நோக்க, நக்கீரர் போன்ற புலவர் பெருமக்கட்குத் துளுநாடும் அதன்கண் இருந்த நல்லிடங்களும் நன்கு தெரியும் எனக்கோடலே பொருத்தமாகும்.

# The Scope and Function of the Teacher in Improving the Quality of our Engineering Education

R. Sridhara Rao
*Professor and Head of the Department of Electrical Engineering, Engineering College,. Karaikudi.*

**SYNOPSIS**

Though the quantity output of our engineering institutions in terms of the number of students trained in them has registered a marked increase the quality side of the output does not seem to present an encouraging picture. This paper mainly deals with the role of the engineering teacher in improving this latter aspect of engineering education. The various factors which affect the quality of engineering education are first analysed, and the extent to which the teachers could be held responsible for this situation is discussed. Lastly, the ways and means by which individual teachers could contribute towards improvement of the quality of the engineering education imparted in our institutions is fully dealt with.

## 1. INTRODUCTION :

Much has been achieved in the field of engineering education in our country in the past few years. Number of technical institutions providing instruction in engineering at varied levels have sprung up and the number of students graduating out of them have increased by leaps and bounds. While we can congratulate ourselves for the progress we have made towards increasing the quantity output of our engineering institutions, we should not be too complacent about the quality side of the picture. In fact there is a growing sense of dissatisfaction amongst all who are concerned with the enterprise of engineering education with the deteriorating quality of the education imparted in many of our technical institutions. The teacher, being the hub of the educational activities of any teaching institution has to naturally bear to a large extent the responsibility for improving this state of affairs, though it is neither fair nor correct to place all

of the blame for the poor quality of our engineering education on him. Let us examine the various factors which affect the quality of our engineering education one by one in order to define the scope and the function of the teacher in improving it, in a more objective manner.

## 2. QUANTITY Vs. QUALITY :

One of the factors which affects the quality of our engineering education is brought about by the very nature of the expansion of output of our technical institutions. One would observe that the increased output is got not merely by increasing their number but also by increasing the output of each one of them, without a corresponding increase in the teaching staff and equipment. The available teachers are heavily loaded with work and hence unable to give enough personal attention to individual students. This difficulty is mostly felt in practical and tutorial classes. The paucity of equipment necessitates the students working in batches of fours and fives thereby reducing the effectiveness of such classes. The individual teacher can do very little to correct the situation ; on the other hand it greatly affects the teaching efficiency and consequently the quality of education.

## 3. OUR EDUCATIONAL SYSTEM :

The traditional system of education followed by many of our engineering institutions, in which multiple control is exercised by the Centre, the State and the University is still another factor which in a way affects the quality of our technical education, at least from the academician's point of view. The State dictates the policy for selection of students, while the University, which in our set up is mostly an examining body set the syllabi and the method of evaluation of merit. The Centre seeks to standardize patterns of equipment, staff and in many instants run into conflict with the ideas and the University. Ultimately a compromise is struck, and they settle down to a rigid pattern of education whereby a large number of engineering institutions turn out every year a large number of engineering graduates with stereotyped attainments and stereotyped outlook. This system, though good for catering to mass scale education, is not so good for improving the quality of it. As far as the individual teacher is concerned, this

system amounts to his having practically no choice of the students he has to teach, no freedom to deviate from the rigid and present syllabi, and very little opportunity to be the final judge in the evaluationof the merit of the student in the subject or subjects he has taught. As far as the students are concerned, it not only restricts their field of study, but also creates in them an outlook which is most undesirable. They come to regard the final examination as the end all and be all of their technical education. They neglect their studies for most part of the year, and do not devote much attention to day to day assignments. They feel that attendance in classes is a nominal requirement imposed by the University. At the end of the year they become panicky, hurriedly go though notes here and there, and somehow manage to pass the examination. The teacher when he finds so unresponsive also loses interest and enthusiasm for teaching. The net result is reduction of quality of education.

This again is a situation which the teachers alone cannot correct. It requires concerted efforts on the part of all who are connected with engieering education. One possiblem solution for this problem is to make each engineering institution a unit by itself and remove all external controls on the educational activities and the policies of the institution. These matters may be left entirely in the hand of the institution itself and its faculty. while the State and the Central Government should make liberal grants for the upkeepof the institution, the responsiblity for their proper utilization may best be left to the good judgment to the institution, with no strings attached. One might as well do away with the affiliating type of Universities and make them more of the residential type. This would give scope for the faculties to have a better choice of students, as they can set their own standards of selection. It would help in the formulation of more flexible syllabi and courses of study to suit the needs of time, giving the individual teachers the freedom to put forth their best, and the freedom to evaluate the merit of their students in a more objective manner. The syllabus is there only for general guidance, and the teacher will have the freedom to deviate from it if he feels it necessary and if the class level justifies it. Moreover, the syllabus could be revised as often as is desirable, may be even every year. Further, the prerogative of the teacher for the final judgment of the student he has taught, makes the student more alert and helps to maintain the discipline of the class. The student no longer can

afford to neglect his day to day studies and assignments, as the teacher can exercise full control over him. No doubt, this puts a heavy responsibility on the teachers, more of a moral type than physical. One might say that the teacher can evade his responsibility or even misuse his freedom; but one must remember that in that case he could be pin-pointed if he fails in his responsibility, whereas in our present system he can always put the blame on the students or the system itself and get away with it.

**4. DUTIES OF INDIVIDUAL TEACHERS:**

The foregoing gives a picture of certain broad aspects which influence the quality of our engineering education in its present state, and the scope of the teacher in improving the quality of it in relation to existing conditions. It is clear there are many extraneous factors which tend to undermine their efficiency and consequently the quality of the instruction imparted by them. Let us now pass to certain duties and responsibilities of the teacher, which he has to perform and live upto, whatever be the system of education that prevails. These, are such duties which always help to improve the quality of education and therefore could be discussed subjectively. These centre round the desirable qualities of a teacher and the method of instruction adopted by him.

(a) **Qualities of a good teacher:** A good teacher is one "who has the sincerity of purpose that springs from sheer honesty of heart; the intellectual capacity and energy to gain a thorough knowledge of the subject; the deep personal interest in the student motivates him to do the best teaching of which he is capable: the scope of knowledge to contribute to both the professional and personal development of his students; a forceful personality embodying those traits which enable him to work gracefully with people; and great enthusiasm for his work". It is indeed difficult to find a perfect teacher. There are a few truly great teachers who make a lasting impression upon the minds of the students; there are also some truly poor teachers whose slip-shod teaching methods arouse a resentment and frustration on the part of the students. Somewhere between these two extreme limits lies the great majority of average teachers; but these average teachers must take steps to become good teachers if the objectives of the engineering education have to be accomplished.

They should keep abreast of knowledge in their own field by developing the reading habit; they should at least glance through the vast amount of material which comes pouring in through current journals and text books. Any opportunity to avail themselves of practical training in their own field should not be missed; these could very well be arranged during the summer vacation months and should be encouraged by the administrative authorities. They should try to do some creative thinking of their own by engaging themselves in research activities. They should study effective teaching methods, and should develope a style of teaching which best conforms to their personal characteristics and abilites.

**(b) The method of teaching:** In order to attain maximum efficiency in engineering education and to improve the quality of instruction effective teaching methods should be employed. It should be remembered that effective teaching is both an art and a science. Though much depends upon good lesson planning and careful design of course-work, the personality of the teacher and his method of presentation of the subject goes a long way in improving the quality. The importance of planning cannot be over-estimated. Without a definite plan much time is wasted in rambling and on extraneous matter. A teacher would do well to prepare in advance a schedule of call-work for the whole year, to start with. The number of lecture available in the year should be first determined, after allowing for examinations, holidays, and any unforeseen college activities that interrput academic work. A time allotment for the treatment of each of the main topics should be made. A set of problems most suitable to illustrate the application of the fundamental principles to the solution of practical problems should be selected and given to the class during the tutorial hours. Assignments given should be suitably graded and remarks written down on the assignment sheets or note books submitted by the student to enable him to correct himself. Proper choice of text books and reference books for a particular subject is very important. In our set up shortage of text books is a serious problem; also many of the text books which we are now following were originally written about thirty years ago. It is a good idea for some of our teachers to start writing text books on subjects that they have taught for number of years, conforming to the present trends in our syllabi. In the absence of good text-books or a single book covering the entire syllabus for a particular course, the teachers

can help the students a lot by distributing mimeographed notes dealing with the non-important topics in the syllabi; these notes could later from the basis for text-books which the teacher might attempt to write. In addition, the teacher should indicate the reference material for each topic dealt with. The students should be trained to prepare for each class lecture in advance. The lecture classes should be utilised more for discussion rather than parroting of material lifted off from text books. This practice would help the student to develop the habit of learning by himself rather than relying entirely on the teacher. The thinking power of the student- could also be developed by use of intelligent quizes and oral quess tions in the classes.

What applies to the lecture classes applies to the practical classes as well. Properly conducted laboratory classes help the students in many ways. It helps to give a purpose to the teaching of theory, develops technique in the use of equipment, cultivates good work habits, teaches. the importance of proedure in scientific investigations, provides experience in the evaluation of experimental data, provides practice in writing engineering reports, and awakens scientific curiosity. The students should be well prepared for the laboratory work. They should be briefed as to what is expected of them and how they should go about to do it at least in the initial stages. Actual procedure should be left entirely to the students; if they get stuck up they should be given some time to locate their degects in their producre themselves. They should be trained to study the apparatus, they use, rather than be merely satisfied with the readings they take. They should also be trained to interpret and correlate the readings with the theories which are based on many simplifying assumptions in most cases.

Both in the lecture and laboratory classes the teacher should make the best use of instructional aids such as the black-board, working models, chart, exploded views, film strips, movies etc. These help a good deal in presenting ideas, applications etc. in a very effective manner. In addition there are other types of instructional aids such as inspection trips extension lectures given by those, in industries, projects etc. These also serve to broaden the outlook of the student. These also should be properly planned and here again it is the duty of the teacher. There are other learning activities also on which the

students could be engaged. Individual and team projects are examples. Allotment of project work should be done carefully,if it is an individual project duplication should be avoided as far as possible and if it is a group project co-ordination should be ensured. These are some of the teaching methods which a teacher can usefully employ in order to achieve the best quality of engineering education.

5. **CONCLUSION :** In conlusion it may be stated that the above is by no means the last word on the teacher's role in improving the quality of our engineering education. Our fied of education has of late become so broad and complex, that it is impossible to cover all the aspects relating to quality and the teacher's responsiblity towards improving it. One might, however, conclude that, though the scope of the teacher is greatly restricted by constraints imposed by our existing system of education and existing conditions, there are still a number of ways by which the teacher can help towards improvement of our egineeing education by trying to improve himself and his knowledge, and by adopting effective teaching mathods.

---

*ACKNOWLEDGEMENT :*

The author wishes to express his grateful thanks to Sri C.V.CT.V. Venkatachalam Chettiar, Secretary, Dr. Alagappa Chettiar Educational Trust, for having encouraged the presentation of this paper at the Seminar on teaching Techniques, held at the Government College of technology, Coimbatore in March, 1962, by according permission for the same, and to Professor P. R. Ramaswamy, B.Sc.(Hons) (Manchester) A.M.I.C.E., Principal and Chief Organiser of the Seminar for permitting its publication in this Souvenir.

# Indian Agriculture and Prohibition Policy

Dr. A. Krishnaswamy

*Reader in History, Annamalai University, Annamalainagar*

Our Government claim that they have achieved a miracle by introducing prohibition of toddy and arrack shops. They claim that they have raised the standard of living of the labourers and strengthened the economy of our country. But the facts speak for themselves and the claims of our politicians that Prohibition and the recent land reforms have introduced a 'heaven on earth' are doubtful. By propping up prohibition the Government loses an income of nearly thirty to forty lakhs of rupees per annum. The administrative cost of anti-prohibition staff is highly mounting. In addition to these uneconomic and wanton losses, Indian agriculture is languishing, production is dwindling and scarcity of essential articles of food, such as rice, wheat, coffee, sugar, milk and milk-products is rampant.

For a healthy life of the people two essential elements are necessary; nourising food and good recreation. Are these two factors present in our country at the present day? We can definetely say that they are not. What led to this pitiable condition? First of all, with all the encouragment given by the Government for increasing agricultural production, it is growing less and less from year to year. Scarcity of food is the constant threat and the biggest challenge that has overwhelmed our planning commission. There is scarcity of rice, wheat, cereals, milk and milk products, vegetables, coconuts, edible oil etc. We have to admit the plain fact that this scarcity is of our own creation and it is not imposed on us by our external enemies.

Why is the Indian agriculture backward in every respect? Blame is rightly thrown on the monsoons which are very eratic. Cultivation of land is an art and culture and production of food has raised us from primitive conditions to civilised life. We all know that for

the production of food, as for all other industries, land, labour and capital are necessary. Land is available in India for cultivation, but what do we find in our rural parts? Plenty of land is left uncultivated. Labourers are unwilling to work in land and capital is fleeing away from land either to cities or other urban parts. Inspite of the mighty efforts of the Panchayats villages are deserted and we find only dilapidated huts, falling houses and dismantled mansions in our villages.

This decline of villages is due to the fall in agricultural production. Why has agricultural production fallen? First of all there is no sufficient rainfall and there are no mighty efforts for storing the little rain that occasionally hails us. Most of our irrigation tanks are left to themselves and they are not properly cared for. Money is spent like water for erecting open air theatres, swimming pools and for holding youth festivals; much energy is wasted in wrangling for the distribution of river waters among the states while waters are going to waste in the mighty rivers like Godavari and Brahmaputra. Possession of Kashmir and the Rann of Kutch are regarded more important than the construction of irrigation dams. Erection of go-downs for storing paddy precedes production of paddy. If there is, by chance, a heavy rainfall, the irrigation tanks breach and the life giving waters go to waste and we go with a begging bowl either to America or Russia. In places where water is available there is no hard work. Water alone will not increase production. Ploughing of land at the proper season and preparing it by diligent manuring at the proper time are necessary for increased production. Are these important functions done properly? I am not confident of saying so. Deep ploughing is disappearing from our country, because we have no strong bulls and strong ploughmen in our villages. Our mania for taking coffee and tea and the great demand for milk and milk products in towns and cities are killing innumerable calves in our country. Cows are milked to the last drop and calves are starved or allowed to shift for themselves. So, there is an acute scarcity of draught bulls and there are no strong hands to plough deep. There is no village without a coffee or tea-stall. This demand for milk will be minimised, if there is an alternative recreation in the shape of toddy or arrack. The demand for sugar, coffee and tea will be less if there is an alternative drink for the hard-working agricultural labourers.

Young men and women who are expected to work in the fields are now found loitering in cities and towns attending schools and colleges, a section of them unwillingly, and most of them frequenting cinema shows. Only the old and the infirm are found in villages. Educated young-men think that it is beneath their dignity to work in the fields and modern education is not founded on the dignity of labour. There were days when agricultural workers were very active in the fields if they had the recreation of taking a strong drink in the evenings. That enthusiasm for agricultural productive work has disappeared with the closure of toddy shops. How are we going to re-invigorate agriculture without scratching prohibition ? Whatever may be said in favour of prohibition, the following facts are crytsal clear.

1. People have neglected their coconut trees since plantation and protection of coconut trees is not a paying concern now.

2. The yield of coconuts is not even half of what it was in the pre-prohibition period. When there was no prohibition coconut trees were tapped for toddy only for six months in a year and during the off-season the trees yielded plenty of coconuts. Tapping for toddy was a stimulant for the yield of coconuts for the next six months.

3. The art of climbing up and down the coconut trees and palm trees is dying out.

4. Pure toddy was not only an invigorating drink for the agricultural and other workers but also an easy medicine for diseases like dysentery and piles.

5. Increasing birth rate among the agricultual workers may be regarded as a result of prohibition. From empirical knowledge we can say that toddy drinking was a curative for excessive human fertility.

6. The prices of coconuts and coconut oil have shot up to the maximum limit since prohibition.

7. Provincial and central revenues have dwindled and the pressure on land is excessive without any subsidiary occupation for those who were following tree-tapping as a profession.

8. Illicit preparation of toddy and arrack has increased and wet areas have a thriving business in smuggling intoxicants to prohibition or dry areas.

9. It is a wrong assumption that prohibition has reduced crimes and sinful actions. Assassinations, arson, looting street brawls and theft still continue even after twenty years of compulsory prohibition.

10. If toddy and arrack drinking is a sin what about the consumption of fish, mutton, beef and pork and smoking and chewing of tobacco? Why should not they also be prohibited? No people can be compelled to lead a moral life by legislation and fear of punishment only.

The above facts may not be true cent per cent. Nor can we reject them as utopian statements. Prohibition may be a blessing to one section of the people. But, it has ruined the livelihood of another section of the community. It has resulted in an enormous loss of revenue to the state; it is one of the causes of the rise in prices of some essential commodities; it has not minimised crimes; it has not created a heaven on earth. People have not become more honest than they were before the prohibition days. There are more murderers, debtors and cheats even during the prohibition period.

Therefore, when the Government are bent upon establishing a welfare state, and when we are tapping every source of income, what harm there will be if prohibition is scratched. The Heavens will not come down nor there will be an earth-quake because prohibition is scratched. There were seasonal rainfalls even during the pre-prohibition days. There is no prohibition in advanced countries like America, Britain and France. Science, Technology and Religion have not disappeared from those countries. We are not economically well off to lose a valuable source of income by a sentimental objection to some intoxicants only. We can only pray God that our politicians should be more sensible and realistic than they are now.

# Psychology in Saiva Siddhanta

D. I. Jesudoss, M. A., M. Lit., M. Ed.
*Reader in Philosophy, Annamalai University*

Psychology had been variously understood at different periods of its development. It began as the study of the soul. Later it became the study of consciousness. Then it was the study of mind. Today it is a behavioural science; it studies behaviour. Saiva Siddhanta is Psychology in all these different senses.

1. The word 'Psychology' is etymologically derived from 'Psyche' which means 'soul'. So, Psychology began as the study of soul; Indian Psychology even today is psychology in this sense but not the modern western psycholgy. Saiva Siddhanta is psychology because all the Saiva Saints and Siddhanta philosophers discuss the soul (Psyche) and its nature. It is called 'Pasu'. The Pasu is bound by Pasa and is released by Pathi.

The third sutra of the celebrated Sivajnanabodham proves the existence of the soul and explains its nature. 'Because there is a subject that denies the existence of souls, because there is a subject that claims the body as its own, because there is a subject that knows through the five senses, because there is a subject that knows in the state of dream, because in the state of sleep, although the vital breath is at work, the body is inactive, and there is the experience of pleasure or pain, because there is a subject that receives enlightenment when instructed, because the various constituents of our body only constitute towards the illumination of our intellect, it has to be concluded that there is a soul in our body quite independent of our physical embodiment'. This is existential psychology of Saiva Siddhanta.

Embodied soul is self. Saiva Siddhanta insists on "self-inquiry", "self-knowledge" and "self-realisation". 'Know Thyself' said Socrates. 'Who am I? What is mind?' What is knowledge ?, asked Manikkavasagar.

வழக்கிழந்தன போலும் அல்லது சிலர்க்கு ஒலித்தல் அருமை யாக இருக்கலாம். ஆனால் தொல்காப்பிய விதிக்கு மாறுபட்டு

'சக்கர நெறி நில்'
'சையெனத் திரியேல்'

என்று தந்திருப்பதானது 'புதியன புகுதல்' என்ற உத்தியினால் இருக்கலாம். இதேபோல் வகர மெய்,

''உ, ஊ, ஒ, ஓ என்னும் நான்குயிர்
வ என்னெழுத்தோடு வருதலில்லை''—(தொல் 63)

ஆதலால் அக்குறையை நிறைசெய்யுமுகத்தான்

'உத்தமனாயிரு'
'ஊருடன் கூடிவாழ்'
'ஒன்றுரைத்தேரேல்'
'ஓரம் சொல்லேல்'

என்று அமைத்துக் கொண்ட திறத்தினை ஆத்திசூடி நூலில் காண் கிறோம். இதே முறையிலேயே 'கொன்றைவேந்தனை'யும் (18 மெய் யெழுத்துக்களையும் நீக்கிப்) பாடித் தந்திருக்கிறார். இரண்டு சீர் அடிகளை ஆத்திசூடியில் பாடிப்பயின்ற சிறாரைக் கொன்றை வேந்தனில் நாலு சீர் கொண்ட அடியினை எளிமையாகப் பாட வைக்கிறார். 'ஆத்திசூடி', 'கொன்றை வேந்தன்' சிறுவர்க்காத லின், உலகியலையொட்டிய வாழ்க்கையில் அறிந்து கடைப்பிடித் தற்குரிய அறநெறிகளை எளிமையாகவே கூறிச் செல்லுகிறார். தமிழகத்துக்கே தனிச் சிறப்புடைய ஒழுக்கந்தான் இரண்டு நூல்களிலும் அதிகம் வற்புறுத்தப்படுகிறது. அரிய மானிடப் பிறப்பில் இறைவழிபாடு இன்றியமையாததாயினும், ஒழுக்க நெறி நின்று உரிய கடனைச் செய்தலே உயர்வானது. கடமையை மறந்து கடவுளையே வணங்கி நிற்றல் கடைமையானதே என்ற உண்மை

'நின் கடன் அடியேனையும் தாங்குதல்
என் கடன் பணி செய்து கிடப்பதே'

என்ற நாவுக்கரசர் வாக்கில் பொதிந்து கிடப்பதை நன்கு அறி வார் நம் ஒளவை. எனவேதான் 'ஆத்திசூடி', 'கொன்றை வேந்தன்'—இரு நூல்களிலும்

'திருமாலுக்கடிமைசெய்'
'தெய்வமிகழேல்'—என்றும்
'ஆலயம் தொழுவது சாலவும் நன்று'
'சிவத்தைப் பேணின் தவத்திற் கழகு'
'தாயிற் சிறந்ததொரு கோவிலும் இல்லை'
'தெய்வம் சீறின் கைதவம் மாறும்' என்றும்

சில்லிடங்களில்தான் கூறியிருக்கிறார்.

பதிலும் 'அதிருமாலுக்கடிமைசெய்', 'தெய்வமிகழேல்' என்ன ஒரு சாதாரண போக்குச் சொல்தான். ஆலயம் தொழுவது மிக நன்றுதான், அப்படி இன்றியமையாத அவசியமன்று. வீட்டிலே, பெற்ற தாயே பெருங்கோயிலாக அருகிருந்து காத்து வரும்பொழுது இறைவனை எங்கே சென்று தேடவேண்டும்?

தமிழன் கண்ட வாழ்வில், அன்புற்றமர்ந்த காதல், இல்லற வாழ்க்கையே சாலச்சிறந்தது.

'காதலிருவர் கருத்தொருமித்து
ஆதரவுபட்டதே இன்ப வாழ்வு',
'இல்லற மல்லது நல்லற மன்று' என்பது கொன்றை
வேந்தன்.

அதில் 'ஒருவனைப் பற்றி ஓரகத்திரு'த்தலே காதல் வாழ்க்கை. இவ் இல்லற வாழ்வில் பெண்ணே முக்கிய இடம் பெறுகிறாள். எனவேதான் வள்ளுவரும் இல்லறத்துக்கு அடுத்தபடியாக 'வாழ்க்கைத் துணைநலம்' கூறுகிறார். 'இல்லதென் இல்லவள் மாண்பானால்' ஒவ்வொருவனுடைய வாழ்க்கைச் சூறுவளியில் வீடுதந்து போற்றுபவள்தானே வாழ்வரசி. 'தற்கொண்டானைப் பேணி'த் தானே இருவருக்கும் 'தகைசான்ற சொல்'லை உலகத்தாரிடம் பெறுகிறாள். மேலும் சமுதாயத்தில் பெண்கள் பங்கு மிக முக்கியமானது. இதனை நன்கு அறிந்து வற்புறுத்தியிருக்கிறாள், அவ்வினத்தைச் சேர்ந்த நம் ஔவையார். பாம்பறியும் பாம்பின் காலல்லவா?

பெண்டிற்குத் தலையாய பண்பு கற்பு. 'கற்புக் கடம்பூண்ட இத்தெய்வமல்லது, பொற்புடைத்தெய்வம் யாம் கண்டிலமால்' என்று வாயாரப் புகழ்கின்ற கவுந்தியடிகளை நாம் 'சிலப்பதிகாரத்தில்' காண்கிறோம். ஔவையும் அம் முதல் தமிழ்க் காப்பியத்தை நன்கறிவாள். கற்பின் மிக்க கண்ணகியின் சீற்றம் நெறி தவறிய தென்னவனை வீழ்த்திற்று; கயவர் சேர்ந்த மதுரையைத் தீக்கிரையாக்கிற்று. இது

'பட்டாங்கு யானுமோர் பத்தினியே யாமாகில்
ஒட்டேன் அரசோடு ஒழிப்பேன் மதுரையும்'

என்ற வீரக் கண்ணகியின் வஞ்சினச் சொல்லல்லவா! பத்தினியின் சொல் உடனே பலித்தது. இதனை உளத்தில் கொண்டுதான்

'கற்பெனப்படுவது சொல் திறம்பாமை'

என்று கொன்றை வேந்தன் கூறுகிறது. ஏன்? இத்தொடருக்கு வேறொரு அமைதிப் பொருளும் காணலாமே. 'தற்கொண்டாற் பேணி அவருடைய த்கை சான்ற சொல்லையும் திறம்பாது காத்து நிற்றலும் கற்புத்தானே. அதனாலன்றோ பன்னீராண்டு

தன்னைப் பிரிந்து, மாதவி வயப்பட்ட கோவலன் கடற்கரைக் கானல் வரிக்காட்சிக்குப் பின் கண்ணகியிடம் திரும்பி வந்த அந்த நிமிடத்திலேயே, 'நான் மதுரை சென்று இச்சிலம்பினை விற்று இழந்த பொருளை மீட்டும் ஈட்டுவேன். என்னுடன் நீயும் எழுக, என்று கூறியதுமே கண்ணகி ஒரு தடையின்றியும் அன்னையிடமும் அருமை மாமியிடமும் சொல்லாமல்கூட எழுந் தாள். இது இவளுடைய தவறல்லவே. கற்பின் திறமல்லவா? அக்கற்புதானே பின்னர் அவளை வானகம் போற்றும் தெய்வ மாக்கியது.

கற்புத்திண்மை எத்துணையிருந்தாலும் மெல்லியலார்க்குப் புறக்காவலும் இன்றியமையாததே. அகக் காவலாகிய நிறை யைக் காத்தற்குப் புறக்காவலாகிய சிறையும் அவசியந்தான். சிறைக் காவலே வேண்டாமென்பது வள்ளுவரின் கருத்துமன்று. அவர் எதிர்மறைமுகத்தான் 'நிறைகாக்கும் காப்பில்லாதார்க் குச் சிறை காக்கும் காப்பு என்ன பயனைத் தரக்கூடும்' என்று வருந்திக் கூறினரேயன்றி, காரிகையர்க்குக் காவல் வேண்டாம் என்று சொல்லவில்லை. மென்மையியல்புடைய ஒவ்வொரு ஏந் திழைக்கும் வன்மை மிக்க ஒரு காளையே காவலன். காதலன். ஒரு வல்லாளன் இல்லா இடத்தில் இந்நல்லாளின் வாழ்வு சேம முறுது. எனவேதான் 'காவல்தானே பாவையர்க்கழகு' எனப் பறைசாற்றுவார் நம் பாட்டி. இன்னும் 'ஒருவனைப் பற்றி ஓரகத்திரு' என்பது இக்காவல் நெறியையும் கற்பு நெறியை யுமே வற்புறுத்துகிறது.

பெண்மக்கட்குச் சில அறவுரையும் கூறுகிறூர். வீட்டில் இருந்து தற்கொண்டானையும் தான் பெற்ற மக்களையும் சுற்றத் தையும் பேணி நோய் நொடி இன்றிக் காக்கும் பொறுப்புடைய பெண், தன்னை முதலில் நோயணுகாமல் காத்து வருதல் வேண் டும். நோய் முதல் நாடி அது வாராமற் காக்கும் கருத்துடைய ளாய், எல்லா நோய்க்கும் முதல் காரணமாய 'மீதூண் விரும்பலா காது; எனவேதான் 'உண்டி சுருங்குதல் பெண்டிர்க்கழகு' என்று பிரித்துக் கூறினர் நம் பிராட்டியார்.

புகழ் புரிந்த இல்லாளாக இருந்தால்தான் தன் கணவனுக் கும் தான் வாழும் சமுதாயத்துக்கும் நற்பெயரளிக்க முடியும். எனவேதான் இத்தகைமையில்லாதாரை எண்ணி அஞ்சுகிறூர், தூற்றுகிறூர் கீழ்க்கண்ட தொடர்களால்.

'துடியாப் பெண்டிர் மடியில் நெருப்பு'
'தூற்றும் பெண்டிர் கூற்றெனத்தகும்'

இப்பண்பு கொண்ட ஒருத்தியின் வீட்டுக்குச் சோறுண்ணச் சென்ற ஔவைக்கு

'அன்பில்லாக் கொடியவளிட்ட அமுது
காணக்கண்கூசி, கையெடுக்க நாணி
வாய் திறக்கமாட்டாமல் செய்தது; பழைய
சோறுதானுனுலும் என்பெல்லாம் பற்றி எரியச்
செய்தது.''

பெண்ணின் நல்லாளுக்குக் கூறியது போலவே, இல்வாழ்வின் இன்னெரு பங்காளனுகிய ஆடவனுக்கும் சில அறவுரை கூறுகிருள் நம் ஔவை.

'மெல்லினல்லான் தோள் சேர வேண்டும்'

என்று ஆண்மகனே வற்புறுத்தும் ஔவைக்கிழவி, இவனது ஆண்மையையும் உரிமையையும் பறிக்கவில்லே; அவன் தன் இயற்கை ஆண்மையிழந்து 'பெண் வழிச் சேரலாகாது' என்று எச்சரிக்கும் முகத்தான் 'தையல் சொல் கேளேல்' என்கிருள். வள்ளுவர் அடுத்துக் கூறுவது போல், வரைவின் மகளிரின் இணக்கம் கூடாது என்பதனே 'மைவிழியார் மனேயகல்', 'மைவிழியார் தம் மனே அகன்று ஒழுகு' என்று முறையே ஆத்திசூடியிலும், கொன்றை வேந்தனிலும் கூறுகிருர். இங்கு 'மைவிழியார்' என்ற தொடர் பிற ஆடவரை மயக்கும் எண்ணத்தோடே கண்ணுக்கு மையிட்டுத் தன்னே அலங்கரித்து வழிபார்த்து நிற்கும் விழியாராகிய பொது மகளிரையே குறிக்கும்.

ஆடவர்க்கு உண்மையான வீரம், வேறு பகைவனே அடக்குவதில் இல்லே. தன்னேத்தானே, பொறிவழிப் புலனறிவு போகாது காத்து நிற்கும் தற்காப்பையே குறிக்கும் என்பதை வள்ளுவனர் 'பிறன்மனே நோக்காத பேராண்மை' யெனப் போற்றுகிருர்; இதுவே ஆடவர்க்குரிய அறத்தில், ஒழுக்கத்தில் தலே சிறந்தது. இதனேயே ஔவையாரும் தம் கொன்றை வேந்தனில் பிறன் மனே புகாமை அறமெனத் தகும்' என்று கூறுகிருர்.

இவ்வாறு தனி இல்லற வாழ்வுக்கும் மற்றும் சமுதாய வாழ்வுக்குமே ஔவையார் தமது முன்னேடியாகிய வள்ளுவனரின் அடிச்சுவட்டையே பின் பற்றிச் செல்கிருர்.

# கம்பர் செய்த குறளுரை

## மு. கோவிந்தசாமி எம்.ஏ.,எம்.லிட்.

தமிழாராய்ச்சித்துறை, அண்ணுமலைப் பல்கலைக் கழகம்

எல்லாவற்றையும் தன்னில் உடையதும் எல்லாவற்றிலும் தான் இருப்பதுமே இறைத்தன்மை யெனப்படும். இத்தகைய நூல்களை யியற்றிய புலவரையே இறைப் புலவர் அல்லது தெய்வப்புலவர் என்பர். திருவள்ளுவர் தெய்வப் புலவர். எல்லாப் பொருளும் அவர் நூலில்—திருக்குறளில்—உள. அவர் கருத்துக்கள், கூறிய உண்மைகள் எல்லா நூல்களிலும் கலந்துள்ளன யென யாவரும் முழங்குவர். கம்பரும் திருத்தக்க தேவரும் குறட்பாக்களையும் கருத்துக்களையும் பெருமளவில் தம் நூலில் வழங்கியுள்ளனர் எனப் பலரும் கூறுவர். ஆராய்ந்தவரையில், கம்பர் சுமார் 1200 இடங்களில் குறளையோ அதன் கருத்துக் களையோ ஆண்டுள்ளார் எனத் தெரிகின்றது. கம்பர் கருத்துக் களை விளக்கும் நிலையில் அமைந்துள்ள குறள்கள் பல. குறளுக்கு விளக்கமாக அமைந்த கம்ப சூத்திரங்கள் மிகப்பல. அவை ஆசிரியர் உள்ளத்தை அப்படியே வெளிப்படுத்துவனவாயும் பிற்கால உரையாசிரியர்களின் குறள் உரைகட்கு வழிகாட்டிகளாயும் அமைந்துள்ளன. இவ்வகையில் கம்பர் நூலாசிரியராக மட்டுமன்றி உரையாசிரியராகவும் விளங்குகிறுர்.

கம்பருக்கு விளக்கமாக அமைந்த குறள்கள் ஒன்றிரண்டைக் காண்போம். வாலியைக் கம்பர் சிறியன சிந்தியாதான் *(கி.கா. 364) என்கிறுர். இதற்கு விளக்கமாக அமைந்த குறள் ‘உள்ளற்க உள்ளஞ் சிறுகுவ’ (798) என்னலாம். சிறியன எனப் பொதுவாகக் கூறியதனை உள்ளஞ் சிறுகுவ என விளக்குகிறுர் வள்ளுவர்.

மெய்யைப் பற்றிக் கம்பர் ‘புகழ்பொதிந்த மெய்’ (கி. கா. 778) என்கிறுர். ‘உள்ளத்தாற் பொய்யாதொழுகின் உலகத்தார் உள்ளத்துள் எல்லா முளன்’ (294) என வள்ளுவர் அதனை விவரிக்கிறுர். உள்ளத்துள் எல்லாம் உண்மையே புகழ் பொதிதல் ஆகும்.

---

*இவ்வெண்கள் வை. மு. கோ. பதிப்பைப் பின்பற்றியன

இனிக் கம்பர் குறளுக்கு உரை கூறுமிடங்கள்:

1. கற்புடையாளைக் கூறும் கம்பர் 'தங்கணுயகரின் தெய் வந்தான் பிறிதில்லென்றெண்ணும் மங்கைமார்' (பா.கா. 434) என்கிருர். 'தெய்வம் தொழாஅள் கொழுநற்றெழு தெழுவாள்' (55) என்பதன் விளக்கமாகலாம் இக்கம்பர் பாடல். தொழு தெழுதல் என்பதற்குத் தெய்வம் பிறிதில்லை என்று 'எண்ணுதல்' எனக் கம்பர் கொண்டாராதல் வேண்டும். எனவே தொழு தெழு வார் என்பதற்கு எண்ணுவார் என்பதே கம்பர் செய்த உரை.

2. முனிவரது வெகுளியைப்பற்றிக் கூறும் கம்பர் 'தடுப் பரும் சாபம் வல்ல வரந்தரு முனிவர்' (பா.கா. 554) என்பார். இது 'குணமென்னும் குன்றேறி நின்ருர் வெகுளி கணமேயும் காத்தலரிது' (29) என்ற குறளுக்கு விளக்கமாகலாம். காத்த லரிது என்பதற்கு வெகுளி பயன் தராமல் தடுத்தலரிது எனவும், வெகுளி கணப் பொழுதும் நில்லாது எனவும் பொருள் கூறுவர். கம்பர் செய்த பொருள் முதலதே என்பதிதனுல் தெரிகின்றது.

3. 'சிறப்பொடு பூசனை செல்லாது' (18) என்பதற்கு விழ வும் பூசனையும் எனப் பரிமேலழகர் கூறுவார். இதனை இவர் கம்பரிடத்திலிருந்துதான் கொண்டிருக்க வேண்டும். 'சாறும் பூசையும் தலைமயங்குமே' (பா.கா. 87) என்பதில் சாறு விழவா கும். இன்றேல் பரிதி முதலோர் சிறப்பு செய்யப்படுகின்ற விழவு பூசனை எனக் கொள்வார். எனின் சிறப்போடு செய்யப்படும் விழவாகிய பூசனை யென்பதாம்.

4. 'நாடென்ப நாடா வளத்தன' (739) என்பதற்கு 'வருந் தித் தேடாமல் தானே அடைவது எனவும் எல்லா நிலத்தினும் உள்ள பண்டம் தன்னிடத்தே உடைத்தாதல் எனவும் ஆசிரியர் உரை செய்வர். பரிப்பெருமாள் கொண்டவுரை கம்பர் கொண்ட தென்பது 'பூதலத்தியாவையும் அவண' (பா.கா. 99) என நகரப்படலத்தில் அவர் கூறியதாலறியலாம்.

5. 'கொள்வாரிலாமைக் கொடுப்பார்களும் இல்லைமாதோ' (பா.கா. 166) என்பது யாவருமறிந்த கம்பர் பாடல். நகர் வளம் பற்றியது. 'ஈவார்க்கண் என்னுண்டாம் தோற்றம் இரந்துகோள் மேவாரிலாக்கடை' (1059) என்ற குறளுக்கு உண் மையான பொருள் இதுவேயாக வேண்டும். தோற்றம் என் பதற்குப் பரிமேலழகர் செய்த புகழ் என்ற உரையைவிடத் தோன்றுதல் இருத்தல் என்ற கம்பர் உரையே சிறந்தது. கொள் வாரில்லாவிடில் கொடுப்பார்க்குப் புகழ் இல்லை என்பதைவிடக் கொடுப்பார் ஆகிய இனமே இல்லை என்பதே சிறந்தது.

6. 'இன்னுயிரேனும் கொள்ளுதல் தீது கொடுப்பது நன் ருல்' (பா.கா. 447) இக் கம்பர் வரியில் உயிரைக் காக்கவேனும்

ஏற்பது இகழ்ச்சி, பிறர்க்காகத் தன்னுயிரையும் ஈதல் நன்று எனக் கூறப்படுகிற தென்பர். 'ஆவிற்கு நீரென்றிரப்பினும் நாவிற்கிரவின் இளிவந்ததில்' (1066) என்ற குறளைப் பலர் ஆவிக்கு நீர் எனப் பாடபேதத்துடன் படிப்பர். ஏட்டில் ஆவிக்கு என்பது ஆவிற்கு எனவும் எழுதப்படுதல் காணலாம். ஆவிக்கு நீர் என்று கொண்ட இக் குறளுக்கேற்ற உரையாகக் கம்பரது வரி விளங்குகின்றது.

7. 'உரைப்பார் உரைப்பவை' (232) என்ற புகழதிகாரக் குறளில் பரிமேலழகர் புகழ்தான் உரையும் பாட்டுமென இரு வகைப்படும் என்பார். இவ்வுரை இவர்க்குக் கம்பரிடத்திலிருந்து கிடைத்திருக்கலாம். 'எழுது கீர்த்தி' (பா.கா. 519) எனவும் 'உரைகுறுக நிமிர்கீர்த்தி (பா.கா. 724) எனவும் கம்பர் கூறியிருத்தல் காணலாம். எழுதுகீர்த்தியே பாட்டாகிய கீர்த்தி.

8. 'இணரெரி தோய்வன்ன இன்னா' (308) என்பதற்குத் தீயில் பூங்கொத்தை இட்டாலன்ன, புண்ணில் தீயிட்டாலன்ன, தன்னைத் தீயிலிட்டாலன்ன என்றெல்லாம் பொருள் கூறுவர். இம்மூவகைப் பொருளுக்கும் கம்பர் மூலமாக இருந்திருக்கிறார். 'வெம்புறு மனத்தனல் வெதுப்ப மென்மலர்க் கொம்பெனக் குழைந்து சாய்ந்தனள் (பா.கா. 612). காயெரியுற்றனரனைய கௌவையர் (அ.கா. 1876); வெந்தீப்புண்மேல் நுழையத் துடிக்கின்றனள் போல் (அ.கா. 933).

9. செயற்கரிய பெருவேள்வி (பா.கா. 730) என்பதன் மூலம் கம்பர் செயற்கரிய (26) செயல்களுள் ஒன்று வேள்வியெனக் கருதுகிறார். செயற்கரியன தவநெறித்திறம் எனப் பரிதி முதலோர் எழுதுதற்கிதுவே காரணமாக வேண்டும்.

10. அம்மையினெடிம்மை (பா.கா. 918) என்பது மறுமை இம்மைகளைக் குறிப்பது. இருமை வகை தெரிந்தீண்டறம் பூண்டார் (23) என்பதற்கிவ்வாறு காளிங்கர் முதலோர் எழுதினர். இறப்பும் பிறப்பும் இருமையும் (துறவு) என்றே திருமூலர் இதற்கு விளக்கம் தருகிறார். பிறப்பு வீடெனப் பரிமேலழகர் கூறுகிறார்.

11. நிலவரை நீள்புகழ் (234) என்பதில் நீள் என்பதற்கு உலகமுழுவதும் நீண்ட; நிலைத்த என இருவகையாக ஆசிரியர் பொருளுரைப்பர். பரிமேலழகர் நிலைத்த என்றே கூறுவர். கம்பர் உலக முழுவதும் நீண்ட என்ற உரையே கொண்டாரென்பது ககனமெண்டிசையெலாம் விளைதரும் புகழினன் (பா.கா. 1137) என்பதால் தெரிகின்றது.

12. ஈன்றபொழுதில் பெரிதுவக்கும் தன்மகனைச் சான்றோன் எனக்கேட்டதாய் (69) என்ற குறளில் வள்ளுவர்



அரியக்குடிக்கோயில் கோபுரம்
முன்புறத்தோற்றம்



பக்கத்தோற்றம்



அரியக்குடிக் கோயிற் காட்சி

வேங்கடாசலனும் வள்ளல் அழகப்பரும் பாதரக்குடியில் உபதேசம் பெறுதல்



வேங்கடாசலனார் நன்கொடையால் எழுந்த இராமேசுரம் விடுதி



இராமேசுர வெளிவிடுதி நுழைவு நன்னாளில் உற்றார்,
உறவினர்களுடன் வேங்கடாசலனார்



இராமேசுர வெளிவிடுதி நுழைவு விழாவில் அரச தம்பதிகளுக்கு இனிப்பு வழங்கல்



இராமேசுர இல்லத்தில் 'தமிழ்க்கடல்' — நண்பர்களுடன்

தீப்போன்ற பிணி என்றவுரை உண்மையோடுறவுடையதாகும். தீயே யெனலாய பசிப்பிணி (சு.கா.67)என்றே கம்பர் கூறுகிருர்.

19. மாதர் படாமுலே (1087) என்பதற்குப் பரிமேலழகர் சாயாமுலே என்ருர். முன்னமொருத்தர் தொடாமுலே யென்ருர் கம்பர் (ஆ.கா. 1089).

20. மடுத்தவாயெல்லாம் பகடன்னுன் (624) என்பதை விட இடர் தன்னேவென்ருரன்ருே வீரராவர் (ஆ.கா. 1166) என்ற கம்பர் வரிகளில் ஆற்றலிருப்பதாகத் தோன்றுகின்றது.

21. அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர் அடிக்கு நெருஞ்சிப் பழம் (1120) என்றவிடத்துக்குளிர்ந்த அனிச்சத்தை விடக் காய்ந்த அனிச்சமலர் கால்களே மேலும் உறுத்தும். இது போன்ற இடங்களில் கம்பர் குளிர் என்ற அடைமொழியை இடாமற் செல்லார் போலும். விஞ்சு குளிர்ப்பல்லவமனுங்கச் சிறடிபெயர்ப்பாள் (ஆ.கா. 255) என்றவிடத்துப் பசுந்தளிர்கள் மாதர் கால்களின் மென்மைக் கொப்பாகாமையைக் கூறினுர். பல்லவத்திற்குரைத்த குளிரை அனிச்சத்திற்குமாக்கிக் கொள்ள வேண்டும்.

22. செயற்கையறிந்தக் கடைத்தும் உலகத்தியற்கை யறிந்து செயல் (637) என்ற குறளுக்கு 'வழக்கினுமதிக்கவியி னும் மரபினுடி (ஆ.கா. 158) என்ற வரி மிக்க பொருந்திய உரையாகும். நூனெறி உலகவியற்கையெனப் பரிமேலழகர் எழுதுதற்குக் காரணம் இப்போது தெளிவாகின்றது.

23. மதிநுட்பம் நூலோடுடையார் (636) என்ற மற்ருேர் குறளுக்கு 'பரவு கேள்வியும் பழுதின்ஞானமும் (ஆ.கா. திருவடிப்படலம், 106) என்ற வரியைத் தக்க வுரையாக்கலா மெனத் தெரிகின்றது.

24. விருந்து புறத்ததாத் தானுண்டல்...வேண்டற்பாற் றன்று(82) என்பதற்கு விருந்து என்பதில் புதியவர்களே மட்டும் அடக்காமல் 'சோறு தன் அயலுளோர் பசிக்கத் துய்த்துளோன் (பள்ளியடைப்படலம் 106) என அனேவரையும் தன் விரிந்த (உரையில்) கைகளில் அடக்குகிருர் கம்பர்.

25. இலனென்னும் எவ்வமுரையாமை ஈதல் (223) என்ற குறளுக்கு எண்ணற்ற உரைகள் வந்துள்ளன. யானுமில்லாத வனே செல் என்னுமல் கொடுத்தல் அவன் மீண்டும் பிறரிடம் போய் இல்லேயென்றேற்காத அளவு கொடுத்தல், இல்லேயெனக் கேட்குமுன் குறிப்பறிந்து கொடுத்தல் எனப் பல்வகைப் பொருள் கள் உண்டு. ஆனுல் எவ்வமுரைத்தலேப் பற்றிக் கம்பர் சொல் வது புதிது; ஏற்றவற்கொரு பொருள் உள்ளதின் றென்று மாற்றலன் உதவலன் வரம்பில் பல்பகல் ஆற்றினன் உழற் றுமோர் ஆதன் (பள்ளியடைப் படலம் 114).

# புகழேணியில் இலக்கியம்

டாக்டர் வ. சுப. மாணிக்கம்

தமிழ்ப் பேராசிரியர், முதல்வர், அழகப்பா கல்லூரி, காரைக்குடி

(திருச்சிராப்பள்ளி வானொலிப் பொழிவு)

கலை என்பது இயற்கை தழுவி மக்கள் ஆக்கிக் கொண்ட ஓர் அறிவுப் படைப்பு. அப்படைப்பிற் பெரியது இலக்கியக் கலை. இலக்கியம்போல் விரிந்ததும் பரந்ததும் மனித இனம் முழுதையும் உட்கொண்டதும் ஆய கலை வேறொன்று இல்லை. இலக்கியத்துக்கு நீண்ட வரலாறும் எண்ணிறந்த புலவர்களும் இருப்பதுபோல் வேறு கலைகளுக்கு இல்லை. காலத்தை நீந்தி வாழும் திறம், பலர் புகழைப் பதிவு செய்து கொள்ளும் திறம் இலக்கியத்துக்கே நிறைய உண்டு. இதனால் இலக்கியத்தை நெடுங்கலை எனவும் ஓவியம் சிற்பம் முதலிய கலைகளைக் குறுங் கலை எனவும் கூறலாம்.

மனித இனத்தின் தனிப் பேறு மொழி. மொழி வளருந் தோறும் நாகரிகம் வளர்ந்துள்ளது. அம்மொழி கொண்டு இயங்கும் கலை இலக்கியமே. மொழி எல்லார்க்கும் பொதுச் சொத்து. அம் மொழிவழிப்பட்ட இலக்கியமும் எல்லார்க்கும் பொது. நல்வாழ்வுக்கும் வாழ்வின் விரிவுக்கும் சிந்தனையோட் டம் வேண்டும். அச்சிந்தனைச் செல்வத்தை இலக்கியத்தில் கடல்போலப் பெறுகின்றோம். விலையின்றி மலிவாகவும் பெறு கின்றோம். 'கற்றனைத்து ஊறும் அறிவு' என்றார் வள்ளுவர். அவ்வறிவு இலக்கியக் கல்வியில் ஊறி வருவது போல் ஏனைக் கல்வியில் ஊறுவதில்லை. அகத்திணை இலக்கியம், புறத்திணை யிலக்கியம், காப்பிய இலக்கியம், நீதியிலக்கியம், பாசுர இலக்கி யம், சிற்றிலக்கியம், இலக்கண இலக்கியம் எனப் பல்வேறு இலக்கியங்கள் பெற்ற இனம் தமிழினம். ஆயிரம் ஆயிரம் ஆண்டுகட்கு முன் தோன்றிய இவ்விலக்கியங்களில் பழமையான சிந்தனைகளையும், புதிதாகப் புகுந்த சிந்தனைகளையும் அறிகின் றோம். பெரும்பந்தாட்டம் பழகுபவனுக்குச் சின்ன இடம் போதாது. ஓடியாடித் திரிந்து விழுந்து நோக்கம் போல் விளை யாடுதற்குப் பரந்த இடம் வேண்டும். அதுபோல் சிந்தனையைத் தீட்டிக் கொள்ளுதற்குச் சின்னஞ் சிறு இலக்கியங்களோ சிறு

வளர்ச்சியுடைய இலக்கிய மொழியோ துணை செய்யமாட்டா. நாம் பெற்ற தவத்தால் தமிழர்க்குப் பெரும் பெரும் இலக்கியங்களும் தமிழ் மொழிக்குச் சங்கம் கண்ட நீண்ட வரலாறும் உண்டு.

வாழ்வாங்கு வாழ விரும்புவார்க்கெல்லாம் இலக்கியக் கல்வி இன்றியமையாதது. ஏன்? இலக்கியம் என்பது மனித வாழ்க்கையை ஆராய்ந்து கூறும் அறிவியல் ஆகும். ஏனை அறிவியல்கள் வாழ்க்கைக்குத் துணையான பொருள்களையே ஆராய்ந்து நிற்க, இலக்கியமோ வாழ்க்கை தன்னையே ஆராய முற்படுகின்றது. பல்வேறு மாந்தர்களின் நெஞ்சோட்டங்களையும் அறிவோட்டங்களையும் வாழ்வு தாழ்வுகளையும் பண்பின் நிறைவு குறைகளையும் நுணுகி அலசி இசைந்தும் இடித்தும் வெளிப்படுத்துகின்றான் புலவன். புலவன் என்பவன் வெற்றெழுத்தாளன் இல்லை; வாழ்வியலைப் புலப்படுத்துபவன். அவன் இயற்றிய இலக்கியத்தைக் கற்கும்போது, வாழ்க்கையில் இன்ன சமயத்து விழிப்பாக இருக்க வேண்டும். இன்ன பண்புடையவனோடு இப்படிப் பழக வேண்டும், இன்ன துன்பத்து இப்படிக் கடக்க வேண்டும் என்ற படிப்பினைகளைப் புரிந்து கொள்கின்றோம். இலக்கியம் பலர்தம் வாழ்க்கையைப் பற்றிப் பாடினாலும், அது தொகுத்துக் கூறும் வரலாற்று நூலன்று. வாழ்ந்த விதத்தின்மேல் ஆராய்ச்சி செய்வது இலக்கியம். யாராக இருந்தாலும் நன்றை நன்றெனவும் தீதைத் தீது எனவும் எடுத்துக் காட்டுவது இலக்கிய அறம். இன்னவன்போல வாழ்வை நடத்த வேண்டும் என்று உடன்பாட்டாலும், இன்னவன்போல் வாழ்வைப் பாழாக்கக்கூடாது என்று எதிர்மறையாலும் இலக்கியத்தில் வாழ்க்கை விளக்கம் பெறுகின்றோம். நல் வாழ்வுக்கு முதலீடு கல்வியோ செல்வமோ பதவியோ அன்று. சிந்தனை வளர்ச்சியே சிறந்த வாழ்வுக்கு முதல். 'அறிவுடையார் எல்லாம் உடையார்' என்பர் வள்ளுவர். சுருங்கச் சொல்லின் இவ்வறிவு என்னும் சிந்தனைப் பயிரைப் புலவர்களாகிய உழவர்கள் இலக்கியம் என்னும் நன்செய்யில் வளர்க்கின்றனர். இனி, இலக்கியப் பண்ணையில் ஏற்கனவே வளர்ந்து கிடக்கும் சில சிந்தனைகளைக் காண்போம்.

உலகவாழ்வு என்பது இல்லறத்தை நிலைக்களனாகக் கொண்டு இயங்குவது. அகத் தாக்குதல் புறத் தாக்குதல்களிலிருந்து இல்லறத்தை நடத்திச் செல்லுவதற்கு ஓயா ஒழியாச் சிந்தனை வேண்டும். நல்ல இல்வாழ்க்கைக்குத் தியாக மனம் வேண்டும். சரிநிகர் சமானம் என்பது மனிதப் பொது விதி. விட்டுக் கொடுக்கும் தியாகம் இல்லறத்தின் சிறப்பு விதி. குடும்பத்தில் குற்றம் வராதபடி காக்க முற்படுவானுக்குப் பல துன்

பங்கள் வந்து கொண்டே இருக்கும், விடுதலை இல்லை என்று அறிந்த வள்ளுவர் 'இடும்பைக்கே கொள்கலம் கொல்லோ' என்று உணர்ச்சியாகவும் இரக்கமாகவும் வினவுகின்றார். இத்தகைய தியாக மனப்பான்மையைச் சங்க இலக்கியத்தின் அகத்திணைப் பாடல்கள் விரித்துரைக்கின்றன. காதல் மணத்துக்குப் பெற்றோர்கள் உடன்படாதபோது, தலைவி தலைவனோடு உடன் போகின்றாள். அவன் நாட்டிற்கே சென்று சில நாள் தங்கியிருந்து தாய்வீடு திரும்புகின்றாள். திரும்பி வந்த தலைவியைப் பார்த்து, 'நீ சென்ற நாட்டில் குடிப்பதற்குத் தண்ணீர் அவ்வளவு நன்றாக இருந்திராதே. அதனையுமா குடித்தாய்' என்று தோழி கேட்டபோது தலைவி கூறும் விடை:

> ''அன்னாய் வாழிவேண்டு அன்னைநம் படைப்பைத்
> தேன்மயங்கு பாலினும் இனிய அவர்நாட்டு
> உவலைக் கூவற் கீழ
> மானுண் டெஞ்சிய கலிழி நீரே'' (ஐங். 203)

நம் தோட்டத்துத் தண்ணீர் தேனைவிடப் பாலைவிட இனியது தான். இதனைவிட இனியது ஒன்று இருப்பதை அறிந்தேன். உடன் போக்குச் சென்ற வழியில் ஒரு குட்டை இருந்தது. நீரில் அழுகிய இலைகள் கிடந்தன. வழிவிலங்குகள் குடித்தபின் தண்ணீர் கொஞ்சமே இருந்தது. அதுவும் கலங்கலாக இருந்தது. தாகம் தணிய அள்ளிப் பருகினேன். அதன் சுவைக்கு நம் தோட்டத்து நன்னீர் நிகராகாது என்றாள் தலைவி. தலைவியின் உண்மைக் கருத்து என்ன? ஒருத்திக்குக் காதலன் உள்ள விடத்துக் கலங்கிய நீரும் நல்லதாகும். அவனில்லாத இடத்துத் தேனும் பாலும் இன்னாதவையாகும். காதலிக்குப் பொருள் வளம் முக்கியமன்று: காதலனை நீங்காத புணர்ச்சியே முக்கியம். ''ஒன்றன் கூறுடை உடுப்பவரேயாயினும் ஒன்றினார் வாழ்க்கை'' என்பது கலித்தொகை. ஒருயிரும் ஈருடலுமான காதலர்களுக்கு வறுமை பெரிதன்று; ஓராடையை உடுத்திக் கொண்டே வாழலாம் என்பது இதன் கருத்து. இதனால் கற்பின் திண்மையையும் வசதியைத் தியாகம் செய்து கொள்ளும் காதற் சிந்தனையையும் அறிகின்றோம்.

கோப்பெருஞ்சோழன் பண்புகள் நிறைந்த சங்கப் பெருமகன். பிசிராந்தையார் என்னும் புலவர்க்கு உயிர் நண்பன். தமிழர் வரலாற்றில் மனம் ஒன்றிய நட்பிற்கு எடுத்துக் காட்டாக விளங்குபவன். எனினும் அவன் மக்கள் இருவர்க்கும் அவனுக்கும் அரசு காரணமாகப் பகை ஏற்பட்டது. மக்கள் இருவரும் சேர்ந்து கொண்டு தந்தைமேல் போர் தொடுத்தனர். தமிழகப் புகழ் வாய்ந்த சோழனும் தந்தை என்ற நிலையை

விட்டு, அரசன் என்ற முறையில் எதிர்த்து வந்த மக்கள்மேல் போரிட முனைந்தான். வேறு வகையாக அவனால் சிந்திக்க முடியவில்லை. இச் சூழ்நிலையைத் தடுக்க எண்ணினார் புலவர் புல்லாற்றூர் எயிற்றியனார். இந்தக் குடும்பப்போர் குடிக்கும் அரசுக்கும் நல்லதில்லை என்று தெளிந்தார். வேண்டுமென்றே போர் தொடுத்திருக்கும் இளம்பிள்ளைகளுக்கு அறஞ் சொல்வது செவியேறாது என்று கருதி, புலவரை மதிக்கும் பண்புடைய தந்தை சோழனுக்கே சிலவற்றைச் சிந்திக்கச் சொன்னார்.

உன்னை எதிர்க்கும் இருவர் யார்? உன் மக்கள் அல்லவா? அவரை எதிர்க்க வந்த நீ யார்? அவர் தம் தந்தை அல்லவா? பெற்றவனும் பிறந்தவர்களும் அடித்துக் கொள்வது உறவா? முறையா? இப்போரில் நீயே வெல்வாய் என்று வைத்துக்கொள். வென்றபின் இவ்வரசுரிமையை யார்க்குக் கொடுக்கப் போகின்றாய்? என்றும் இவ்வுரிமைக்கு உரியார் நின் மக்களே. போரில் எது நடக்கும் என்று யார் அறிவார்? நீ தோற்கவும் செய்யலாம். அப்போதும் உரிமை அவர்களையே சேரும். நின் மக்கள் வலிந்து கைப்பற்றினார்கள் என்ற பழிச்சொல்லை நீ அடையாமல் அவர்கட்கும் அடைவிக்காமல், நீயே முந்தி விட்டுக் கொடுத்துத் தியாகப் புகழ் அடை. உங்கள் குடிப் போர் பக்கத்து நாட்டரசர்களுக்கு மகிழ்ச்சியைத் தரும். அதற்கு முதிர்ந்த அரசியல் அறிஞனாகிய நீ இடங்கொடாதே.

''நின்ற துப்பொடு நிற்குறித் தெழுந்த
எண்ணில் காட்சி இளையோர் தோற்பின்
நின்பெருஞ் செல்வம் யார்க்கெஞ் சுவையே;
அமர்வெஞ் செல்வம் நீயவர்க்கு உலையின்
இகழுநர் உவப்பப் பழியெஞ் சுவையே; அதனால்,
ஒழிகதில் அத்தை நின்மறனே: வல்விரைந்து
எழுமதி வாழ்கநின் உள்ளம்.'' (புறம். உகந)

இவ்வாறு எயிற்றியனார் சோழனுக்கு எடுத்துரைத்தார். இது சரிதான் என்று அவனுக்குப் பட்டது. அரசையே துறந்து வடக்கிருந்தான் சோழன். புலவன் சிந்தனை பூசலைத் தடுத்தது.

சிறியவர்கள் வாழ்விலும் பெரியவர்கள் வாழ்விலும் ஏதோ சில போராட்டங்கள் நிகழ்ந்து கொண்டேதான் உள. எவ்வளவு ஆற்றல் உடையவர்கள் நெஞ்சத்தும் கவலையணுக்கள் உள்ளன. எண்ணித் துணிக கருமம் எனவும், பின் வருந்தும் படியான காரியங்களைச் சிந்தனையின்றி அவசரப்பட்டுச் செய்துவிடாதே எனவும் குன்றுபோல் வாழ்வில் உயர்ந்தாரும் வீழ்ச்சியடைவதற்கு நேரமாகாது, குண்டுமணியளவு பெருந்தீமை செய்தாற் போதும் எனவும் திருக்குறள் எச்சரிக்கின்றது. ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியன் சிந்திக்கத் தவறிய சிந்தனை

என்ன? தண்டனையில் கொலைத் தண்டனை கடைசியானது. அது காமத்தாலோ வெகுளியாலோ மயக்கத்தாலோ செய்தற்கு உரிய தில்லை. எவ்வளவு விசாரணைகள் நடத்திக் கொலைத் தண்டனையை விதிக்க வேண்டும். அப்படி விதிப்பதாயினும் அரசன் மிகப் பொறுப்போடு தான் முன்னின்று அதனைச் செய்ய வேண்டும். கொலையினும் கொடியவனைக் கொலை செய்யலாம். ஆனால் அவ்வொருவன் கொலை, வாழும் மக்கட்கு மிக நல்லதாக இருத்தல் வேண்டும். சமுதாயத்துக்கு அவன் ஒரு களையாக இருந்தால் ஏனைக் குடிப் பயிர்கள் வளர்வதற்கு அக்களையை வேரொடு பறிக்கலாம் என்று வள்ளுவர் மிகவும் விழிப்பாக இத்தண்டனை பற்றி மொழிவர். பாண்டியன் இத்தண்டனையை மிக அலட்சியமாகச் செய்தான். கோவலன் கையில் சிலம்பைக் கண்டால், சிலம்போடு அவனையும் சிறைப்பிடித்து வருக, கொலைத் தண்டனை அளிக்கின்றேன் என்று கூறியிருக்கலாம். அப்படிச் சொல்லாது சிலம்பு இருப்பது உண்மையானால், அவனைக் கண்ட இடத்திலே கொல்லும் உரிமையைக் கேவலம் ஊர்க் காவலர்களுக்கு அளித்தான்.

> ''கல்லாக் களிமகன் ஒருவன் கையில்
> வெள்வாள் எறிந்தனன் விலங்கூ டறுத்தது
> புண்ணுமிழ் குருதி பொழிந்துடன் பரப்ப
> மண்ணக மடந்தை வான்துயர் கூரக்
> காவலன் செங்கோல் வளைஇய வீழ்ந்தனன்
> கோவலன் பண்டை யூழ்வினை யுருத்தென்''.

ஊர்க் காவலர்களுள் ஒரு கல்லாக் களிமகன் கோவலனை வாளால் வெட்டினன் என்பதிலிருந்து, பெரிய தண்டனையைச் செய்யும்படி சிறியவனுக்கு அதிகாரம் கொடுத்த தவறு புலனாகின்றது. களை பறிப்பதாக எண்ணி நாற்றையே பறித்துவிட்டான் பாண்டியன். பறிபட்ட நாறு பாண்டியன் குலத்துக்கே ஊறாகிவிட்டது. யானோ அரசன் யானே கள்வன் என்று நெடுஞ்செழியன் தன் மனைவியோடு மாய்ந்தான். சிறு தவற்றால், தமிழகத்தின் இரு பெருங்குடிகள் வாழ்விழந்தன.

பலர் செய்த தவற்றுக்களை இலக்கிய வாயிலாக நாம் அறியும்போது, நம் வாழ்வின் போக்குக்கள் புலனாகின்றன. நான் ஆர், என் உள்ளம் ஆர், என் சிந்தனை ஆர், என் செயல் ஆர் என் சிறுமை ஆர் என்ற தன் எண்ணங்கள் கிளைக்கின்றன. இலக்கியக் கண்ணாடி முன்னோர் வாழ்வுகளையும் வீழ்வுகளையும் நமக்குக் காட்டிக் கொண்டே நிற்கின்றது. 'வாழ்கின்றாய் வாழாத நெஞ்சமே வல்வினைப்பட்டு ஆழ்கின்றாய்' என்ற திருவாசகப் பகுதியும், முறை மாறி நடந்தால், 'கெடுவல் யான்

என்பது அறிக' என்ற திருக்குறட் பகுதியும் முயல்க, மயங் கற்க, விழிப்பாக நடக்க, முறையாக ஒழுகுக, தன் கேட் டுக்கும் பிறர் கேட்டுக்கும் உரியன செய்யற்க என்று நம் சிந் தனையைச் சோம்ப விடாது தூண்டிக் கொண்டே இருக்கின்றன. வாழ்தற்கு உரிய சிந்தனைகளை வளப்படுத்துவது இலக்கியம். வீழ்தற்குச் செய்யும் சிந்தனைகளில் விழிப்பைத் தருவது இலக்கியம்.

# அறுபதாம் ஆண்டு நிறைவு விழா

## *நிகழ்ச்சிகள்*

கலைக்காவலர் வேங்கடாசலனாரின் அறுபதாம் ஆண்டு நிறைவு விழா 18—10—1966-இல் சென்னையில் கொண்டாடப் பெற்றது.

சோலை என்று கருதுமாறு அமைந்த வனப்புமிக்க மண்டபத்தில் வேங்கடாசலனார் அமர்ந்திருந்தார். வைதீக முறைப்படி; சடங்குகள், தமிழும் வடமொழியும் ஒலிக்க, முறையாக நடைபெற்றன. வேங்கடாசலனாரின் அருகே அவர் மனைவி மீனாட்சி ஆச்சியாரின் பெரிய உருவப்படம் இருந்தது. மனைவி இல்லாதோர் பெண் பதுமையைப் பக்கத்துவைத்து நிறைவு விழாச் செய்துகொள்வர். இது நிழற்படம் தோன்றாப் பழங் காலத்துக்குப் பொருந்தும். உயிரோவியம் போன்ற நிழற் படம் இருக்கும்போது அதனையே அவளாகக்கருதி, அருகிருத் திக்கொண்டார் வேங்கடாசலனார். காலத்திற்கு ஏற்ப யாரும் வரவேற்கத்தகும் மாற்றம் இது.

வேங்கடாசலனார் வழங்கிய வெண்கோடி யாடையை உடுத்துக்கொண்டு அவர் உறவினர்களும் நண்பர்களும் காட்சியளித்தனர். அதுபோலவே பெண்களும் செந்நிறக் கோடியாடையை உடுத்திக்கொண்டு திருமகள் பலர் ஒருசேரக் கூடினது போலப் பொலிந்து நின்றனர்.

டாக்டர். அரசர் முத்தையா செட்டியார் அவர்களும், அவர் இளவல்கள் இராமநாதன் செட்டியாரும், சிதம்பரம் செட்டியாரும் பங்காளிகளும், ஒருங்குகூடித் தங்கள் வீட்டு மாப்பிள்ளையாகிய வேங்கடாசலனாருக்குச் சீர்வரிசை அளித்த தோற்றம் எல்லார்தம் உள்ளத்தையும் கவர்ந்தது.

மத்திய அமைச்சர்கள், மாநில அமைச்சர்கள், நீதிபதிகள், கல்வி இயக்குநர்கள், துணைவேந்தர்கள், கல்லூரி முதல்வர்கள்; பேராசிரியர்கள், அரசியல் வினைஞர்கள், பொறிஞர்கள், செய்தித்தாள் ஆசிரியர்கள், கவிஞர்கள், புலவர்கள், எழுத்தாளர்கள் தொழிலதிபர்கள், அரசியல் தலைவர்கள் எனப் பலதுறை மாந்தரும் ''திவலம் செய்வது காண்பார்கள் நோன்பு என்னை'' என்று புகழுமாறு நிறைவு விழாவைக் கண்டு களித்தனர்.

நிறைவு விழாப் பெரியவரை, உறவினர்களும்—நண்பர்களும், தொழுது வணங்கிய காட்சியும், தூய நன்னீரால் நான் முந்தி, நீ முந்தி என்று ஒவ்வொருவரும் அவர்க்கு முழுக்காட்டிய காட்சியும், சான்றேர்களே அவர் வணங்க, அவர்கள் மனமாரவும் சொல்லாரவும் வாழ்த்திய காட்சியும் இன்னும் புதுமையாக விளங்குகின்றன.

## ‘திருத்தலப்பயணம்’ நூல் வெளியீடு

நிறைவு விழாவை ஒட்டித் ‘‘திருத்தலப் பயணம்’’ என்னும் நூல் வெளியீடு நிகழ்ந்தது.

இந்நூல் 500 பக்க அளவு கொண்டது. நாயன்மார்கள் பாடிய சைவத்தலங்கள், ஆழ்வார்கள் பாடிய வைணவத்தலங்கள் வைப்புத்தலங்கள் முதலான தெய்வத்தலங்களைப் பற்றிய பல்வகைக் குறிப்புக்கள் கொண்டது. தலங்களைப்பற்றிய சிறந்த பாடல்களையும் உடையது. நூலின் இறுதியில் அக்காலத்து நாலரைக் கோடிக்குமேல் நகரத்தார் செய்த திருப்பணிகளின் விளக்கத்தையும், திருப்பணி செய்தாரின் புகழ்ப் பெயர்களையும் காணலாம்.

இந்நூலை உருவாக்கியவர் தமிழ்க்கடல் ராய. சொ. பெரும் பொருட் செலவில் இத்தெய்வநூலை வெளியிட்டவர் வேங்கடாசலனுர். சைவ வைணவத் திருத்தலங்களுக்கெல்லாம் சென்று இறைவனை வணங்கிய தமிழ்க்கடல் ராய. சொவும் கலைக்காவலர் வேங்கடாசலனுரும் ‘யாம் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்’ என்று இத்திருத்தலப்பயண நூலைத் தமிழ் மக்கட்கு வழங்கியுள்ளனர்.

நூல் வெளியீட்டு விழாவின் தொடக்கத்து, திரு. வேங்கடாசலனுர் நிறைவு விழாக் கோலத்தோடு, அனைவரையும் வரவேற்ருர். ஒவ்வொருவரும் தத்தம் வாழ்நாளில் இப்பயணம் செய்யவேண்டுமென்று ஆர்வத்தோடு கேட்டுக் கொண்டார். தலைமை தாங்கிய இந்துமத அறநிலைய ஆணையாளர் திரு. சாரங்கபாணி முதலியார் இத்தகையதொரு வெளியீட்டின் சிறப்பைப் பாராட்டியதோடு, நல்ல பாடல்கள் தொகுக்கப்பட்டிருப்பதையும் எடுத்துக் காட்டினுர். திருத்தலப் பயணத்தின் ஒரு பிரதியை அரசர் முத்தையா செட்டியார் அவர்களுக்கு முதற்கண் வழங்கினுர்.

திருத்தலப்பயணத்தின் படி வழங்கப்பெற்ற அரசர், இந்நூல் தமிழ் மொழிக்கு இன்றியமையாத நூல் என்று எடுத்துக் காட்டி, நகரத்தார்கள் தங்கள் வெளிநாட்டுத் தொழில் நன்ருக வளர்ந்திருந்த காலத்து நாடெங்கும் பலதுறையிலும் செய்த

அறங்களைப் பாராட்டினர். நகரத்தார் வாழ்வு—நாட்டுக்கு வாழ்வுதரும் என்று தெரிவித்தார். இதுபோன்ற நூல்களை வேங்கடாசலனர் மேலும் வெளியிட வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

முன்னாள் இந்துமத அறநிலைய ஆணையாளர் திரு அ. உத்தண்டராமன் அவர்கள், வாழ்த்துரை கூறும்போது, வேங்கடாசலனரின் பண்பு, திறமை, நட்பு, உயர்ந்த குறிக்கோள் முதலியவற்றைப் பாராட்டினர். அதன்பின், உரையாற்றிய தமிழ்க்கடல் ராய. சொ. அவர்கள் ''இவ்விழா ஓர் அருமையான விழா; நீங்கள் எல்லோரும் இந்நூலைப் படித்துத் தலங்களுக்குச் செல்லவேண்டுமென்பதற்காக இந்நூலை வெளியிடுகிறோம். எல்லாத் தலங்களுக்கும் முன்னொரு முறை நான் சென்றிருக்கிறேன்; இப்போது வேங்கடாசலனர்கூடச் சென்றது இரண்டாவது முறை; ஏறக்குறைய 400 தலங்களுக்கு ஒன்றரை ஆண்டுகளில் பயணம் செய்துமுடித்தோம் என்பதுகூட வியப்பில்லை. அன்பர் வேங்கடாசலனர் அதனினும் மேலாக ஒரு காரியம் செய்துள்ளார். இப்பொழுது அவர் சுத்த சைவர்; இனிமேல் அவர் புலால் உண்ணமாட்டார்'' என்று வேங்கடாசலனரின் பண்புகளைப் பாராட்டிப் பல்லாண்டு கூறினர்.

வேங்கடாசலனர், ''என்னை முன்னே வைத்துக்கொண்டு பெரியவர்கள் பாராட்டுகிறீர்கள். இப்பாராட்டுக்கெல்லாம் உரியவனாக இனிமேல் ஆக்கிக்கொள்வேன்'' என்று கூறித் தம் நன்றியைத் தெரிவித்துக்கொண்டார்.

உ

சிவமயம்

# திரு. க. வெ. சித. வெ. வேங்கடாசலம் செட்டியார்

அவர்களின்

**அறுபதாண்டு நிறைவு விழாவில் சென்னை நகரத்தார் சங்கத்தின் சார்பாக**

வாசித்தளித்த

## வாழ்த்து மடல்

---

தமிழிசைப் பாம ணத்தைத்
தழைத்திடச் செய்த வள்ளல்
அமைவுறும் செட்டி நாட்டின்
அரசர்நன் மகள்மீ னுட்சி
தமைத்திரு மணமும் கொண்ட
தக்கவேங் கடாச லப்பேர்
அமைந்தநற் பெரியார் தம்மின்
அறுபதாம் ஆண்டு நன்னுள்.

பூவினிலே மணமுண்டு; பூமியிலே
விளைவுண்டு; புனலில் வெண்மை
மேவிவரும் ஒளியுண்டு; வேங்கடா
சலமென்னும் வீரர் நெஞ்சில்
தாவிவரும் எழுச்சியுடன் கடமைபல
நன்குசெயும் தகுதி யுண்டு,
நாவுயர்த்தும் அழகப்பா கல்லூரி
ஓங்கிடவே நாட்டம் கொண்டார்.

நகரத் தார்க்கே அணியென்ன
நன்கே உதித்த மாமணியாம்!
நகரத் தார்கள் நலம்கருதி
நாளும் பணிகள் செய்பவராம்.
நகரத் தார்ஐக் கியசங்கம்
நன்கு தோன்ற உழைத்தவராம்.
புகலும் வேங்க டாசலனுர்
புவியில் நீடு வாழியவே!

பல்கலைக் கழகமதைச் சிதம்பரத்தில்,
பாங்குடனே நிறுவிமிகப் பெருமை பெற்ற
மல்லிகையின் மணம்போன்ற புகழின் அண்ணு
மலையரசர் மாப்பிள்ளை யான செம்மல்!
நல்லறிஞர் இசைப்பிரியர்! சொல்லின் வல்லார்!
நாடகத்தில் பற்றுடையார்! சைவத் தொண்டர்!
வல்லசிவ வைணவத்தின் தலங்க ளெல்லாம்
வணங்கிவந்த பேரறிஞர் வாழி! வாழி!

தம்மனைவி மீனுட்சி ஆச்சி பேரில்
தகுதியுடன் பயிலரங்கும், தமது பேரில்
செம்மையுடன் மருத்துவத்தின் மனையும் ஈந்து
சீர்மைபெறும் அழகப்பா வட்டா ரத்தை
எம்மருங்கும் ஏற்றம்உறச் செய்தார்; இராம
நாதபுர மாவட்டம் கல்வி தன்னில்
மும்முரமாய் விளங்கிடவே முயற்சி செய்த
மூதறிஞர் வேங்கடா சலனுர் வாழ்க!

எண்பதுநல் வயதான இவரின் தாயார்
இந்நிகழ்ச்சி தனைக்காணும் இனிய பேற்றை
வண்ணம்உற ஏட்டினிலே வடிக்க வேண்டும்;
மாநிலத்தோர் எந்நாளும் வழுத்த வேண்டும்
கண்ணுகத் தமிழ்மொழியைக் காக்கும் நல்ல
கவிஞருக்கும் கலைஞருக்கும் புலவ ருக்கும்
எண்ணுமல் கைகொடுத்தே உதவு கின்ற
இன்வேங்க டாசலனுர் இனிது வாழி!

புகழ்மிகுந்த வேங்கடா சலனு ரோடு
போற்றுமவர் குடும்பத்தார் எல்லாம் வாழி!
மிகவுயர்ந்து பல்லாண்டு வாழி! வாழி!
வெற்றிவேல் முருகனருள் பெருகி வாழி!
தகுதியுடன் இறைவனருட் பணியில், பெற்ற
தாய்நாட்டின் திருப்பணியில் ஆர்வம் காட்டி
மிகவுழைக்கும் வேங்கடா சலனுர் நீடு
மேதினியில் வாழியென வாழ்த்து வோமே.

அன்புள்ள,

இடம்: சென்னை — **சென்னை நகரத்தார் சங்கத்தினர்**
நாள்: 18-10-1966 — 27, பவளக்காரத் தெரு, சென்னை-1.

### க. வெ. சித. வெ. வேங்கடாசலனார்

# மணிவிழா வாழ்த்திதழ்

பாண்டி நாடே பழம்பதி யென்னும்அக்
காண்தகு நாட்டிடைக் கானாடு காத்தான்
செட்டி நாடாண்ட சீர்மிகு வேந்தன்
மட்டார் தமிழிசை வளர்த்தஎம் கோமான்
அண்ணா மலைமன்! அருங்கொடை வள்ளல்
கண்ணெனப் பயந்த கனங்குழைச் செல்வி
மீனாட்சி எனும்பெயர் மெல்லியல் தன்னை
தேனாட்சி இல்லறத் திருத்துணை யாக
விரும்பி ஏற்றநல் வேங்கடா சலப்பேர்
அரும்புக ழாளன்! அரசர் மருமான்!
மணிவிழாக் கண்டு மகிழ்ந்தனம்! வாழ்க!
அணிகொள் திருமுறை ஆழ்வார் பாசுரம்
முத்தென வழங்கும் முத்தமிழ்க்கட லொடு
முத்த. வெ. சொ.வெனும் முனிவரர் உடன்வரத்
தெய்வத் திருத்தல யாத்திரை முடித்தே
மெய்ப்பயன் பெற்ற மேதகும் செல்வா!
உள்ளதை எல்லாம் உள்ளி உள்ளி
அள்ளி வழங்கிய அழகப்ப வள்ளல்
தனக்குறும் அறநிலை தாங்கென அன்னவன்
மனக்குறை தீர்த்த மாண்புடைச் செம்மால்!
நோய்நொடி நீங்க நுந்தம் பெயரால்
ஆய்உடல் வளம்பெற அருந்துணை பெயரால்
மருந்தகம் நிறுவி வளமனை வகுத்த
அருந்தமிழ்த் தோன்றல்! அன்புடை நண்பர்
சிறுநன்றி செயின்அவர் செயல்மற வாதே
உறுமிடம் தோறும் உயர்த்திடும் பண்பா!
சீர்தன வணிகர் திருக்குலம் வாழ
ஓர்நெறி காண உழைத்திடும் தலைவா!
தென்திரு வேங்கடத் திருமால் கோவில்
நன்குயர்ந் தோங்க நன்நிதி சேர்த்தோய்!
மணிவிழாக் கண்டாய்! மனமகிழ்ந் தின்னும்
அணிபிறை ஆயிரம் கண்டுநீர் உன்றன்
பெயரர் சூழப் பெருமகிழ்வு உற்றே
அயரா தென்றும் அறப்பணி செயவே
வாழிபல் லாண்டென! வாழ்த்தி,
ஊழி முதல்வனை உள்குவம் நன்றே!

சென்னை
18—10—66

அன்புள்ள,
திருமகள் அச்சகத்தார்.
காரைக்குடி.

(ஆக்கியோர்: பூ. அமிர்தலிங்கனார், காரைக்குடி)

அழகப்பா மாதிரி உயர்நிலைப்பள்ளி அளித்த

## வாழ்த்துப்பா

1. சீர்வளரும் தமிழ்நாட்டில் செட்டிநாட்டுச்
   சீமையிலே பிறந்தமகன் சேர்த்த செல்வம்
   ஊர்வளரச் செலவளிக்கும் நாட்டுக்கோட்டை
   உயர்குடியில் பிறந்தமகன் வேங்க டத்தான்
   பேர்மணக்கப் புகழ்மணக்க அறுபான் ஆண்டைப்
   பெற்றமகன் மென்மேலும் பெருகி வாழ
   நீர்மணக்கும் திருச்செந்தூர் முருகன் தன்னை
   நினைந்துருகி வாழ்த்துவமே நித்தம் நாமே!

2. பொன்வடிவாம் மேனியிலே பொலிவின் ஆட்சி
   பூத்திருக்கும் முகத்தினிலே சிரிப்பின் ஆட்சி
   மின்னுகின்ற கண்களிலே அளக்கும் ஆட்சி
   மேனியிலோ பொன்சரிகைத் துண்டின் ஆட்சி
   நண்பகலில் தமிழ்க் கடலின் தமிழின் ஆட்சி
   நயமான பேச்சினிலே தேனின் ஆட்சி
   கண்காணு மீனாட்சி இதயத்தாட்சி
   கலையாத பேராட்சி ஓச்சி வாழ்க !

3. மறதியினை மறந்திருக்கும் மாண்பு மிக்கோன்
   மறவாமல் நண்பர்களின் பெயரைச் சொல்லும்
   திறம்கண்டு இவ்வையம் திகைத்து நிற்கும்,
   திரண்டுவரும் கூட்டத்தில் தெரிந்துகொண்டு
   மறவாமல் நமையழைத்து மற்றோர்க் கெல்லாம்
   மனம்திறந்தே அறிமுகத்தை நடத்தி வைக்கும்
   அறம்வாழ்க! திறம்வாழ்க! அன்பு வாழ்க!
   அகம்நெகிழ்ந்தே வாழ்த்துவமே! வாழ்க! வாழ்க!

4. சேர்த்தமடல் அத்தனையும் சிவப்பு நாடா
   சேர்ந்தணைக்கும் இந்நாளில் கையால் தொட்டுப்
   பார்த்தமடல் அத்தனைக்கும் பட்பட் டென்றே
   பதிலளிக்கும் பண்பாளன் இவனைப் போலப்
   பார்த்ததிலை நம்மிடையே என்ப தாலே
   பழகுதமிழ்ச் சொல்மணக்கப் பாடு கின்றோம்
   ஊர்போற்ற எம்தலைவ உவகை பொங்கும்
   ஒப்பரிய பெருவாழ்வு பெற்று வாழ்க!

5. அரியென்னும் பெருமாளுக் கிதயம் ஈந்தான்
அழகப்பர் பெருநிலத்திற் குழைப்பை ஈந்தான்
சிரிப்பதனை இதழ்களுக்கே ஈந்தான் மேலும்
சிந்தனையைச் செயல்திறனுக் கீந்தான் கண்டீர்!
தெரியாதே என்றசொல்லை அதற்கே யீந்தான்
தென்தமிழை அறிந்தோரை முதல்வராக்கிச்
சரியாகத் தமிழுக்குப் பெருமை ஈந்தான்
சரித்திரத்தில் தன்பெயரை ஈந்தான் வாழ்க!

6. காலையிலே கண்விழித்தே இரவு நேரம்
கண்துயிலும் காலம்வரை அலையைப் போல
வேலைகளும் அடுக்கிவர வேறொன் றிற்கும்
வேலைஇல்லாக் காலத்தில் உடம்பில் பாதிச்
சேலைஅணி சிவபெருமான் தலங்கள்தோறும்
செந்தமிழ்சேர் நால்வர்களின் செந்நா சூட்டும்
மாலைஅணி விழிநுதலான் தலங்கள் தோறும்
மறவாமல் சென்றிறைஞ்சும் மாண்பு வாழ்க!

7. அதற்குள்ளா அறுபதினை அடைந்துவிட்டான்!
அனைவரது நெஞ்சமுமே அடுக்கும் கேள்வி
கதரைப்போல் தலைமுடியும் வெளுக்க வில்லை
கண்களிலே கருவளையம் சுற்ற வில்லை
குதலைமொழி பேசுகின்ற குழந்தை போலக்
குந்தாமல் நாள்தோறும் ஓடி யாடி
விதவிதமாய் புதுப்பணிகள் ஆக்கும் விந்தை
விந்தையிலும் விந்தையெனில் மறுப்பார் உண்டோ!

8. திங்களுக்கு வயதுண்டா மூப்பும் உண்டா?
தித்திக்கும் தமிழுக்குத் தளர்ச்சி உண்டா?
செங்கதிர்க்குத் தேய்வுண்டா? தேதி உண்டா?
செவ்வானம் நரைத்ததென்றே சொல்வாருண்டா?
சங்கொலிக்கும் திருமாலைத் தலையில் தாங்கும்
தமிழ் ஒலிக்கும் வேங்கடமா மலைக்கு வானூர்
திங்களைப்போல் வயதில்லை. தேய்வும் இல்லை!
திகட்டாத தீந்தமிழாய் நிலைத்து வாழ்க!

9. ஓங்கி உலகளக்கும் உத்தமனின் சேரடிகள்
தாங்கிச் செயல்நடத்தும் தண்மதியே!-வேங்கடமே
செந்தமிழைப் போலச் சிறந்து வளர்ந்தோங்கிச்
சந்ததமும் வாழ்க தழைத்து!

---

இயற்றியவர்:—மா. கண்ணப்பன், பீ. ஏ. (ஆனர்சு) பி. டி.
காரைக்குடி.

உ

சிவமயம்

காரைக்குடிகாத்தான் டவுன் கிளப்பு உறுப்பினர்கள்
கிளப்பின் தலைவர் உயர்திரு.

## க. வெ. சித. வெ. வேங்கடாசலம் செட்டியார்
## அவர்கட்கு உவந்தளித்த

# மணிவிழா வாழ்த்து

**அளப்பில் திறம்படைத்த கிளப்பின் தலைவ!**

நம் டவுன் கிளப்பு 1937-ல் தோன்றியது. தோன்றும் போதே தங்களைத் தலைவராகப் பெரும் பாக்கியம் கிடைத்தது. தங்கள் தலைமையில் இம்மன்றம் பெற்ற நலன்கள் பல. நம் மன்றம் ராஜாசர் அண்ணாமலை செட்டியார் அவர்கள் நன் கொடையாலும், ராஜாசர் முத்தையா செட்டியார் அவர்களால் தனிக் கட்டிடம் பெற்றிருப்பதும், பலவூர் அன்பர்கள் உறுப் பினராகச் சேர்ந்திருப்பதும், பொழுதுபோக்கு விளையாட்டு வசதிகள் நிறைய இருப்பதும் தங்கள் முயற்சியின் பயன். உறுப்பினர்கள் ஒருகுடும்பத்தினராய்க் கலந்து பழகுவது தங்கள் அன்பின் விளைவு. மன்றம் வெள்ளிவிழாக் கொண் டாடி மேலும் வளர்வது தங்கள் தலைமைப்பணியின் சிறப்பு. காரைக்குடிகாத்தான் ஊராட்சித் தலைவராகவும், கூட்டுறவுக் கழகத்தின் தலைவராகவும் அமர்ந்து நலம்பல ஆற்றியதை நாம் மறவோம். ஊருக்கு உழைக்கும் உத்தமராய் மணிவிழாப்பேறு எய்தும் தாங்கள் இன்னும் பல்லாண்டு வாழ்ந்து 1987-இல் கிளப்பின் பொன்விழாவைச் சிறப்பாக நடத்திவைக்கவேண்டும் என்று வாழ்த்துகின்றோம்.

**ஓங்கு புகழ்கொண்ட வேங்கடாசல!**

தாங்கள் இளம் வயதிலேயே வடக்கு இராமநாதபுர மாவட்டக்கழகத்தின் தலைவராய் வீற்றிருந்து ஆட்சி நடத்தி மக்கள் நலம் பேணியதும், இராவ்பகதூர், திவான்பகதூர் என்ற அரசு விருதுகளைப் பெற்றதும், நாடு உரிமை பெற்றபின்

அவ்விருதுகளைத் துறந்ததும், பல்வேறு கழகங்களில் உறுப்பின ராகவும் தலைவராகவும் இருந்து பலதுறைத் தொண்டாற்றியதும், இப்பணிகளால் தாங்கள் ஓங்குபுகழ் பெற்றதும் எங்கள் நினைவுக்கு வருகின்றன. 'கல்வி சிறந்த தமிழ் நாடு' என்றார் பாரதியார். தமிழ்நாட்டின் கல்விப்பரப்பில் தங்களைப் போன்ற கல்வித் தொண்டர்களுக்குப் பெரும் பங்கு உண்டு. ''வள்ளல் அழகப்பா கல்லூரிகளைப் படைத்தார்; செயலர் வேங்கடாசல னார் அவற்றைக் கட்டிக் காத்தார்'' என்று ஊரும் உலகமும் புகழ்வது எங்கள் செவிகளில் இனிமையாக ஒலிக்கின்றது. பணம் சேர்க்கும் எண்ணத்திலும் பணிசெய்யும் எண்ணமே உங்களிடம் மிகுந்திருப்பதைக் காண்கின்றோம். தனக்கென வாழாப் பிறர்க்கு உரியாளராகிய தங்கள் மணிவிழா நாங்கள் எல் லோரும் கண்டு களிக்கும் ஒரு அணிவிழாவாகும்.

**மணிவிழாக் காணும் அண்ணாமலை மருக!**

மலைபோல் வரும் பிரச்சினையையும் நொடியில் தீர்க்க வல்ல மதிநுட்பம், எதனையும் திட்டமிட்டுக் காலத்து முடிக்க வல்ல செயலாற்றல், ஒல்லும் வகை யார்க்கும் உதவிசெய்யும் அறநெஞ்சம், உள்ளதை உள்ளபடி சொல்லும் அஞ்சாத் துணிவு, பழகினோரைக் கைவிடாப்பாசம், சமூகநலம் பேணும் இனப்பற்று என்ற பண்புகளுக்கு உறைவிடமாகவும் நிலைக்கள னாகவும் தாங்கள் விளங்குகின்றீர்கள். நாயன்மார் ஆழ்வார் கள் பாடிய திருத்தலங்களுக்கு எல்லாம் சென்று பாசுரங்களை ஓதித் தொழுத தெய்வப்பற்றும், அரியக்குடிப் பெருமானை அல்லும் பகலும் நினையும் அடிமைப்பற்றும் தங்கள் சிறந்த வாழ்வுக்கு நல்ல எடுத்துக் காட்டுகள். தெய்வத்திருவருள் நிறைந்த அன்பினராகிய தாங்கள் மக்களோடும் சுற்றத்தோ டும் பல்லாண்டு பல்லாண்டு வாழ்க என எல்லாம் வல்ல இறைவனை வணங்குகின்றோம்.

அன்புள்ள,

**கானாடுகாத்தான் டவுன் கிளப்பு உறுப்பினர்கள்**



பெண்டிர் மங்கலக் கோலமிடல்



தாயாருக்கு ஆடைதந்து ஆசிபெறல்



மருமகள் திருமதி சீதாலட்சுமி சிதம்பரம் வீணை வாசித்தல்

மணிவிழாவுக்கு வருகைதந்து வாழ்த்திய

பெரியோர்கள் ; பிரமுகர்கள் ;



கோமல் சேஷாத்ரி ஐயங்கார்
ஸ்ரீ அனந்தராம திட்சிதர்
ஸ்ரீ நாராயண திட்சிதர்



தமிழ்கடல், ராய. சொ.
திரு லோகநாதமுதலியார்,
திரு பி. கோபால் ரெட்டி,
திரு கருமுத்து தியாகராச செட்டியார்

# மங்கல நீராட்டல்



கருமுத்து தியாகராச செட்டியார் அவர்கள்



செட்டி நாட்டு அரசர் அவர்கள்



ராணி மெய்யம்மை ஆச்சி அவர்கள்



மருகர் முத்து அவர்கள்

# மங்கல நீராட்டல்



திரு ஏ. எல். இலட்சுமணன் அவர்கள்



திரு பி. கோபால் ரெட்டி அவர்கள் வாழ்த்துதல்





தமிழக முதல் மந்திரியும் அவரது மனைவியாரும்

# மங்கல நீராட்டல்



தமிழக மந்திரி மன்ருடியார் அவர்கள்



தமிழக மந்திரி இராமையா அவர்கள்



இராமநாதபுரம் ராசா அவர்கள்



திரு பி. டி. ராசன் அவர்கள்

# மங்கல நீராட்டல்



மைத்துனர் திரு ஆர். இராமனுதன் அவர்கள்



திரு ஏ. எம். எம். அருணுசலம் அவர்கள்



திரு டி. டி. கே. அவர்கள் வாழ்த்தல்



திரு டி. எஸ். சந்தானம் அவர்கள்





மூத்தமகள் திருமதி மீனாட்சி அருணாசலமும்—மகனும், மருமகளும் மங்கல நீராட்டல்

மணிவிழா நாயகர் குடும்பம்



அழகப்பா கல்வி அற நிலைய டிரஸ்டிகள் அன்பளிப்பு



அழகப்பா கல்வி அறநிலைய டிரஸ்டிகளுடன்



நகரத்தார் ஐக்கிய சங்கத்தார் பொன்னுடை
போர்த்தி வாழ்த்துமடலளித்தல்



சென்னை நகர நகரத்தார் வாழ்த்துமடல்
அளித்தல்



''திருத்தலப்பயணம்'' நூல் வெளியீடு
மாநில அறநிலையக்காப்பாளர் திரு சாரங்கபாணி முதலியார் அவர்கள் வெளியீட்டுரை



செட்டி நாட்டு அரசர் ''திருத்தலப்பயணம்'' நூலினைப் பெற்றுக் கொள்ளல்



நன்றி நவிலல்



பொன்னாடையுடன்



திருவண்ணாமலை ஆலயப் பிரசாதம் பெறல்



மைத்துனர் அரசர் விடைபெறுதல்



மைத்துனர் திரு மு. அ. சிதம்பரம்
விடைபெறுதல்



தாலி கட்டுதல்




திருத்தலப்பயணக் கார் தோற்றம்



உட்புறம்

